சிவமயம்.

# அறிவிப்பு.

---

இந்நூற் பெறவேண்டுநர் வளவனூர்க் குமாரபுமடாலயத்திலும், ஷெயூரில் வசிக்கும் பொய்கைப்பாக்கம் ம-ள-ள-ஸ்ரீ அப்பாசாமியுபாத்தியாயரவர்களித்திலும், சென்னை செங்காங்கடை நாட்டுப்பிள்ளையார் கோயிற்றெரு ௧௮-வது கதவிலக்கமுள்ள வீட்டில் ஸ்தாபித்திருக்கும் ஆதிகலாநிதி அச்சுக்கூடத்திலும் விலை அணா ௮ கொடுத்துப் பெற்றுக்கொள்ளலாம். (வெளிதேசத்தார் தபாற்செலவுடன் அனுப்பவேண்டும்.)

உ

குருவேதுணை.

# சாத்துகவிகள்.

இந்நூலாசிரியருள்ளத்திற் றமதாத்மார்த்தமூர்த்தமாய்
விளங்குகின்ற

## ஸ்ரீமத் சண்முகசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளியன.

---

*தனனதான தானத்தனன தனதனந்தானனா.*

அசுவமேதவேள்விப்பரியை யரசர்கண்காணல்போ
லளவிலாதமேன்மைப்புலவர் பெரிதுகொண்டாடவே
விசுவமீதிநாளிற்றிகழ்வ தருணலஞ்சேர்வுறு
விரதர்பாததூளிப்பெருமை கமழ்வதன்போர்கிளை
முசுவைநேர்விகாதச்சமய மதிலமூநதாதகோர்
முனிநாதன்வேதத்தெழுந னெறிகளுந்தோய்வதே
பசுவிறுவன்மாலிற்புனையு முனிவனெண்கால்கொண்மா
பறவைபோல்கௌமாரத்தலைவ னொலியலந்தாதியே.

## நேரிசைவெண்பா.

ஒன்றேநீ யென்றோர்ந் தொலியலந்தா தித்தமிழா
லின்றேத்தி னுனுங் கிதஞ்செய்யு—நின்றே
யலகிலுல கென்று மமைத்தளித்துப் போக்கி
யிலகுபொது வானதெய்வ மே.

---

சிவமயம்.

சோழவந்தானூர்க் கிண்ணிமங்கலமடம்

அருளானந்தசுவாமி ஆதீனம்

## ஸ்ரீமத் கந்தசாமிசுவாமிகள்

அருளிச்செய்தன.

---

*தனனதனதந்தான தனனதனதனனா.*

குருபதமெயென்றேதுசமரசவாழ்வினர்தாய்
கொலைபுலையுறுந்தீயர்குடிகெடவேமுயல்கோ
வருணையினிடஞ்சாருவெனமுனைநாளமர்வோ
னயன்மறைசொலுந்தூயசமயமெலாமுடையோன்

மருமலிவுறும்பானல்வனை தருமாலிகையான்
மலயமலையின்சாரன்மருவுநெல்வேலியுளான்
முருகனுதவும்பாலனெனநிகழ்மேன்மையினான்
முதலொலியலந்தாதிநயமுணர்வார்சிலரோ.

## கட்டளைக்கலித்துறை.

வலிநலிந்தியார்க்கும்வருக்கரிதாயவகையினைக்கண்
டலிமுதன்மூன்றற்குமப்பாலுமொன்றருள்சுரந்து
மலிவுறுவார்*தண்டபாணிவரைந்துவழங்கியபின்
னொலியலந்தாதியென்றோர்பிரபந்தமிங்கோங்கியதே.

---

சிவமயம்.

இந்நூலாசிரியர் மாணாக்கர்களிலொருவராகிய
திருநெல்வேலி

## தி. செ. சித்திரபுத்திரபிள்ளையவர்களியற்றியன

---

தனனதனதானதன தனனதனதானதன தனனதனதானதனனா.

உலகமுதலாமளவில்பொருளுதவுநான்முகவ
னுரிமைமகவாகிவருவோ
னுமையவளையீசர்புரிமணமுடியுமாறுதிக
ழுயர்பொதியைமேவிவளர்வோன்
பலகலையினாடினியதமிழருமையாகுமெனல்
படியினருநாடியுயவே
பயில்விதியினாலுதவிர்சதமெனவலோர்களுணர்
பனுவல்கள்கிரீடமிதுவே
கலகமிடுநாவலவர்மனமிகவுநாணியொரு
கனவிலுமெனாதவலிதோய்
கவியினதுசீர்மருவுமொலியன்முடிவாதியெனொர்
கடலினையிநாளுரைசெய்தான்
திலகமெனமாதவருமுயிர்வதைசெயாதவிர
தியர்களுமெநாளுநுவல்வோன்
சிவனரிகணேசனுமைபரிதிகுகனெனவகை
தெளிமுருகதாசமுனியே.

---

* தண்டபாணிவரைந்தென்றதற்குத் தண்டந்தரித்தகை யெழுதி யென்றுங் கொள்ளற்பாலது.

தந்ததனதானதன தந்ததனதானதன தந்ததனதானதன ௫.

சந்தவரைமேவியுயர் செம்புகதியோடிணைபி
றண்டமிழுமினியருள்வோன்
சம்புநிகரானமுனிவன் புகலுநூலினிடை
தங்கொளியலானதினையே
இந்தவெனவாமொனந்துடையமால்பெரிய
சிங்கமிசையேறிவருவாள்
செங்கதிர்கணேசன்முருகன்குருவுமானவொரு
செம்பொருளின்மீதுரைசெய்தான்
வந்தபடிபேசுமடமிஞ்சுமடியேனுமுய
வண்கமலபாதமணிவோன்
வண்டர்குடிகேடுபுரிதண்டமுடன்வேல்கொளொரு
வன்கருணையேவடிவினு
ளிந்தவுலகூடுவளர்கின்றவர்களியாவருக
வின்பமுறுமாறுமுயல்வோ
னெங்குநிறைவானபரநங்குருகனென்றுமொழியு
மெங்கள்குருநாதமுனியே.

---

தன்னதந்தனனதன தன்னதந்தனனதன தன்னதந்தனனதன ௬.

பொன்னிசெந்தமிழ்பொருநைநண்ணியன்றுதவியுயர்
பொன்விலன்றனைநிகருமோர்
புண்ணியன்பொதியைவளரண்ணறந்திடும்விதிகள்
புன்மையன்றெனநுவல்வலோர்
சென்னிதுன்றிடுபனுவல்வெம்மைநெஞ்சறுகவிஞர்
சென்மமொன்றியசனியிதே
சின்னதன்றெனமலைவொடெண்ணிநொந்தயரவளர்
திண்ணமிஞ்சொலியலினையே
யன்னியம்படுசமயரன்னிலுங்கொலைகொடிய
தம்மவென்பவரையகலா
தங்ஙனந்திகழுமொருசின்மயன்கழலின்மிசை
யண்மைகொண்டினிதுரைசெய்தா
னுன்னிடும்படியுலகர்நன்மையின்றியவுணவு
முண்ணல்கண்டுளமறுகுவோ
னுண்மைதந்திடுமிணையில்வண்ணவண்டமிழ்விதிசொ
லொண்மைதங்கியமுனிவனே.

சிவமயம்.

வளவனூர்க்குமாரபுரிவாசம் பொய்கைப்பாக்கம்

## அப்பாசாமியுபாத்தியாயரவர்கள்

இயற்றியன.

---

தந்ததானதன தந்தனதனனா.

இந்தநாள்வரையி லெங்கினுமிலதா
யின்பநீடுறுமெ ணெண்கலையுளதா
யந்தமாநிபுணர் வண்பெருகவியா
றைந்ததாரொலியல் விண்டனனுலகூ
டெந்தநாவலர்க ளும்புகழ்ந்தகையா
னெங்களாறுநெறி யுங்கொளுநிலைதோய்
சந்தவாரிதிநெ டுங்கழுவனமவாழ்
தண்டபாணிய னெனுஞ்சரபமதே.

அறுசீர்விருத்தம்.

சீரினுயர்பிரபந்தங்களுக்கெல்லாமகுடமெனத்திகழ்ந்தே யோங்கு, நேரினுயரொலியலந்தாதிகளிலெண்ணெண்கலைத் தலைமைநிகழ்த்தினனால், வேரினுயர்சந்தவரைக்குறுமுனியே யெனப்புலவர் விளம்பத்தோன்றிப், பாரினுயர்நெல்வேலித் திருப்புகழோனெனப்பெரும்பேர்படைத்துளானே.

---

சிவமயம்

திருமயிலை-வித்வான்

## சண்முகம்பிள்ளையுவர்களியற்றியன.

---

பொன்பூத்தபுரிசடையெம்புராணன்வேய்வயிற்றோன் றும்பொருவில்சீர்த்தித், தென்பூத்தநெல்லைவருமெழிற்றண்ட பாணியெம்மான்றிறத்திறோர்ந்து, மன்பூத்தவறுசமயப்பிண க்ககலுநெறிமரபின்வயங்கநாடிக், கொன்பூத்தவேற்கரத்தெ ங்குகனருளாலொருநூலைக்குயிற்றினனால்.

அன்னநூலிதுகாறுமருந்தமிழிற்குரவுபூண்டவரின்மே லோர், பன்னரிதாயொலியலந்தாதியெனநிலாய்மலைப்பப்பறம் பினென்றுங், துன்னியமாமுனிவனிவன்றானேயென்றிடுந் தோற்றந்தோற்றிநாளு, மென்னனையார்கற்றிறும்பூதுறச்செ றிந்தெனினிதன்சீரியம்பற்பாற்றே.

---

சிவமயம்.

அஷ்டாவதானம்

## பூவை-கலியாணசுந்தரமுதலியாரவர்களியற்றியன

கலிநிலைவண்ணத்துறை.

தந்ததானன தந்ததானன—தனதானா.

சந்தநாவலரென்றபேரினை யுடையோரோ
தங்களுளினிவிந்தநூல்விதி யிலையேயோ
விந்தநாளினிவிங்குவாழுறி னைகையேயா
மென்றுவானிடைசென்றுவாழ்வது மிதமேயாம்
விந்தமால்வரைகுன்றநீடுகை முனிவோன்வாய்
விண்டநீதியணைந்துளாரிதன் விதமோர்வார்
தந்தமாவடர்சிங்கமேல்வெகுள் தகமேநேர்
தண்டபாணிவிளம்பல்பாவலர் தவமாமே.

வெண்பா.

தண்டபா ணிச்சரபஞ் சாற்றொலிய லந்தாதி
கண்டபின்னர் வாணி களிப்புற்றாள்—வண்டமிழ்ப்
பாடிடலாஞ் சந்தமெனும் பாவலவரி யாவரும்வாய்
மூடியொல்க லுற்றார் முகம்.

———

சிவமயம்.

அஷ்டாவதானம்

பூவை. கலியாணசுந்தரமுதலியாரவர்கள் மாணாக்கர்

## பல்லை-சண்முகசுந்தரமுதலியாரவர்களியற்றியது.

தனனதானன தனந்தானதன தனனதானன தனந்தானதன
தனனதானன தனந்தானதன—தனதானா.

திருமின்வாழ்வுறுமணஞ்சேர்கமல
மலரும்வாவிகள்வளந்தேவயல்கள்
செறிவதோடுவிணளந்தேபொழில்கள் கலைபோலே
திகழ்நெல்வேலியில்வருஞ்சாமியொரு
முருகதாசகுரவன்பாவலவர்
தினமுமேவழிபடுஞ்சீர்வளமை பெறுவானோர்
பரமனேபலர்சொலும்பான்மையுறல்
சரதமாமெனவுணர்ந்தார்வமொடு
பரவுசீலவிரதன்றாரணியி னுயிர்மீதே

பரிவினலவைசுகந்தோய்தருதி
கருதியேயுயர்பரந்தாமனிகர்
பகரவேமுயல்பவன்றாய்மைதரு முழுநீரே
டருள்விலாசமணியின்றுழ்வடமு
மொருகலாடையும்வனந்தேதிகழு
மணியினனிசைமிகும்பாமகளி னருளாலே
யருமையாமொலியலந்தாதியினை
நயமெலாமுறநவின்றனலகி
லதனைநேர்பெறுதலின்றேவிதிசொன் முதுநாறோர்
தெருளினோர்களுமொழிந்தேசரட
மெனநிலாவிலரகஞ்சேர்கவிஞர்
செயவொணாதவொடிணைந்தோதிடுவ தெவரோயோ
தெரிகிலேனதனயந்தானரிதி
லரியதாமெனிலெனென்றேதமுறு
சிறியனடியுளநிந்தேமகிமை புகல்வேனே.



சிவமயம்.

அஷ்டாவதானம் - பூவை. கலியாணசுந்தரமுதலியாரவர்கள்
மாணாக்கர்

## காஞ்சி-நாகலிங்கமுதலியாரவர்களியற்றியன.

தனனதானன தனதனதனன—தனதானா.

பொதியைமேவியகுறுமுனியுதவு தமிழாலே
புனிதமார்பலகவிகளுமுலகி லிடுவோனே
பதிதரான்மலிகொலைவினைகளைய முயல்வோனே
பரவுமாதவநிதியெனநிலவு குரவோனே
ததியிதாமெனவுனதிருகமல பதமீதே
தளிரைநேரிளமொழிகொடுதுதிகள் புரிவேனே
முதிருமாசையெய்தியபடிமகிழ வருள்கூர்வாய்
முருகதாசனெனொருபெயர்மகிமை வலிதாமே.

நேரிசைவெண்பா.

கலியதனைச் சீறுங் கவின்முருக தாச
னொலியலந் தாதியினை யோதில்—வலியுண்டாஞ்
சந்தமெனும் பாவுக்குச் சாருமி லக்கணமாம்
பந்தமெனு நோய்போம் பறந்து.



சிவமயம்.

அரன்வாயல்-அப்புப்பிள்ளையவர்கள்குமாரர்

# வேங்கடசுப்புப்பிள்ளையவர்களியற்றியது.

தனனதனதான தனதனந்தான
தனனதனதான தனதனந்தான
தனனதனதான தனதனந்தான—தனதானு.

புவிமகளினுடையெனவிளங்கோத
மெறிதிரைகண்மோதுமெயிலின்மஞ்சேறு
புகழ்கொளலைவாயிலமர்குகன்சேய முகமாவாழ்
பொருளின்வகைகாணஅறியசெந்தேனு
மமுதுகனிபாகுமிணையிலென்றாசு
புலவர்குழாநாடியநுதினம்பாடி மகிழ்கூர்வா
னுவமையறுவேதநெறிவளர்ந்தேத
மறநெறிகள்பாறவுயிர்கடுன்போட
வுலகிலருளாடல்புரிதிறன்கூடும் விழைவாலே
யுசிதவணிநீடுபலவணஞ்சேர
வறுபதொடுநாலுகலைகளொன்றாகி
யொளிர்கவியையாறிறெலியலந்தாதி யெனுமாநூல்
செவியுறுவனுவுமுளமுமின்பார
மயிலிறையுமீடிலரியதென்றோகை
செறியவுமிராறுநெறிகளும்பேணு முகில்போலே
திசைமுழுதுமேவியிசைமலிந்தார
வுதவினைநிஞதுபுலமையின்சால்பு
சிறுமதியினேனுமினிதுகொண்டாட லெளிதேயோ
கவிவகைகளுனுமலைவதின்றாக
வருணகிரிநாதனெனவிருந்திறில்
கவிஞர்குலதீபமெனவருந்தீர வளர்நீர்தோய்
கவினுறுநெல்வேலிநகரிலன்பாளர்
துதிமுருகதாசவனகநெஞ்சான
கமலமகலாதகருணையெஞ்சாத பெரியோனே.

சிவமயம்.

அரன்வாயல்-அப்புப்பிள்ளையவர்கள்குமாரர்

## அ. தங்கவேலுப்பிள்ளையவர்களியற்றியது.

தனதனந்தான தய்யதன தனனதன தானதன—தனதானா.

மருவுசந்தாதிமைதவழுமணிகொடியர்வானமிசை
வளர்தருஞ்சீர்மைமல்குதனிமலயமதிலேதமறு
மனதிலன்பாருநல்லதவர்பெரிதுபுடைசூழ்தரவி
ரவிபோலே
வதனமைந்தாருமொள்ளியன்மெயருள்கொடுநிலாவுகுறு
முனிவன்முன்போதிவையமதினிறுவவளர்தூயதமிழ்
மணமுணர்ந்தார்களில்லையெனவுளமதனிறுடியரு
ளியதாலே
திருவளங்காணுநெல்லைநகரதிலுதயமாகியெழி
லுருவுடன்பேர்கொடெய்திபிவணுவல்பனுவலாருமிது
திறமறிந்தியாவர்சொல்லவலரிலையிலையெனுவறிஞர்
மகிழ்வாலே
தினமுநண்போடுசெவ்வியநினதுமகிமையோதவறு
சமயமுங்கூறுமெல்லவனைமதியணியும்வார்சடைகொள்
சிவனையைங்காதைவல்லியுறழ்கவுரியினைமாயவனை
மதமாநே
ருருவியன்றேயுமையனைவிணவர்கள்சிறைநீரவென
வருநலஞ்சேருமல்லன்மதகளிறனையசேவகனை
யுவகைகொண்டியாவரொவ்வுருவொடெணினுமதுவாகிநன
வினுநேரே
யொளிருமொன்றெனதெய்வமதையுணருமதுபூதிநிகழ்
சமரசங்கூடுமுள்ளமொடுமதுரமதுவாழிநிக
ரொலியலந்தாதிவிள்ளுமுதுபுலமையெனும்வீறுபெறு
முனிவோனே
கருவிலொன்றுமனுய்கையருள்பொடியணிகலாடைமணி
வடமுடன்பேசுசைவநிலைவளருமடையாளமொடு
கருணைகுன்றுதவள்ளலெனவருமுருகதாசநினை
மறவேனே
கமலமென்பூவில்வைகுதிருமகளருளும்வேதமுத
னவில்பெருஞ்சீர்கொள்வெள்ளைநிறமகளருளுமாசுதவிர்
கதிபெறுஞ்சீலருள்ளுறவுமுறவருள்செய்தாளவினி
திசைவாயே.

சிவமயம்.

விருத்தாசலம்-தியாகராஜக்கவிராயரவர்கள்குமாரர்

## கலியாணசுந்தரம்பிள்ளையவர்களியற்றியன.

நேரிசைவெண்பாக்கள்.

சந்தப்பாவர்க்கமெலாஞ்சாரொலியலந்தாதி
யிந்தப்பார்தன்னிலியம்பினான்—னந்திமுக
மைந்துடையார்தஞ்சேயருண்முருகதாசனென்னு
மைந்துடையானன்குமதித்து.

அஞ்சேலுண்கண்ணுரவாவகலுமாக்கமுற்று
மெஞ்சாகுருவருளுமெய்துமே—நெஞ்சே
வெருட்டண்டபாணியஞ்சவேலவனைப்போற்றுந
தெருட்டண்டபாணிபதஞ்சேர்.

சிவமயம்.

ஆரியர்

## கா - ஷடாக்ஷரப்பிள்ளையவர்களியற்றியது.

தனதனதத்தன தானனதனதன.

அருளுறுசட்சமயாதிதமவையது
மறுபதுமுப்பதுமாறிடமிசையது
மடிசதுரத்துநலுலதுபலவிசை
யதுகலைவைப்பதுபால்வணமொளிர்வது
தெருளுறுமுத்திகையீறுமுதலிலது
திருவருளுற்றொளிர்சீர்கிழவொனுமெய்
செறியவுரைத்திடுநூலொலியலைவழி
தெரிதரவைத்ததுசேர்காநெலியென
பொருணிறையப்பனுடாயுமிவுலகமுய்
புரியவியற்றியமாதவமெனமிகு
பொழிதருமற்புமொழிமரியொடறிவரு
புகழ்பெறுசித்திபலாயிரமுடனனி
திருவுருவுற்றொளிர்சிற்றிகழுயில்பெறு
சிவகுருபொற்பதமாமலர்முடிபுனை
திகழ்செய்திருப்புகழ்சாமிசுமொமரிரு
டிரியவுரைத்தனர்சீரடிதுணையதே.

சிவமயம்.

பொய்கைப்பாக்கம் - சின்னையவுபாத்தியாயர் பௌத்திரரும்
வைத்தியநாதமுதலியார் புத்திரருமாகிய

## பொ. சுப்பராயமுதலியாரவர்களியற்றியது.

---

நேரிசையாசிரியப்பா.

சீரார்வலம்புரிசெறிபாஞ்சசன்னியங்-கூராராழியாதியகொண்டு, பாரார்கலையிற் பரந்தபரவையி - லேரார்மாசுண மென்னுமணையின், கண்ணினிதமர்ந்துகாவல்செய்கமலக் - கண்ணனுந்திக்கடிமலர்ப்பொகுட்டி, லிருந்தவத்துதித்தவியல்புடைப்பிரமன்-வருந்துதலின்றிவளம் படவமைத்த, வரும்புவியதனிலணிநவகண்டத்துட்-பெரும்பயனல்கும் பெற்றியதாகி, யொப்பறுகுமரிகண்டத்துளதாய்த் - தப்பறுமீனவன்றண்ணியநாட்டின், வரையிடையுதித்துவரையளவற்றுத்-தரைமுழுதேத்துந்தன்மைத்தாகி, மணியுமகிலுமாசறுதேக்கு - மிணையில்பல்பொருளுமேந்திக்கீழ்த்திசை, தாக்கியொளிருந்தாம்பிரவன்னி- தேக்கியொழுகுந்தீம்புனல்வளத்துப், பங்கயமாம்புலும்பன்னிறப்புட்களுந் - தங்கியவளியினந்தங்கும்பூம்பொழில், வெங்கதிர்காலும்வேனிலதனிலு-மெங்கணுமமுதமீயுஞ்சுரபிக, ளரிகரப்பிரமராதியானோர்களுந் - திரிபிலாதீசனைத்தினந்தொழுநெல்லைத், தாயுந்தந்தையுந்தவஞ்செய்பலத்தாற்-றூயசேயாய்த்தோன்றிசுகுண, னற்றவமெல்லாநயந்துகலந்தொளிர-பெற்றுப்பொலிந்தபேரருள்வடிவ, னெழுத்துமுதலியவிலக்கணமாய்ந்து - பழுத்தவுள்ளம்பதிதருமுனிவன், றண்டொடுபொலிதருதடக்கைச்சரப-மெண்டிசையெங்குமெறிக்கும்வேலோன், கொல்லாவிரதங்குவலயத்துள்ளா - ரெல்லாங்கொள்ளற்கேமிகமுயல்வோன், றிருப்புகழ்முருகதாசனென்றும் - பொருப்புறழ்நாமம்புனைதருபுனிதன், புலவர்தம்மரபினர்போதப்போற்று-நலனுடைத்தாகிநறுந்தமிழ்பிறந்த, நாண்முதலொருவருநவிலாதாய - மாணுடைப்பெருந்திறம்வாய்ந்தவயங்கு, மொலியலந்தாதியொன்றுரைத்தான் - மலியருட்டிறத்தின்வண்மைதோன்றிடவே.

வேலுமயிலுந்துணை.



உ

குருவே துணை.

# ஒலியலந்தாதி.

## காப்பு.

*தனதனந் தானதய்யத்—தனதானா.*

விழிகள்கண் டார்வமெய்தெற் கதிரோனே
விடையில்வந் தியாவுநல்கத் தருதேவே
கழிபெறுங் காமர்வல்லிக் கொடிபோல்வாய்
கருணைகுன் றாதசெல்வத் திருமாலே
பொழிமதம் பாயுமல்லற் களிறனாய்
புலவர்கொண் டாடும்வள்ளற் குமரேசா
வொழிவிலொன் றாயதெய்வப் பொதுவாழ்வே
யொலியலந் தாதிசொல்லத் தருவீரே.

## நூல்.

*தனதன தனதன தனதன தனதன*
*தனதன தனதன—தனதானா.*

திருவருள்வலிபெறு சமரசநிலையினர்
செழுமலரடிதரு துகள்போலே
திறமுறுதுணைபிறி திலையெனமுடிமிசை
தினமதையிடுதவ முலையாதே
செறிமயல்களைதரு குருமொழியினையிகழ்
திருக்குடையவரொடு பழகாதே
செகமுழுதினும்வெயி லுமிழ்பரிதியினெதிர்
திடமொடுதொழுதெழல் பிழையாதே
சிறுகொதுகதுசிறை முறியினுமயர்வொடு
சிவசிவவெனுமொழி மறவாதே
சிலையினவதிபதி தருமகடிருமக
டெளிவுறுகலைமகண் முதன்மானார்

திரண்முழுமையுமென துருவெனநுவல்பரை
செயலுயர்வெனுமுணர் வழியாதே
திகிரிவெள்வளைபுனை கரமுரகரிபெறு
செயமிகமொழிதகை நழுவாதே, (௬)

தினமவைநணிதரு மவர்பகைகளைதரு
திரிவிழிமதகளி றதனாலே
திரையறுபாகதி வரைபெறலெளிதென்மெய்
திகழ்தவமுனிவரை யிகழாதே
சிகிமிசையயில்கொடு பலபலமலைமிசை
திரிதருமுருகனை மிகநேர்வார்
தெருண்மலிதமிழ்நய மறிதருபுலவர்கள்
சிலர்பெறுபுகழ்விழை வொழியாதே
திதிதருபுதல்வரை யனையர்சொல்வழிபுகு
திருடரையுறவென மதியாதே
செழிநிணமொழுகிய பறிதலையமணர்கள்
சினவியகுணமொடு பகர்நூலே
திரமெனவளவறு மகிழ்வுறுகொடியவர்
சிதைவுறமுனிதலின் மெலியாதே
சிதறியமலர்பொலி தருநிழல்பெறவுயிர்
செறுதலுமிழிவெனல் கடவாதே, (௭)

மருமலர்வகைகளி னரசெனுமதன்மிசை
வதிதருவிதிதரு மறையூடே
வழுவறுநெறிவகை தெரிதருபெரியவர்
மகிழ்வுறுதொழில்களின் முயலேனோ
மனிதனில்வடிவுள கடவுளெனிசைகொடு
மகிதலமுய்யும்வகை புரியேனோ
மலிதருபகைபெறு சமயர்களனைவரும்
வழிபடுபொதுவனின் மிளிரேனோ
மறிகடனடுவளர் கொடியரையடியொடு
வளிதருமநுமனி லடரேனோ
மலயமதுதவிய தமிழ்கொடுதுதிமிக
வனைதருசதுரரி னுலவேனோ
மணிவடமொழிவிதி யமைதருசுவடியுண்
மலினமில்குறிகட மணிசீர்சான்

மதியுறழ்கலைமக ளொடுமுனமிகலிவெல்
வலிபெறுதவசியொ டிணையேனோ(வஹூ)
வகுளமென்மலர்புனை குழலியொடுறைசெயும்
வயிணவர்பதின்மரு ளமையேனோ
வறிதுருடறிபல கனிதரவருள்கிழ
வனிதைசொல்விதிவழி நடவேனோ
வளமுறுபொதியையி லமர்குறுமுனிசவை
வயினுறுபெருமைய மடையேனோ
மனதறியநுபவ நிலமிசையவிர்தலின்
வசைபகர்பவர்குலம் வெருளாதோ
மரையமுயல்பசு வனையநலுயிர்களும்
வதைபடநினைநகர் கொடியோர்தா
மழைமுகில்வெருளுற வருபனியிடைபடும்
வனசமதெனமுழு தெரியாரோ
மழவிடைகருடனொண் மயிலனையவைமிசை
வரவுனதிருவுள மிசையாதேன்
மடமையினுயர்வுறு மெனதினமனையமெய்
வடிவுகொள்குருவென வருவாயே, (௨)

பருவதமுழுதலை கடன்முழுதவைபுணர்
படிமுழுதுதவிய முதியோனே
பலபலவுயிர்களு முணவுணவுதவிசெய்
பரிசுறுகரமிசை யுடையோனே
பகர்பொருண்முழுமைய மறைகொடியிடைபொடி
படவடும்வலியொடு நிகழ்வோனே
பதுமனையனையவ ருணர்வொளியினுமிருள்
படர்வுறவொருதினை யிடுவோனே
பகல்வரின் [illegible]
பதவியிலமையவு மருள்வோனே
படிறுறுசமயரு முனதெனதெனவிகல்
பகையுறநடுவினி லமைவோனே
பலியுணவதுகதி தருமுதலெனவுணர்
பவரறிவதனிடை திகழ்வோனே
பனிமலரமுதுநெய் முதலினகொடுவழி
படுநெறிகளின்மிசை வெகுளானே,(உஹூ)

பசுநிணமுயர்சுவை யினதெனநுகர்சில
  பதிதருமிகழரு மிறையோனே
பறவையுநிலமிசை நகர்பவுமறவிடை
  பழகுவனவுமறி தகையோனே
பவமிலையுடலல துயிரிலையெனநவில்
  பரிவினர்சிலர்சொலு மணிவோனே
பழுதொழிரதகச துரகமுமிகைபடு
  பதசரர்களுமென நுவல்கூருர்
படையெனும்விரிகட லடர்சதுரதர்நனி
  பயமுறுதவவலி தருவோனே
பகரமொடுலவிய மயினிகர்வனிதையர்
  பகமயல்களையுமெ யுணர்வாவாய்
பகடதன்மிசையிவர்நமனுடனவன்விடு
  படையும்வெலுமவர் துணையாவாய்
பதிலறுமொருகுடை நிழலுடையவரது
  பவிசையுமிகழ்சில ருயிரானாய், (கூ)

கருணையிலுயர்நல மிலையெனநுவலிய
  கவிஞர்தமனமல ரகலானே
கடலிடையமரரு மவுணரும்வலிகொடு
  கடையுநலமுதுறழ் சுவையோனே
கலிபுருடனையவ னுறவினருடனடல்
  கருதியநிலையினர் தமையோவாய்
கனகமதனினுயர் பொருளிலையெனமுயல்
  கயவர்புன்மனமதின் மருவாதாய்
கறைமலிவிடநிகர் தகுவர்கள்விழைதரு
  கனவரமுதவவு மெலியானே
கமடமதனைநிகர் பதமுறுசிறுமியர்
  களிலொருசிலர்தொழ மகிழ்கூர்வாய்
கதுமைகொள்படைசிலர் பெறவுமுனருளிய
  கதைபகர்பவர்பகை களைவோனே
ககபதியினுமிகும் விரைவுறுமனதினர்
  கனவினுநனவினு மவிர்வோனே,(கூ0)

கமலமென்மலர்முழு தலர்தரவிணில்வரு
  கதிரவர்பலபல பலரானாய்

கசைகொடுமதலைகொண் மனையொடுவிடைமிசை
கவினுறுமராள விலரானாய்
கயிறெடுமதகயம் வெருளுறுபடைபுனை
கரவணிதையரது குழுவானாய்
ககனமுநிலமுமு ளளவியபதமுறு
கருமுகிலுருவுமெ ணிலவானாய்
கரிமுகமுறநல மொடுபிறிதினும்வரு
கணபதிவடிவமு மிகவானாய்
கனிதமிழுரைபகர் கிளியுலவிடமிளிர்
கடகபணிருபுய மொடுவாழ்வார்
கனல்வடிவமுமிக மருவியகுருபர
கதிபெறுமுடிவினில் வெளியாவாய்
கடவுளொருபொரு ளிலையிலையெனநகு
கலையினரறிவரு பெருமானே. (௧)

---

தானன தானன தானன தானன
தானன தானன—தானனதானா.

மானனையார்சுக மேயினிதாமென
வாடியெநேரமு நாடினைவேனோ
மாழையின்மால்கொடு மூடகுலாதிபர்
வாழ்மனை வாயில்க டோறலைவேனோ
மாநிலமேபர லோகமுமாமென
வாதிடுவாரொடு கூடிடுவேனோ
மாசறுதேவிலை யாமுளமேயெனும்
வாயுடையாரெதிர் நாணுறுவேனோ
மாமிசமேயுண வாநுகர்பாதகர்
வார்குடைநீழலி னூடயர்வேனோ
மாதவமேதுமி லார்குழுவேசலின்
மாழ்கியகோரவி சாரமுள்வேனோ
மானிடர்நாடரி தாமதிமாலுற
வாதனையாயிர கோடிகொள்வேனோ
மானமெனேனுமி லார்சிலர்மேலபி
[illegible] தாலுழல்வேனோ, (௨)

வார்புனைபூண்முலை யார்கடுவேவரு
 மாரனைநாளும்வி டாதிகழ்னோ
மாகர்பிரான்முத லோர்கொளுநாலிரு
 மாதிரமூலமு மேகிவெலேனோ
மாயையினூடுபல் கோடிமகாபதம்
 வாய்தன்மெயாமென வேதெரியேனோ
மாறிலனொருகோனுளனேனையர்
 மாய்குநர்தாமெனு நூல்விதியேனோ
வாரணமேறிவி ளவெனவணி
 மாநகர்வேள்விய மேதமெனேனோ
வான்வழிபோய்வரு மேலவர்தாமுமென்
 மான்மியமோதிடு மாறுளிரோனோ
மாசுணமேனட மாடினனாதியர்
 மாணுவல்வார்கனி பேசலுறேனோ
வாகுவனேகமு ளார்பொரநேரினும்
 வாகைகொள்வீரர்க டாழகிலேனோ, (வ)

தேனவிழ்பூவகை யால்வழிபாடுசெய்
 சீரியர்பாழ்மிடி யானவிவாரோ
சேணுலகாசையு மீனமெனவுணர்
 தீரரைநாயனை யார்நகுவாரோ
தேகமதேயுயி ராமெனுநூலுணர்
 தீயவரீடறு மேன்மைகொள்வாரோ
சீதளகோமள வாசகநாவலர்
 தேளனையார்மிசை பாடல்சொல்வாரோ
சீதையின்மால்கொளி ராவணனேர்பலர்
 சேயிழையார்வெருள் கூறல்செய்வாரோ
தீதுறுதாடகை நேர்பலமாதர்கள்
 செய்வதையாதிசெய் தேமகிழ்வாரோ
தேனுவைநேர்பசு வூனுகரீனர்கள்
 சீறியெலோரினு மேனிகழ்வாரோ
தீகர்கோபம காரதர்நீதியில்
 சேகரராவிகொ ளாதமைவாரோ,(வரு)

சீலமறுமறை நாலினுமோதிய
 தீவிரமாநெறி யாறுமுளவோ

# ஒலியலந்தாதி.

சேயபுனீர்கிண மாரமுதோடுறழ்
தீனியெனேனைய தாழ்மையுருவோ
சேறுறுவாரிதி யாடைகொள்பார்மகள்
சேமமெலாமுறு மேன்மையெய்தாளோ
சீகரவாழியி னூடமுதோடெழு
சீர்மகண்மேலவர் பான்மருவாளோ
தேயமெலாமுமொ ரேகுடையூடுறு
தேசுடையானது கோனிலவாதோ
தோலராவுல கோரையுள்காவலர்
சேர்பலகோனிலை யாதழியாவோ
தேவர்குழாமிக நாணவெனாடுபல்
சேதிசொனூயல வோவவைபோலே
சேவயமுடிக மாளிபுளேறிய
சேவையெலாமெதி ரேதருவாயே, (௧)

யூனமுருவெளி யாகியருதுய
ரோகைமகோததி மேயபிரானே
யூமைகளேங்கர் பாழ்மதவாதிக
ளோர்வரிதானவி ஞேதமுளானே
யூடியமாதனை நேரடியாருட
னூதியமீகிற தாமொழிவானே
யோசைகெடாதன வானபல்வேதமு
மோதியநீதியெ லாமுணர்வானே
யூழ்வினையேபெரி தாமெனநாடிடு
மூறுடையார்கள்ப ராவரியானே
யூசலெனுமன மாடலுருதவு
பாசனையோருட னேயுறைவானே
யோகமதேதுணை யாமுயல்வாருள
மோவரிதாமநு பூதிசெய்வானே
யூசரபூமியை நேர்பகர்நீர்கொளு
லோபியராவல்கொ ளாவிறையோனே, (௨௰)

யூதையிலேபடு தூலமெனுவெளி
தோடிடவேபல நோய்களைவானே
யோய்வுறுமோனியர் தேறுமகாரவு
காரமகாரமல் கோர்மொழியோனே

யூர்தொறும்வாழ்மனை தோறுமெநாளுமு
றுவிரவாறுகர் வாருறவோனே
யோதிமமேனிகர் மாதர்சிலோர்தம
தாகமதூடும்வி ராவியகோவே
யூனுணலேகுண மாமெனுநீசரு
லாசமெலாமடு வாருரவோனே
யூசியினூடுது வாரமதால்விணி
லார்சுடர்நாடினை யோருணரானே
யோதமெனுவெழு சேனைகள்கோவென
வோலுமகாரத வீரர்தம்வாழ்வே
யூருணிநீர்பொரு சீர்பெறுபேரறி
வோர்கரவீகையி னூடனைவானே, (ூ)

யேனமதாலொரு வேடுவனுனம
யேசனெனுமொழி வானைவிடானே
யானைகராவத னுன்மடியாதரு
ளீடுசொல்வார்தொழு மாயவனுனு
யேசறுபேரொலி வாகனனுவுண
வீபவருமெருழி சீர்புரிவானே
யேதமில்வேல்கொடு தோகைமயூரம
தேறிவிணுடுயு மாறுசெய்தோனே
யேழ்கடல்சூழ்புவி யோர்வினையாவுமெ
நாளும்வராவறி பானுவுமானு
யீரிருதோளுமை யாதியமாதரொ
லோர்களுமாய்விளை யாடவொல்கானே
யேமமதாமுல கோர்முதலாமுயி
ரியாவினுமேவியு மேவுகிலானே
யேவொவாறுணர் போதுமவாமெருளி
ரோகநிராமய பூரணநாதா,(ஙூ)

வீழமுளாரைவென் மாதவனுதிய
ரோடணைதீர்நல மேவவுள்வானே
யேணுறுமோர்புளி யூடுறைவானுட
னேயவர்பாடிய பாவனைவானே
யேழையர்சேகர மாமலையாரையொ
ரோகவியான்மலை மேல்விடுவோனே

யிடறுசீர்மல யாசலமாமுனி
யேகியவாறுணர் வார்கள்சகாயா
வீரமருமலர் வாளிதையாமக
வீகைவலானை மு னீயவொல்வானே
யீனமில்பாநுவல் வானுடனேயவ
னீனியபேதையெ ஞானடைகூர்வா
யேசியதேசிக ஞசையினலலே
யேவிழவோடின னோர்தவர்பேறே
யானறிநீதனி யேயெனுஞானிக
ளேணியின்மேனிலை யா முதல்வோனே. (உ)

தனனதந்ததன தனனதந்ததன
தனனதந்தன—தனதனதனனு.

முதலையுண்டமக வினையுமிழ்ந்துதவ
மொழிதருங்கவிக ளுலகினிவிலையோ
முரணுறுஞ்சமண மதமழிந்தொழிய
முனைமலிந்தகழு மரநடல்கதையோ
முதியதொண்டனொரு வனையிடுங்கடலின்
முறைபிறழ்ந்துசிலை கரைவரல்பிழையோ
முடையுணும்பிடகர் மதமறும்படிசெய்
முனிவனம்பரம தனில்விரவிலனே
முதலெனுஞ்சொலொரு தரமொழிந்தகரி
முறையுணர்ந்ததிரு வுளமிருள்படுமோ
முகமனின்றிவெகு ளிரணியன்றனிகன்
முடிவுறும்படியொ ரரிவரல்படிறே
முகுளகஞ்சனிகர் வகுளபுங்கவனோர்
முதிர்பெரும்புளியி னுறுகதிபழுதோ
முசுடரஞ்சவொரு கிழியறுஞ்செயல்செய்
முனைவனும்பிறரு மருள்வசரலரோ, (ஙு)

முகடடர்ந்திமைய வரைமுனிந்தகய
முகனைவென்றகண பதியுனதயலோ
முதிரையுங்கனியு மவலெனுண்டைகளு
மொகுமொகென்றிடுந ரிடர்கெடல்புதிதோ

முலைசுரிந்தகிழ வனிதையொண்கவிசெய்
முகனொனுங்கொனியி லுவகையெய்திலையோ
முனிவுறும்பகைவன் விடவின்வந்தெனிடை
முனமவிர்ந்தசர தமுமறைவுறுமோ
முடிபெறுந்தகுவ னுடல்பிளந்தெறிய
முருகனென்றுவர லுனையலதெவனோ
முகையுறழ்ந்தகுச யுகளகுஞ்சரியு
முருடமங்கையுநல் கியவரமெளிதோ
முயலுடும்பனைய வுணலும்விண்டவனை
முகிறவழ்ந்தசிக ரியிலருளிலையோ
முசுமுகங்கொளொரு மனிதனிந்திரனை
முனல்களென்பவனை வெலவுதவிலையோ, (வ)
விதழ்மலிந்தபல கமலமுங்களியெய்
திடவரும்பரிதி யறிவுறுசடமோ
விரலையொன்றுபணி மதியையுண்டுமிழு
மியல்பறிந்துமுணர் விலதெனல்சரியோ
விளமடந்தையொரு புதல்வனன்றுதவ
விணையில்குந்தலம தனின்முனணிலையோ
வெரிபொருங்கலியி னடுவெருந்துமென
திதயமுந்தெரிய வரல்பயனிலதோ
விமயமங்கையென வழிபடும்பனவ
னினிதருந்தவமு தடுதல்சொலிலனோ
வியல்வளர்ந்தநகர் தனிலொர்வெண்கவிசொ
லியுமொர்தொண்டன்மிடி களைதல்பொய்படுமோ
விருள்பொதிந்தகுழன் மகளிர்தம்படைகொ
ளிறைதொடுங்கணைவில் வலியுனதலவோ
விகல்பெருந்தகுவ னொருவனங்கழிய
வெழில்பெறுங்கைவிர லுதறலெணிலனோ,(வஉ)
விளிமறந்துமயிர் பறிசெயுஞ்சமண
ரிசைவினுங்கருணை நலமறிகிலனோ
வெவையிறந்திடினு மவைநுகர்ந்தபிழை
யினரினுஞ்சிலர்மு னலமருவிலரோ
விளகுநெஞ்சமொரு சிறிதுமின்றிமங்க
ரிணர்பொருங்குறிகொய் பவர்களுமுலவா

விடமெனுங்கதிரல் கிடுபெருங்குரவ
ணிதமில்வம்பர்சிலர் கொலைசெயமடிவோ
னெனமுடங்குதொறு நுவல்குணுங்கர்களு
மினையபுன்சமய ரொவர்களுமுனையே
யெமதுசொந்தமென வமர்செயும்புவியி
னிடைபிறந்துமவை முழுதினுமமைவா
யெதினுமொன்றுகிலை யெனநினன்பின்வழி
யெளிதுணர்ந்துசது மறைநுவலியமு
விருமதம்பொலியும் விழைவுகொண்டுதொழு
மெனையிவண்டளர விடுவதெனுனையாய், (௨)

மதமனந்தமுன துருவனந்தமெனும்
வகைதெரிந்தவரு மறிவருமுதலே
மழைபொழிந்துலகி லசரமுஞ்சரமு
மலிவுறும்படிசெய் திடுதனியரசே
மனையினங்களுட னிணமுமுண்டுதுயின்
மலினருஞ்சிறிது தொழுநிகழ்பொருளே
மசகமென்றசிறு பறவையின்கணிமை
வடிவமுந்தெரியும் விழியுறுபரமே
வரதமும்பொருவி லபயமென்றொளிர
மனநலங்கொள்சிலர் கனவினில்வருவாய்
மகிழ்வுடன்றுதிசெய் திடலொழிந்துபெரு
வசைபுகன்றவரு முயும்வகைபுரிவாய்
மதுரபுஞ்சுவய மொழியியைந்தகவி
வனைதரும்புலவர் விழைவனவருள்வாய்
மலயமன்செய்தமி ழலதொர்தஞ்சமிலர்
வழிபடுந்தவசி லதிவிழைவுடையாய், (௨௰)

மனிதர்தஞ்சமென நினையுநெஞ்சினிலு
மருவும்வம்புபட நிறைபெருவெளியே
மணமிகும்புகையு மறல்கொள்கும்பமுநன்
மலர்களுங்கொடுசெய் கிரியையையிகழாய்
மகுடமொன்றுதலை யரசரின்பமிகழ்
வயிரமொன்றுநிலை யினர்தமையகலாய்
மடையர்தங்களைவில் விசையனிந்திரன்மன்
மதன்முகுந்தனெனு மவமொடுபழகாய்

வனசம்வந்தசது முகவிரிஞ்சர்பலர்
மறைகளுங்கடையி லுவலொருகதியே
மமதைதந்துபல விதவிடும்பைசெயு
மலமொழிந்தசுக வுததியினமுதே
மரணமுந்தொகையில் பிறவியுந்தவிர
வரம்வழங்குகரு ணையினுயர்வுளதே
மடமைதுன்றுகிளை யினர்நெருங்குதலின்
வருபெருந்துயர மறவெனவளைவாய், (ஐ)

கதறுகின்றபசு வினமகிழ்ந்திடல்செய்
கவலைகொண்டவர்கண் முடிதொறுமமர்வாய்
கயிறுகொண்டுவரு நமனைவென்றுமிகு
களியடைந்தவர்கள் பலரையுமயில்வாய்
கலிவெருண்டயரு நலநினைந்தடியர்
கழறருந்துகளு மணிகுநர்தவமே
ககனமஞ்சவெழு தருவகண்டகர்கள்
கருதிடும்படைக டருமொருதருவே
கலகலென்றுபல மொழிபுகன்றிகல்செய்
கடையர்தந்தமது பொருளெனுநடுவே
கருமமன்றியொரு பெருமையின்றெனுரை
கழறும்வண்டர்கரு தரியநன்மணியே
கரியசிந்தையிடை மிகுமகந்தையுறு
களையுறழ்ந்தவரை யடவெழுகனலே
கரடதந்திமிசை யுலவுதுங்கர்சிலர்
களையிரந்துழல விடலும்வலவனே, (ஐஅ)

கயிலையங்கிரியின் மிசையலங்கிருத
கவுரிபங்குறைய வளர்தலுமுடையாய்
கடுவுமிழ்ந்தசத பதுசிரங்கொளணை
கவினுமம்பரம தனில்விழிதுயில்வாய்
கவளமுண்டமத கயமுகங்கொளொரு
கடவுளென்றுமுல கிடைதிகழ்பெரியோய்
கதிருமிழ்ந்தவயி லொடுசிகண்டிமிசை
கனவில்வந்துபல நலநுவலொருவா
கலசவந்தணன துரைவிரும்பறுவர்
கடமையுங்கொடுவிண் வழிவருசுடரோ

கனகபம்பரம தனையகொங்கையுறு
கனையினின்றுலக முழுதருள்பரையே
கபடமொன்றியபு னெறிகொளுஞ்சிறுவர்
கறைபடுந்தகைமை யளவினுமிகழ்வாய்
கதுமைதங்குமறி வுறுபெருந்தவர்கள்
கணிதமென்றறிலெ முழுதுளகுருவே. (௩)

தனனதன தானதன தந்தந்தனனதன
தனனதன தானதன தந்தந்தனனதன
தனனதன தானதன தந்தந்தனனதன—தந்ததான.

குருபதமலாதுகதியுண்டென்றமூடரொடு
பழகியவர்போம்வழிதொறுஞ்சென்றுவானினிடை
குலவுமமராபதியிடந்துன்றுமாதர்மயல்
கொண்டிடாதே
கொடியகுணமியாவுமருவுந்தண்டவேனன்மொழி
களுமுதியவேதவிதியென்றன்பினோடுபுரி
கொலைமகமுனனபலவம்புங்கொள்வார்களொடி
ணங்குறாதே
குறைகுமலியாறியனவுண்டின்பமாகவல
வுதிரநிணமாமிசமெலும்புங்கொள்வார்கரிய
குடைகிழவினூடுளபெருந்துன்பவாரியில
மிழ்ந்திடாதே
கொடையறிகிலார்களைவலிந்தண்டர்நாதனென
வலிமிகுமுராரியெனவம்பொன்கலாபியிவர்
குகனெனவேநாளுமொழியும்புன்சொல்வாணர்முன்மெ
லிந்திடாதே
குளிர்மொழியுமாறுமனமுங்கொண்டுவானவரின்
முனிவருயர்வாமொருநிசங்கண்டுபேணுமுயர்
குணமில்சிறியோர்களைவிரும்பும்பொலாதவினை
மிஞ்சுறாதே
கொதிகடலுநீடுபலகுன்றுஞ்சராசரமு
முதவல்பரமாகுமெனினுஞ்சண்டைபோடுகிற
குருடரனையாரொதிரெதிர்ந்தன்பில்வீண்மொழிகள்
விண்டிடாதே

குறுமுனிவன்மாதவமுயன்றும்பரூரமிழ்து
மெலிவடையுமாறுதவுமெண்சந்தமேவுதமிழ்
குறைவுடையதேயெனவிளம்புங்குரூரர்முன
யஞ்செயாதே

குழியில்விழும்வேழமெனநொந்தஞ்சிவாடவிடு
மிடிவளைதலாலுயர்தவங்குன்றியார்வமிகை
குலையவெனையாருநகவிங்கிந்தவாறறிவ
ழிந்திடாதே, (௬௰)

குதிரைவிலையாடவெனவன்றங்குபோமொருவ
னரியபரஞானநிலைகண்டின்பமாரவருள்
குழகனையார்வரவெணுந்துங்கமேனிலைபொ
ருந்திடேனே

குடிமுழுதும்வாழவருமைந்தன்றன்மேலிகலு
மிரணியனதாவியுமகந்துன்றுகோபமொடு
குருதியுமநாணுகவொர்சிங்கந்தன்வார்கழனி
னைந்திடேனே

குடுகுடெனவோடுமொருகுன்றென்றவாகுமிசை
பவளமலைபோனிலவுமைந்தங்கைவேழநுவல்
குதுகுலமதானமொழிவம்பென்றெணுநாளம
கிழ்ந்திடேனே

குவடளவில்கோடியினுநின்றன்பரோடமரர்
தொழநடனமாடியபதந்துன்றுசேய்தனது
குறியகிளிதானெனவெனெஞ்சின்கணேதியதி
லங்கிடாதோ

குருளைபடுமாசுணமுநஞ்சங்கொளாமகிழ
வருபரிதிநாதனெதிர்தெண்டன்செய்தோதென்மொழி
குயிலமெனவானவர்களுங்கண்டுதேறிடமு
ழங்குருதோ

குவளைமலர்நாணமலர்கண்கொண்டகோகிலம
தனையகவுமாரிதனிளங்கொங்கையூறமுது
கொடுகவிதைபாடியபசுங்கொண்டனோர்புகழ்பு
னைந்திடேனே

கொடுவரிகொளானுயிர்பெறுஞ்செஞ்சொலோதியெழி
லருணைநகர்நாதனிலையங்கண்டுவீடுபுகு
குகைநமசிவாயனையவன்றொண்டனுதியனை
யொன்றிடேனே

குயிலியவியாசனொருவன்சொந்தநூல்களிடை
சமரசமுறுமலிகலுஞ்சிந்தைதோய்சிறுவர்
கொதுகெனவெளாதுபணியும்பொங்கவாழ்வினில
மைந்திடேனோ, (வ)

வருவுருவமாகியவகண்டஞ்சதாசிவமெ
யொருபிரமமாமெனவுணர்ந்தொன்றுமேலவரை
யசடுமலிதீயவரொதிர்ந்தந்தியோடுபக
லிந்தியாரோ

யபிநயவினோதநடனங்கொண்டவேசியர்கண்
மனையிடைசதாநிதமிருந்தொஞ்சுறுமனதொ
டவர்பணிசெய்வாரிடநடந்தின்சொல்வாணர்மிக
நொந்திடாரோ

யயனருளும்வேதமுமரன்றந்தவாகமமு
மொருநிலைமையேபகர்விதங்கண்டசீரியரை
யவையறிகிலார்கருதலுந்தொண்டராருயிர்ந
டுங்குறாதே

யரிபிரமராதியர்நினைந்தின்றனீனமல
வெனினுமதுபாவமெனநெஞ்சஞ்சிடாதுசொலு
மருணிலையுளாரையும்வளைந்தங்கிநேர்கலிதி
தஞ்சுடாதே

யதிரதமகாரதர்வணங்குஞ்சுபாவகுண
முறுபரமயோகியர்கணெஞ்சும்பகிரெனவெ
ணரியகொலைநாடொறுநடந்தந்தவூனுலக
ருந்திடாதே

யபரிமிதமாகவளருங்கொங்கைதோயலகை
மகளைமலையோடுதுணிகண்டன்றுகிரனுவ
லகவல்புனைவானனையருஞ்சந்தமோதிடினும்
வஞ்சியாரோ

யருமைபெறவோர்கவியுடன்சென்றுமீள்கருணை
மருவுதிருமாலனையருந்தங்கையாலெழுதி
யடகுதவுமோலைமுறியின்பொன்றராதபிழை
யுஞ்செயாரோ

யயிலைநிகரானவிழிகொண்டன்பராவிகவர்
கணிகைமகளூடலறவுஞ்சென்றசீர்புனையு
மரனையர்பாடல்பலகொண்டுங்கொடாதிவணி
ருந்திடாரோ, (வஹ)

யவல்பயறுமோதகமருந்துங்கணேசனிகர்
பெரியரருளான்மொழிதருந்துங்கவாசகமு
மதுலபலமாயிரமுடன்றந்திடாதொளிம
ழுங்கிடாதே
யளவில்பலபோதுகனவின்கண்டொடாதுதின
நனவில்வரல்போலலரிவந்துஞ்செய்பாவபய
னழலிலிடுபூளையிலெரிந்தங்கருவணம
லிந்திடாதே
யகிலமுழுதீனியவிளங்கொம்பனாள்சரத
மனமறியவாடல்களனந்தஞ்செய்தாலுமிடி
யறுதலுமுருதுவளரும்பங்கமாயிரநெ
ருங்கிடாவே
யவனவளதோவியபதங்கண்டுநொடியுமொர்
கதைபகருநூல்வழிநடங்குஞ்சிருர்சமய
மணையுருவநாமமும்வெகுண்டுஞ்சில்போதுளிலி
லங்குருவே
யமையினிடையீசன்முளையென்றுந்துமாநகரி
லெனதுடலொர்பாலணில்வருந்துங்கமாமனையி
லலையெறியுமோசைமலியுஞ்செந்தின்மாநகரி
லந்தவூரா
லணிகொளுருமாமலையுறுஞ்செம்புமாநதியி
னெடியதிருமாமலையிலன்றங்கியானமலை
யருகருணையூரிலுயர்செங்குன்றிலாடகம்வ
ளைந்தசிர்தோ
யவைநிலவுமூரினிலரங்கந்தனுதடிமை
யிரதம்விடுவானுறுதலங்கொங்கைநாணமறு
மரிவையர்தநாடுவளையங்கங்குகூறியவி
தஞ்செய்நாள்வாய்
யறிவறிவதாமநுபவங்குன்றிவீணிலழி
வுறிலுனதுசீரருள்பெறுந்துங்கமாமுனிவ
ரறையுமொருகோடிகதையுங்கொஞ்சமேனுநிச
மென்கலாமோ, (௭)

சருவசனதாரகசுகந்தங்குலாவுமலர்
வகையணியுநாயகதிகந்தந்தொறேகிவரு
தவமருவுயோகியருணர்ந்தன்பினால்வழிப
டும்பிரானே

சகுணபரயோகசரதந்தங்கிடாதபெரு
மடமையொடுமாதவரிடுந்துங்கவேடமிடு
தகையினரைநானிலமிகழ்ந்தஞ்சிடாதுமிதல்
கண்டுளானே

தமையனையவேயுயிரனந்தங்கடாமுமெனு
முறுதியதனுலொருபுலுந்தன்புருதுமல
சலமும்விடுவேதியரினந்தங்கும்வீடுதொற
மாந்தகோவே

தகரினொடுசாகமுமரிந்தங்கிவேள்வியெதிர்
குயவரொருகூறுகொளவுண்டின்பமாமிழிவு
தனிலிசையுமீனகுணமொன்றந்தனுளரைவி
ரும்பிடானே

சரதமனுநீதிதருமங்கொன்றுனுமையிக
லடுசமரவீரமுதலொன்றுங்கெடாதரசு
தரைமகிழுமாறுமுயல்பண்பொன்றுகாவலவர்
நெஞ்சுளானே

தழல்வெருளுமாறுதழையும்பஞ்சநோயினிடை
யுலகமுதுவாடுறினுநம்பங்கிலோர்சிறிய
தவிடளவுமீகிலமெனுங்குண்டராசர்குல
முங்கொல்வானே

சகசமெனவூரிடைவழங்கும்பலோர்முறையு
மதுபகருநான்முறையும்வம்பென்றுவேறுவழி
தனமலியுமியோசனைசெயுஞ்சண்டிநாய்கரழ
வெம்புவானே

தறுமுடுகும்வேளையினுமம்பொன்கொள்வார்கடரு
பவிசையினிலாசைமிகும்வம்பின்றிவாழ்வணிகர்
தமரவர்சகாயமெனவுந்தன்றிநாடொறுந
லஞ்செய்வோனே,(௨௫)

சரணசனராமவரிலென்றுநதனேரில்வரு
மிரவலர்கள்வேணவைபெறுந்தஞ்சமாகிலவு
தகுதிகொளவேமிகவிரும்புங்குனுலரைய
கன்றிடானே

தமனியமகாமலையெனுங்கும்பலாகியநெ
லுறுகளமதூடுமுதவும்பண்புருதசில
சதுரர்குடிகேடுபுரியுஞ்சிந்தைதோய்தருசி
னங்கெடானே

சலசமலரோன்மறைவிளம்பும்பல்வானவர்த
முறைவிடமதானபசுவுங்கன்றும்வாழல்புரி
தனிமகிமையாளரிதயஞ்சென்றவாறுதிரி
கின்றதேனே

சருவனையதானிணமெனும்பஞ்சபாதகரை
மருவியவர்சீவனமுயன்றுய்ந்தபேருமெரி
தருபெரியகோரநரகின்கண்சதாவுழல
வுந்தள்வானே

சகதிங்கர்பாழ்மதமழுந்தும்பொலாரெணினு
முயிர்வதைசெயாதவிரதங்கொண்டுவாழிலவர்
தவளமதவேழநகரந்தங்குமேன்மையுற
வுந்துவோனே

சமயநெறியாவனகடந்தந்தராதியர்கண்
மருவுபதமியாவையுமிகழ்ந்தெங்குமாகிநிறை
தனையிடைவிடாதுகருதுஞ்சொந்தராவியினு
ரிஞ்சுவானே

சரசகுணசாகரமெனும்பெண்கள்சேனைநடு
வருமதனுமேமனுமிகுந்துன்பமேயுதவு
சனியன்முதலோருமுனையன்றின்றென்வாயினரி
டம்புல்வானே

சமரசமதானநிலைநின்றெஞ்சுறுதவருள்
பெறமுயல்வலோரொதிரிகழ்ந்திம்பர்பேசரிய
சபதமொழிவார்திரள்வெருண்டொஞ்சுமாடல்செயு
மின்பவாழ்வே, (௩)

புருவநடுநாடகமிடும்புங்கவாகருணை
மழைபொழியுமேகமுறழுஞ்சிந்தையாயளவில்
புவனமுமெளாமல்விழையுந்தங்கமேயனைய
பண்பினனே

புனிதமிகுபாடல்விபரங்கண்டிடாதுபல
மனிதர்புகழோதிமகிழும்பங்கமேயசில
புலவரறியாதபடி நின்றன்பரோசலுமு
வந்துளானே

புரையில்கருணாகரபுசுண்டன்பல்கோடிபிர
ளயமுடிவுகாணவருளுங்கண்கொள்வாய்களப
புளகவிளமாமுலைமுயங்குஞ்சிலோரடிமை
யுந்தளானே

புதுமையறுபூரணமதென்கின்றபேருநிறை
யொடுகனமுநீளமுநிலைநினைந்துங்கணுளர்பலர்
புரிவடிவகோடிகளிலொன்றென்றுநாடுகரு
நம்புபேறே

புயலனையவீகைமருவுஞ்செங்கையாளர்களை
நனியிகழுலோபியர்பசும்பொன்பன்மாமணிகள்
பொதிபொதிகளாவுறினுநொந்தஞ்சிவாடவிடும்
வம்புளானே

புழையுறுக்கவேழநுகருஞ்சிங்கவூனுதிர
நுகர்சரபமேயனையரும்பந்தமானசிறு
புழுவினதுவாயிடைவருந்தும்பொலாமையும்வி
ளங்கநேர்வாய்

புகழளவிலாதனபெறுங்குன்றமேயணுவி
லணுவுநிசஞானமிலருங்கொண்டுவாழுமிழி
பொருளினிலுமால்கொடுதளர்ந்தொருசுவேனையும்வி
ழைந்ததாளா

புரிசைமிசையாடுகொடியண்டங்கொணீர்பருக
நெடியதெருவீதிகளனந்தங்குலாவவளர்
புலிசையிலநாளதுபகர்ந்தந்தவாறுசெயல்
சிந்தியானே,(௩௰)

புயபலமுராரியெனவந்தங்கொர்பாடல்பக
ரெனவினவியாடியுநெடுஞ்சந்தையூடுதனி
புருசிறியநாயெனநடுங்கும்பல்வாதனைத
ரும்பெமானே

புணரியலைவாயிலருடந்துய்த்தபோகவழி
விடுகிறதுபோன்மிகமொழிந்தென்சொன்மாலைபல
புனைதலுமொராரர்வமுமுடன்றந்திடாதுவிடு
தெம்பினனே

புகலரியதேவர்பலரொன்றென்றனுதுமன
வெளியிடைநிலாவியுமிகங்கண்டுபேணவொரு
பொழுதினிலொராடலுமுயன்றின்பசாகரம்வ
ழங்கிலானே

புவியிலுளபேர்பலர்கருத்துன்பநோய்மலிய
வொருபெரியபாறையிலிடந்தந்துகூபமெடு
புனல்பெருகியாறெனவருங்குன்றிடாதென
நவின்றவாயா

புலிகரடிநாய்நரிகுரங்கென்பவாதியபல்
விருகசிகர்தீயகுணமொன்றும்பொய்வாதர்மிகு
புலைகொலையினேடுமுயலுந்தொண்டுநீடியல்பு
முன்செய்தோனே
பொறைசிறிதுமேவலில்சினங்கொண்டுமேன்மைபெறு
பழையதுருவாசரொடியங்குஞ்சிலோருமெழு
புகைவழியலாதகதியுங்கண்டுதோய்வுறவி
ரங்கினேனே
புராணநிலையாளர்களின்மூந்துங்கிலேசமொடு
மடமைமலிதீயர்வசையுங்கொண்டுதாழ்வினிடை
புலருமடியேனுமிவணர்தொண்டுநாடவிடும்
விந்தையானே
பொருவலறுகூலமுதவுமபண்டைநாதனெனின்
மகிழுமொருவாவுலகனந்தம்பல்கோடியுள
புரவலவிராதரநிறைந்தெங்குமியாவினும
மைந்ததேவே. (ச)

---

தானதத்தன தானதத்தன
தானதத்தன—தனதனதானா.

தேவருக்கரியவாழ்வுறக்கருது
சீர்படைத்தவர்கள் கழல்பணியேனோ
சேதனத்தையுணவாமெனக்கொள்பல
தீயரைக்கறுவி யகமகிழேனோ
சேலையொத்தவிழிமாதரிச்சைவழி
சேறலற்றதவ மிகமுயலேனோ
தேனின்மிக்கதமிழானினைத்தபடி
சேண்வியப்பநில மிசைபுரியேனோ
சீகரப்புணரிநீர்குடித்தமுனி
சேவைபெற்றளவில் புகழ்புனையேனோ
சேவதைப்பவர்கண்மேல்வெறுப்பிலவர்
சேகரத்தையடி யொடுதகியேனோ
சீலமற்றநடைதோயரக்கரொதிர்
சீறிடிற்பொருது செயமருவேனோ
தீவிரப்பகுதியானபக்குவர்கள்
சேரநத்துகுரு வெனமிளிரேனோ,(ரு)

சேயழக்குறிகொய்வார்முதற்கொடியர்
தேசழித்துலக முழுதுலவேனோ
தேயமத்தனையுமோர்குடைக்கிடைகொ
டரனுக்குமணி முடிதரியேனோ
சிவமுத்திரையினல்விளக்கமுறு
நீதுடைப்பொருள்க ளழிதல்செயேனோ
தேடிவைத்தபணமாவியிற்பெரிய
தேயெனச்சொல்பலர் பரிசழியேனோ
சீதளக்கமலம்வாழ்விதித்திரள்செய்
தேகமுற்றுழலும் வினையொழியேனோ
சேயபுட்பரியிலேறுமச்சுதர்கை
சேர்படைத்திறமை யினுமுயரேனோ
தீயும்வெட்கவருகோபருத்திரர்க
டேய்வின்முக்குடுமி களையும்வெலேனோ
சேவல்பற்றியகைவேளுருக்கொடுசொல்
சேதிமெய்ப்படகி னிடைகலவேனோ, (வ)

பாவமுற்றுமறுமாறொழித்தறுவர்
பாவனைப்படிகி னருளிலகாதோ
பாரதத்திலுயர்வானயுத்தமதி
பாதகத்தரசர் தமைநசியாதோ
பாசமற்றபரஞானமுத்தர்சிலர்
பாழ்மதப்பதிதர் களியொருவாரோ
பாகமுற்றமொழிதேறுமெய்ப்புலவர்
பாடல்சொற்றபடி நடவல்பெறுரோ
பாகையொத்தமொழியார்தமைத்தனது
பாகம்வைத்தவனை யிகழல்கெடாதோ
பாணிபற்றுகிலர்நூலிழக்குமவர்
பாலனைக்கொலைசெய் திடறவிராதோ
பாணம்வெட்கும்விழியார்களைப்பல்விடர்
பாடழித்தழுது லையவிடுவாரோ
பால்கொடுத்தபசுவூனுநச்சுமவர்
பாரிடத்திலதி மகிழ்வடைவாரோ,(வஹ)

பாணனுக்குமதுராபுரிக்கணொரு
பாசுரத்தின்மிடி களைதலும்வானோர்

பாழிமிக்கவசுரோசருக்குடைதல்
பாறிடத்தணமு தருளலுமானோர்
பாவையைக்கடிசெய்தீயுமுத்தலைவர்
பார்வைகட்கெதிரி லுருள்சிறுதூணோர்
பாரமிக்கபனையாய்நொடிக்குளுயர்
பான்மையுற்றகனி யுருதலுமோர்பேய்
பாசனத்துணவெனுவெடுக்கவெருள்
பாவலர்க்குவகை தருதலுமோர்நாள்
பாரதிப்பெணுவனுவினைப்பிறிது
பாடினற்கடிசி லிடுதலுமேலூர்
பானுமுற்புரியுநீயெனக்கினிய
பாரசித்திகளு மனவெளியூடே
பாவனைப்பரமஞானத்தத்துவசு
பாவகிச்சயமு மினிதருள்வாயே, (௭)

காவலர்த்திரளெலாநடுக்கமுறு
காரணத்தலைமை பெறுமொருகோவே
காமனைப்பிரமதேவனைக்கொலைசெய்
காலனைக்கறுவு மவர்துணையாவாய்
காணமிக்கபொருளாமெனக்கருது
காதலுற்றவர்க ளறிவரியானே
காதுதற்கொராணுவேனுமச்சமறு
காசுடைப்பிசித ரணுகவொணுதாய்
கானகத்துமறவேடரிற்சிலர்பெய்
கான்மலர்த்துணரு மணியும்விநோதா
காவியிற்பெரிதுதோய்கலைத்துறவர்
காரியத்திலனு தினமுயல்வோனே
காகமொத்தினமதோடொருப்படும்வி
காதமற்றகுண முடையவர்பாகா
கால்பெறிற்கதியெனுவுழைத்தசில
காமியத்தவரு மதுபெறநேர்வாய்,(உஅ)

காருமட்குமதியீகைகற்றுளம
காரதர்க்கினிய வுதவிசெய்வோனே
காசிமுக்கியமெனுநடப்பவர்கள்
கால்வலிப்பயனு மினிதருணேயா

காகளத்தைநிகர்தாள்படைத்தசிறு
காரிகைத்திரளும் வழிபடுநாதா
காணியுற்றபடிகோடிபெற்றநிலை
காணுமுத்தமர்கள் கருதுசகாயா
காய்சினத்தகுவராதியர்க்குமதி
காரமுற்சொல்சில நலமுதலீவாய்
காசினிக்கிடர்செய்வார்களைப்பெரிய
காளிகைப்படைக ளுணவடுகோபா
காமுகக்குழுவின்மேயபத்தர்கள்வி
காரமற்கவிழை யினுமுனியானே
காழகத்தையிகழ்சாரணர்க்கொலைசெய்
காழியிற்பனவ னனையர்சொல்வீழ்வாய், (௬)

மாவசிக்குமுரநாரணற்றுதிசெய்
வார்தமிழ்ச்சொன்மறை யெனின்மகிழ்வானே
வாரணக்கடவுளாவழுத்துமொரு
மாதுசொற்படிபல் வகைசெயுமார்வா
வானகத்துமலர்பூமியிற்கொணரு
மானுடைக்கிளிகொள் குகனெனவேநான்
வாழிசெப்பிடனுமியானனைத்துமென
வாய்திறக்கவரு மருமையுளானே
மாகமுட்டுமிருஞ்சமுற்றிடல்செய்
வார்கதிர்ச்சுடரை வழிபடுமேலோர்
மாதிரப்பகுதிதோறுமெச்சுமறை
வாசகத்தின்முடி வினிலமர்வானே
மாதரிக்கடிமையாமவர்க்குளிழி
மாமிசப்பிரியர் தமையணையானே
மாசறுத்தபரயோகமுத்தரது
மானதப்படிபல் வடிவுகொள்வோனே, (௯௰)
மாரியிற்குறைவில்வேய்வனத்திடைமுன்
வாதுசெப்பொருவ னிகல்களைவானே
மால்வரைத்தலையிலேறிமுற்புவியின்
வாய்விழிற்சிறிய வுயிர்கவரானே
மானிடப்பிறவியாமென்முற்பவமொர்
மாநதிக்கிடையெ னிடமொழிவோனே

மாசுணத்திரளனுளைவிட்டென்மன
வாதனைக்குரிய வசைதருவானே
மாழ்குறப்புவனியோர்களைத்துயர்செய்
வானுடுப்புரையு மவர்குலகாலா
மாயையிற்றலைமையானசத்திபெறு
மாழையிச்சைமுழு தறவினைவானே
வாழைசுற்றுதிருவேரகத்திலொரு
வாறுரைத்தமொழி களுமறவானே
வாகுவெற்றிமுதலானபொற்புறுமொர்
வாகனத்திலெதிர் வருமிறையோனே. (ரு)



தனனதந்த தத்தனத்தான தனனதந்த தத்தனத்தான
தனனதந்த தத்தனத்தான—தத்ததாகு.

இறையுமுன்றனக்குரித்தாகி
வழிபடுந்தவத்தைவிட்டாசை
யெனும்விலங்கினிற்படித்தீமை கெட்டிடாதோ
விடிமுழங்கலொத்தசொற்பாடல்
பலவனைந்துசெப்பிடற்கான
வியலுணர்ந்துமத்தநத்தீன முற்றலாமோ
விருபிறங்கலொத்தெடுப்பான
முலைதிறந்தணைத்தணைத்தூடு
மிளமடந்தையர்க்குளுற்றோர்மை தப்பலாமோ
விதுவதென்றுரைத்துரைத்தேசு
மதமனந்தமுற்றநிட்டூ
ரெவர்களும்பகைத்தெனைப்பேச வைக்கலாமோ
விணர்சொலிந்தியற்றுநற்பூசை
விதியுணர்ந்தசித்தரைப்பாழி
விரையும்வண்டர்சற்றுமொப்பாமை யிட்டதாமோ
வெழில்பெறும்பசுக்களுக்காக
மலைசுமந்தகைத்தலத்தானை
யிடையனென்றதுட்டரொப்போர்மி குக்கலாமோ
விருநிலந்தவிப்புறத்தீமை
பலசெய்கின்றவற்பரைச்சாடி
யிணையில்வென்றிபற்றுமற்றோளர் மட்கலாமோ

விமைபொருந்தலற்றகட்டேவர்
புடைநெருங்குகற்பகக்காவி
லியலுறுஞ்சுகத்தைநத்தார்த விக்கலாமோ, (ஞ)

விபமுகன்றனைத்துதித்திடில்
கயிலையின்கணுற்றநற்றாய்சொ
லினைவிதண்டவித்தைகற்றோர்பு ரட்டலாமோ

விலகுருங்குமக்குவட்டோடு
நிகருநங்குகற்பழிச்சாரு
மெமனைவென்றதொத்துமிக்கோகை செப்பலாமோ

விடர்தவிர்ந்தசத்தியத்தோர்கள்
பலர்நடுங்குறப்புலைப்பாவ
மிகநிறைந்துதத்துமிக்கோர முற்றறாதோ

வெழிலிவஞ்சகத்தினிற்சீத
மழைசுருங்கவிற்கலிக்கோடை
யெழுதலின்றியெத்தலத்தோரு நட்புறாதோ

வெரியுமஞ்சும்வெப்பமிக்காரு
மிடியொழிந்தடுத்தவர்க்கியாவு
மிடுபெருங்களிப்பெண்மெய்ப்பேறு பெற்றிடேனோ

வெதிரில்வந்தழற்பொறிப்போலு
மொழிபகர்ந்தசத்தியப்பேயி
லிகலிடுந்துடுக்கருட்கோப மற்றிடாதோ

விசைவிழைந்துழைத்திருட்போலும்
வசைமலிந்துதத்தளிப்பாரு
மெனதுசஞ்சலப்பெருக்காழி வற்றிடாதோ

வினியசெந்தமிழ்ச்சொலுட்சார
மறிவரும்பிணக்கர்கற்றோரி
லிதயநன்குவக்குமுற்சாக நிற்கலாமோ, (வ)

றைவிளம்புசொற்களிற்கோது
களையும்வென்றியுற்றசிற்கோலர்
மனிதமொன்றிகத்துதித்தாட முற்செய்தாயே

மறுவில்கங்கையிற்செலுத்தோட
மதனிடம்பிறக்குநற்பாலன்
வனைதரும்பல்சித்திரக்காதை யுற்றிலாயோ

மதுரவிங்கிதச்சொன்முற்றோரோர்
கலைமடந்தையைச்செயித்தார்வ
மருவுசங்கரற்கருட்பேற ளித்திலாயோ

மனமறிந்தசற்குருக்கோப
மதின்மெலிந்தளக்கருக்கேகும்
வயிரநெஞ்சனைத்தடுத்தாள நத்திலாயோ

மதுரையம்பதித்திருக்கோயி
னடுவிருந்தவிற்பனக்காரர்
மதமழிந்திடச்செய்முப்பாலை யொப்பிலாயோ

வளியயங்கபுத்திரற்கீடில்
பரிதிவிஞ்சைசெப்பிடப்பார
வடிவமுங்கொள்பெட்புறக்காத லித்திலாயோ

வழுதிதன்பணப்பொதிக்கார
னொருகுருந்தையிற்றொழப்போயு
மலியும்வஞ்சனைப்பரிச்சேனை விற்றதேனோ

வரைபொரும்பெருத்தகற்றூணோ
டரியிலன்றிடத்தவித்தானை
மடிவிலின்பமுற்றுயப்பேணல் பொய்ச்சொலேயோ

வளர்தடஞ்சிறைப்புனற்காழி
நகரின்முன்றகப்பனைத்தேடி
மறுகுமைந்தனுக்கருட்பால ளித்ததேனோ

மணமுயன்றிடத்தமர்க்கூடு
நெடியபந்தலிற்சிறப்பான்முன்
வலிதுசென்றுதிட்டுசொற்சூடி நட்டதேனோ

மதலையொன்றுறக்கமற்றாய
புளியதன்கணுற்றவக்காலம்
வகுளமுங்கொடுத்திடற்காவு ருக்கொள்வானேன்

வழுவையங்கழைத்தநெட்டோசை
யரியசந்தமுற்படப்பாடும்
வகையினுஞ் சிறப்பெனிற்பார்ந கைத்திடாதோ

மகளிர்கும்பல் செப்புமொப்பாரி
நடுவிழும்பிணத்தின்முற்பூசை
மகிழவுஞ்செலற்புதத்தேவன் மறுற்றுளானோ

வணிகமின்கையற்றிடக்கேள்வன்
முனியுமன்றதைக்கொடுத்தாள
மயிலிவர்ந்துபொட்டெனப்போய சித்தன்வேறே

மறுவுடம்பெடுக்குமச்சீரு
மறிவரும்பிணக்கர்பற்றின
வழியினுஞ்சில்சித்தியற்றிடு தொட்டிலாயோ

வதனமும்பல்விற்படைத்தோரு
மிருபதங்கண்முற்சொல்பொற்பியாவும்
வருதல்கண்டுவக்குமெய்ச்சேவை நித்தமீவாய், (௭)

கறையொழிந்தபுத்திவித்தார
முறுபெருந்தவப்பிடிப்பாளர்
கருதுசுந்தரத்திருக்கோல மிக்குளானே

ககனமொன்றும்விட்டுநற்பூத
சதுரம்விண்டுகொக்கரித்திறில்
கலகமுஞ்செய்புத்தரொப்போரு நத்தவாழ்வாய்

கதிருமிழ்ந்தபொற்பணிச்சால
மணியுமின்கள்சுற்றிடப்போர்செய்
கழைமதன்கருத்தினுக்கூடு நிற்கநாணாய்

கரியகுன்றெனப்பகட்டேறி
நெடியதண்டெடுத்தடித்தாவி
களைவதஞ்செய்தூர்க்குணத்தானு ளத்துமோவாய்

கதிதருந்திறத்தினிற்கூடி
யொலிசெய்மந்திரத்தைமுற்கூறு
கமலபுங்கவர்க்குமிக்கார்வ மிட்டநேயா

கடுவடைந்தபற்கண்மிக்காரு
நெடியவங்கதத்தினிற்பால்கொள்
கடலிடங்கிடக்குமைக்காம ருற்றகோவே

கனலெரிந்தபொற்பெனப்பார
விடையில்விண்டலத்திலுற்றுசில்
கனவரங்கள்பற்பலர்க்கீயு மத்தனானாய்

கரிமுகம்படைத்துணற்கான
வுதவுதொண்டரைத்தொடுத்தாளல்
கடனெனன்பருக்குமிக்கோகை யைச்செய்வோனே()

கலசமொன்றிடத்துதித்தானை
யனையரின்புறச்செயக்கோதில்
கவினுறுஞ்சிகிப்பரித்தோகை யிற்குணோர்வாய்

கடிமலிந்தபுட்பமுட்டாழை
யடியின்மைந்தனிட்டகிட்டுரி
கதையைவெண்சொலுற்றநற்பாட லொற்றையாலே

கழறிவென்றிமுற்றுமற்றேர்ள்கொள்
செழியன்முன்பொர்பத்தனுக்கேசில்
கனகமன்றளித்திடத்தாயெ னச்செல்வானே

கடவுளொன்றென்மெய்ச்சொலொப்பாது
பலவெனுஞ் சழக்கர்மிக்கேசு
கவிவனைந்துனைக்குநட்போனை விட்டிடானே

கலகலென்றிலேத்தசொற்பேசி
யமணர்தங்கசப்புடைப்பாடல்
கனியுமின்புடைத்தெனத்தேறு மற்பராவார்

கதறிநொந்தழச்செயற்கான
முதன்மைமந்திரச்செபக்காரர்
கவியைவென்றுவப்புறக்காணு நற்குணலா

கயிலையங்கிரிக்குவட்டேறி
விழமுயன்றமெய்த்தவற்கீடு
கழிபெறும்பவுத்திரப்பேறு செப்பினனே

கணைசொரிந்தனுத்துவிற்காலு
மகுடமங்குடைத்துவிட்டோடொர்
கவுசிகன்குறித்தவப்பேர்கொ டுத்தநாதா, (ஞ)

குறையிரந்துழைக்குமிப்பேறு
பெறுதலின்றிமுத்தியிற்காசை
கொளுமடம்பெருத்தசிற்றுள ருக்குமாவாய்

குருபதம்பிறப்பறுத்தாளு
மருமருந்தெனக்கொள்கற்பாளர்
குதுகுலங்கொடுத்தெனைப்பேணு தற்கொல்கானே

குறடணிந்தபொற்பதத்தோடொர்
கனவில்வந்துமித்துயர்க்காடு
குலையுமென்றுரைத்தணைக்காதொ ளித்துளானே

குகுகுவென்றகுக்குடக்கோலம்
வரைதருங்கொடிப்புகழ்ப்பேசு
குணமதுமபொதுப்படப்பூர்வை யிற்செய்தோனே

கொலைதவிர்ந்தசத்துவச்சீல
மதுபொலிந்துதத்துவச்சோதி
குழவியென்றுசெப்பவெட்காரை முத்துவோனே

குரகதங்களிற்பல்பொற்றேரின்
மதகயங்களிற்செல்பொற்பாளர்
கொடைநினைந்திளைக்கவொட்டாத சித்தியானே

குருதியுண்டெதுக்களித்தாடு
மலகையுந்துதித்திடப்போர்செய்
குனிதருஞ்சிலைக்கரத்தார்வி ருப்புளோனே

கொடியிடம்பிணித்தமைப்பீலி
யணியுமங்கையிச்சையிற்றழோர்
குறவனென்றுமத்தினத்தாடும் வித்தையானே, (ஙரு)

கொதுகொதென்றகட்குடித்தாடு
முழவர்தங்கிளைச்சியர்க்காசை
கொடுநெருங்குநெற்பணைப்பால்வ ரப்பின்மேலே

குடவலம்புரித்திரட்சாடு
மனமலிந்தபொற்புவற்றுத
குருகைநண்பனைத்தெனக்கூடு தித்துவானோர்

குழுவறிந்துமெச்சிடப்பூமி
யதிகவின்பமுற்றிடப்பேசொர்
குறிநடந்திடச்செய்விக்காத குற்றமேயாய்

கொதுகினங்களொத்திறப்பாகு
மனிதரஞ்சிடற்குறித்தேபொய்
குளறும்வண்டர்கிட்டிலெட்டாத பெட்பினனே

கொடுவிடங்கொள்சித்திரப்பூர
மிசையிவர்ந்தவித்தகப்பாவை
குதிகொளுந்தவத்தர்சொற்பார மட்டிலானே

குரவைவிண்டுகொட்டுகைக்காம
ருடையபெண்கண்முற்படிற்றீர்வில்
குணலைகொண்டுபிற்செனட்போரு மொப்புதேவே

குருடருஞ்சிரித்திடக்கேடி
லுலகைமுன்படைத்துவைத்தாளோர்
குழகனின்றெனற்பர்லுய்ப்பாதி கட்குமூலா
குரிசிலென்றமுத்தமிழ்ச்சீர்கொள்
புலவரொன்றினிப்பிறக்காத
குரவரொன்றதிப்பவர்க்கான சத்தியோனே. (௬)

தத்தனத்தனன தத்தனத்தனன
தத்தனத்தனன—தத்தனதனரு.

சத்தியத்திறமையற்றபொய்ப்புலவர்
தர்க்கமிட்டெனையெ திர்த்திடன்முறையோ
சத்துவக்குணமிறுட்டைக்கறுவு
சக்கரக்கையர சற்செயலரிதோ
தத்துவப்பொருளெனச்சொனிற்பாவு
தற்கொரொட்பயன ளித்திடிவிழிவோ
சற்பமொத்தெழுசினத்தனைத்தழுவு
தத்தறச்சிறிது ளத்திலெணுவையோ
சட்குணக்கடலெனத்தொனித்தபுகழ்
சற்றவிர்ச்சிதர வெற்றிநல்குவையோ
தத்திரத்துடனடுத்தடுத்துமனி
தர்க்கிதச்சொன்மொழி யச்செயலறமோ
சட்டெனக்கடுகெடுத்தெதிர்த்தறிவு
தப்புசொற்பகர்கு ணத்தைவெலுவனே
தக்கையிட்டசெவியச்சியர்க்கிறைவர்
சத்திரத்தினுமி ரப்பதொல்கிடனே, (௩௰)

சக்குமிக்குறமொருத்தனுற்றநகர்
தர்ப்பணத்திலொளிர் முத்தியிலுயர்வோ
சப்பெனச்சுவையிலைத்தசொற்கொள்கவி
தைத்திரட்குமுன்வி ருப்பமெய்திலையோ
சட்டுவத்திலொருபற்றுமற்றுறுத
வத்தனைப்பிறர்ந கைப்பதுமியல்போ
தத்தலைக்கடலுடுத்தமற்புவிசெய்
சக்கிரிக்குமெனி டத்திகலுளதோ

சட்டைவெப்புறுதினத்துமிட்டுளச
மூக்கர்மிக்கடர்த ரச்செயலெவனோ
தட்டறப்பசுவிணக்தையுட்கொள்பவர்
சச்சறப்பொரவி னைத்ததுபிழையோ
சட்டமற்றநடைதொட்டதூர்ச்சனர்க
தத்தினுக்கிடைத லெக்கணமறுமோ
சட்டியிற்பயிரக்குமெய்த்துறவர்
தத்தையிற்குழுவு நற்றினம்வருமோ, (௨)

பத்தியிற்பெரியவுத்தமர்ப்பரவு
பக்குவத்தெனைய மைத்திடவலையோ
பட்சணத்தொடமுதைக்குவித்துன்மிசை
பற்பல்புட்பவகை யிட்டதெணிலையோ
பட்டினத்தடிகண்முற்சொல்சற்சனர்ப
தத்தினைக்கருது புத்தியுமெளிதோ
பைத்ததுத்தியரவுட்கொளிற்பதைப
தைக்குமத்தவளை யொத்தழவிதியோ
பட்டினிக்கிடைதவித்துநத்தியப
டிக்கருட்டுளிதெ றிக்கிலையடமோ
பச்செனக்குலவுபொற்புடைத்தண்முகில்
பத்துலட்சமுமு னக்கிணைபடுமோ
பற்குனற்பொருவுசிற்சிலர்க்கவிர்ப
டைப்பெருக்கமும ளித்ததுகதையோ
பற்றறுத்தபரமுத்தருக்குளவர்
பட்சமெய்ப்படவி லைத்தனையலையோ, (௨௰)

பப்பரப்புளிகிகர்த்தமட்டிகள்ப
மூக்கமுற்றுவகை யிற்படிகுவனோ
பற்றலர்க்கெமனெனக்களத்திலடர்
பட்டவர்த்தனர்த லைக்குவைபலதோய்
பப்புகட்புவியிடத்ததட்சிகரர்
பட்டிரத்தநதி யிற்செலல்கொடிதோ
பட்டமிட்டவணிநெற்றிமத்தகய
பத்திபெற்றவரு னக்கினியவரோ

பட்டுடுத்தாலவும்விப்பிரக்குலர்செ
பத்தினிற்பிரிய முற்றொருவினையோ
பட்டடைக்கிடைநிறைத்தபொற்றிரள்ப
டிற்றுளைச்சிலர்பெ றச்செயனலமோ
பற்பமிக்கணியுமெற்கொர்கற்கிணறு
பக்கணத்தரறி யத்தரல்பிறரோ
பட்டிமைக்குணமறத்தவிர்த்தெனது
பக்கலிற்றினம்வ ரத்தடையுளதோ, (௯)

சித்திரத்திடைவசித்தொர்மெய்ச்செயறெ
ரித்துமிப்படிவ ருத்தொருதலைவா
செக்களைப்பொருவுகற்கலைக்குரிய
சித்தர்நித்தமும்வ ழுத்தொருபெரியோய்
செப்பறற்கொளுநதிக்கண்முற்பிறவி
செப்பிமெய்ப்படவ தட்டியகிழவா
சிக்குமுக்குறுமதப்பிணக்கரது
சிற்றிணக்கநழு வுற்றுயவருள்வாய்
தித்தெய்தித்திமியெனக்குதித்தசிவ
சிற்பரத்தையுணர் விற்பனர்தவமே
திக்கனைத்தையும்வயிற்றடக்கியதி
ருட்டுளைப்பவர்த மைப்பிரிவரியாய்
திப்பியத்தணிமருப்புறப்பலபல்
செக்கடிக்கணும்வ சித்திடுமுதல்வா
செச்சைமிக்கலர்குறிச்சியிற்குறவர்
திட்டுசொற்கொடுமு வப்புறுசிறுவா, (௰)

சிற்றிடைக்கவுரிமுற்சொலுத்தமிகள்
செற்றமற்றவுரி மைக்குரியவனே
செட்சிறைக்கழுகுதுய்ப்பவற்றையிகழ்
சிட்டர்நட்டபரி திக்கிடையமர்வாய்
சித்தினைப்பலவெனச்சொலித்தளர்தி
யக்கமுற்றவர்த மைத்தழுவுகிலாய்
சிக்கமற்றருமைமக்களைக்குறைசெய்
திக்கருக்குமுண விட்டுளகொடியோய்

தெப்பமொத்தவிர்குருக்கொலைப்படல்சி
றப்பெனற்பர்தம்வி ருப்பமுமுடையாய்
திட்பமிக்கவயிரக்குணத்தொடுதி
கழ்ச்சியுற்றபண்ம தத்தினுநிறைவாய்
செய்த்தொழிக்கண்வளைமுத்தமிக்குமிழ்செ
ழிப்புடைப்பலத லத்தினும்வளர்வாய்
செட்டுமுற்றுகயமைக்குணக்கடையர்
தெக்குடைச்சமன்வ லைப்படவிடுவாய், (௯)

மெய்த்திருக்கயிலையொத்தபற்பலவி
தப்பதத்தையுயிர் கட்கருள்பொதுவா
விட்டுணுக்கலையினிச்சைமுற்றறவி
டுத்தவர்க்குநிலை யக்குழியிடுவாய்
வெற்பினுற்றவன்முகத்தசட்சமயம்
வெற்றெனப்பகர்சி றுக்கரைவிழையாய்
விட்புலத்தரிவையர்க்கலக்கமுயல்
விப்பிரப்பதர்ம திக்கருமுதலே
வித்தைமுற்றுறுமருட்கடற்றிவலை
வெட்டுகைத்தருவ ருக்குநல்கியவா
வித்துவத்தலைவனத்தனத்திறகு
மெத்தெனக்குலவு றச்செயும்விபவா
வெப்பமக்கினியிடத்தமைத்தறன்மி
கக்குளிர்ச்சிமரு வச்செயும்விரகா
விக்கல்கக்கல்குளிர்சத்திபித்தசுரம்
வெட்டைமுற்பகர்பி ணித்திரள்களைவாய், (௯௰)

வெட்கம்விட்டவமணர்க்கழுத்தலைவி
றைக்கவைத்தவனி யற்றெருடைமிலைவாய்
மித்தையைச்சினவுபுத்திரற்புளிவி
ருட்சமத்தியினு யச்செயும்விகிர்தா
வித்தெனச்சதுவகைப்பொருட்டொகைவி
தித்தவட்குநொடி யிற்கதிதருவாய்
விற்றுவர்ப்பொருமுகக்கிளிப்புலவன்
மெச்சுசொற்றிகழ்தி ருப்புகழணிவாய்

மிச்சமுத்தமிழிலக்கியக்கடல்வி
ளக்குநற்சிசுவ ளித்தவண்மையதே
மிற்கடுத்தவிடையுற்றபுத்திரியில்
விற்பனப்பனவ னுக்கழுதவொய்
விச்சுளிப்புலவர்சொற்படிக்கெணில்வி
யப்பியற்றும்விர தக்குணதரனே
வித்தமிக்கவரசர்ச்செயித்துமகிழ்
வெற்றியிற்குலவு சற்குருபரனே. (எ)

---

தனனதனதனனதன தந்தந்தனத்தனன
தனனதனதனனதன தந்தந்தனத்தனன
தனனதனதனனதன தந்தந்தனத்தனன—தனதான.

பரமமெனுமொருபொருளேயின்றென்றுரைப்பவரு
முணவினெடுதுயில்வரவுகண்டின்புறப்பொருவில்
பனிருசமயருநடுநடுங்கும்பிழைப்பகுதி
யறியாதோ

பசுவுமரையயமுயலுடும்பும்பல்பட்சிகளு
மறவில்வளர்கயன்முதலவுந்தின்றுவக்குமவர்
பசியவிலைகனிவிதையருந்துஞ்சிறப்பினிடை
மருவாரோ

படிறுமொழியளவறமொழிந்தம்பொனிற்பெரிய
துணைசிறிதுமிலையெனநினைந்திங்குழைக்குமவர்
படியரசுபெறினுமதுவும்பென்றுரைக்குமுணர்
வடையாரோ

பழகியவரிடமுமதிவஞ்சஞ்செய்தெட்புரையு
நலமுமிலதுயிருமிவுடம்பென்றறத்துணிவு
படுகொடியரனைவருமடிந்தன்பருக்குவகை
பெருகாதோ

பலவுடலொருயிர்கொளுநிசங்கண்டுரைத்திடவு
மறிவிலர்சொல்விதிமுழுதொழிந்தம்புயத்தில்வரு
பனவனெருசதுமுகம்விளம்புஞ்சொலெத்திசையு
நிலவாதோ

பரவையின்முன்வருமமுதுமொஞ்சுஞ்சுவைச்சொனய
மறியுமவர்தமைவிலைகொளெண்சந்தமுற்றகவி
பகரவலபுலவர்களுநொந்தஞ்சுறச்செய்மிடி
யொழியாதோ

பறிதலைகொளமணரதுபின்சென்றுமுத்தமிழு
மறிவமெனுமுவகையிலழுந்துங்குணச்சிறுவர்
பனையினிலுமுயர்கெருவஞ்சுண்டமச்சமென
வுழலாதோ

பறைதிமிலையுருமிமுழவங்கொம்புதப்பனைய
முரலமணமுயலெயினருங்கந்தமுற்சொல்வன
பருகவமரருநிணமிகழ்ந்தன்பொரப்புமவி
நுகராரோ, (௬)

பருமிரதகசதுரகமொன்றும்படைக்கடலி
னடுவடைவையெனமுடுகியுண்டுண்டுவக்குமவர்
பதிதர்குடைநிழலொருவுமின்பந்தரப்புவிமின்
மகிழாரோ

பவளநிறமுறுதிருமினெஞ்சஞ்சலித்தனுவு
மருளினுடனறமிலவர்தம்பங்கிலுற்றமிகு
பருவரலின்முழுகுவதொழிந்தின்சொலுத்தமனை
யணையாரோ

பவனியெனவுலகைவலம்வந்தென்றுமெத்தலமு
மிருள்கழியுமொளிபெறுநலந்தந்தெறிக்குமொரு
பரிதியெதிர்தொழுதெழுபெருந்தொண்டருக்குவகை
பொலியாதோ

பனிமதியமறுகிதழியம்பங்கதத்திரள்வெ
ளிறகணியுநெடியசடைநம்பன்றனக்கினிய
பணிபுரியுமவனையிகழுங்குண்டரக்கிரம
நசியாதோ

படமனையகடிதடமுறும்பெண்களுக்கிறைவி
யெனவிமயமலையில்வருபைங்கொம்பினுக்குநிண
பலியும்வெறிதருபுனலுநன்றென்றிசைக்கும்வசை
தவிராதோ

பணிமுதுகினடமிடுகருங்கொண்டலைப்பொருவும்
வடிவமொடுபுவனிமிசைவந்தன்பருக்கருள்செய்
பகவனதுசமயமிருபங்கென்றபொய்ப்பகைமை
மறையாதோ

பரிவுமிகுமணவரையினும்புன்பிணக்கிரியை
புரியுமிடமதனிலும்விளங்குந்தனிப்பெருமை
படர்பெரியகணபதியவிர்ந்தன்றுரைத்தமொழி
பலியாதோ

பரணிலுறுகுறவனிறைமுன்கும்பிடற்கிசையு
மொருகிழவனெனின்மகிழ்கடம்பன்புயத்திலமர்
பழையகிளியெனவெனையுறிங்கெம்பருற்றவரு
மதியாரோ, (வ)

கரவுபடுபுலவர்களெனுந்தும்பிகட்களவில்
பயமுதவுமரியினமெனும்பண்பினர்க்குள்வளர்
களிமுழுதுமடுசரபமென்றம்புவித்தலையி
லுலவேனோ

கருணைமுதலியகுணமனந்தம்பொறுத்துநகர்
தொறுமனைகடொறுமமுதிரந்துண்டுவக்குமவர்
கணமொடளவறுபலதலங்கண்டிசைக்கவிகள்
பொழியேனோ

கலியனெனுமொருகொடியனெஞ்சநடுக்கமுற
மிடியெனுமொராலகையெரிபஞ்சென்றறப்பொருவில்
கருணன்முதலினர்புகழ்மெயென்றிம்பர்செப்பநித
முதவேனோ

கயிறுநெடுமலையனையதண்டும்பிடித்தொர்பக
டதன்முதுகிலிவர்நமனுமஞ்சும்படிக்கிரண
களநடுவின்மிகுவயவருங்கும்பிடப்பெருமை
புனையேனோ

கரியமலைபலபலபிடுங்குங்கரத்தநும
னுலகதனிலுளசிறுகுரங்கென்றுதித்தெனது
கனவினுவலியவநுபவங்கண்டளிக்கடலின்
முழுகேனோ

கடல்பொருனைமுதலியசலங்கொண்டசொற்றொடையு
மழலிலுறுபனுவல்களும்வந்திங்கெய்தக்குறைவில்
ககனநகரினர்மலர்சொரிந்தங்குரைக்குமிசை
யமையாதோ

ககபதியின்மிகும்விரைவுகொண்டந்தரத்திலுள
வுலகுதொறுமுலவியவராங்கங்குசெப்பவெகு
கதைகணடவியுமலயயன்றந்தனிற்சிறிது
வசியேனோ

கதிர்மதியமுடுவினமுதிர்ந்தண்டமத்தனையு
முடைபடினுமனுவளவுதுன்புந்தொடற்கரிய
கதிவடிவமெனமறைவிளம்புன்பதத்தினிடை
புகுதேனோ, (வஹ)

கப்டமுறுமொருபகைவனன்றங்கெனைக்கொலைசெய்
துவகைபெறும்விழைவொடியர்குன்றென்றுறுக்கியடர்
கடகரியையிடனுமதிற்றஞ்சல்செப்பவரு
மவன்வேறோ

கவின்மருவுதிருமலையினந்தந்தனிற்சிறிய
வுடனுருளவுதிரமொழுகும்பங்கமுற்றும்வரு
கழுகுணுமுனுயிருடனெழும்பண்பளித்தபய
னிதுதானோ

கனலனையவருணவரையின்செம்புலிக்கெனுட
னுணவுபடுதழியில்விலகும்பண்பதிற்கொடிய
கனமிடியினிடைவெருவிதஞ்சஞ்சலப்படவும்
விடலாமோ

கயிலையிறைவனைவழிபடுஞ்சுந்தரற்கொவொரு
பதிகமொழிதருபயனுமங்கங்குறச்செய்துள
கலைமகளெனளவினுமிவஞ்சஞ்செயசசெயனு
முறைதானோ

கனியுமமுதமுமறுவில்கண்டுங்கலப்பனைய
மதுரமொழுகியமொழிகள்கொண்டிங்கியற்றெனது
கவிதைகளினுனதுரிமையொன்றுங்குறிப்பறிதல்
பழுதாமோ

கடினபுளகிதகளபகும்பங்களைப்பொருவு
குசயுகளமகளிர்தருமின்பங்கசக்கவெழு
கவைபுரளவருமறுபவந்தந்திடிற்பெருமை
குறைவாமோ

கலசமுனியொருகனவில்வந்தென்கரத்தினிது
தருபொடிகொளிலைபலவும்வம்பென்றிடிற்பலபல்
கடவுளருமவுணர்கலகங்கொண்டுதட்டழிதல்
பிழையாமோ

கலபமயில்பெரியவெலிவெண்சிங்கம்வெற்றிவிடை
யரவநுகர்கலுழனெனுமொன்றொன்றிடத்தும்விழி
களுமனமுமகிழவென்முன்வந்துன்கடைக்கணரு
டருவாயே, (௯)

ரதசமரசமவுனமொன்றெண்குணப்பிரம
மலதுபொருளிலையெனவுணர்ந்துந்துதிக்குமவர்
சகள்மென்றினையினுமகண்டம்பலித்துமகிழ்
பயனீவாய்

சரவணசண்முககுமாருன்றங்களிற்றிரிபு
முருககுறமகள்கணவவென்றிங்கிதத்துதிசெய்
தமியனையிவணமுழுதுமொன்றென்றிசைத்துருக
விடுவோனே

சலதியுறுபுனன்முழுதுமுண்டுங்கொடுத்தளவின்
முனிவர்தொழுமிறையெனுமொர்துங்கம்பொறுத்துவளர்
தமிழ்முனிவனனையவராிந்தன்பருக்குரைசெய்
பொருளானாய்

தவமுடையபெரியவர்களுஞ்செந்தமிழ்ப்புலமை
யுடையவருமிரவலருமுன்சென்றிரப்பினுமொர்
தவிடளவுமுதவுகிலர்தஞ்சிந்தையெட்டரிய
நிலையோனே

சபலமனமுறுமினொருர்கண்டுங்களிக்குமெழில்
வனிதையர்களூரமிசையெழுங்கொங்கைமுட்டமெலி
தகையினிடைதளாவுறுமென்ன்புந்தொடற்கிசையு
மெளியோனே

சகரர்தருபுதல்வனில்வருந்தும்படிக்கெனது
கனவினிடைபலதடவையுண்டுண்டறற்பொலிவு
சவியலெனுமொழிவழிசகங்கண்டகற்கிணறு
தருவோனே

தவளவுததியினெடியகுன்றென்றமத்துமவிட
வரவமெனுமொருகயிறுமொன்றும்படிக்கமரர்
தருவொடுகடைதருதினமபண்டமிக்குதவு
கொடையோனே

சதுமறைசொலியவதனமைந்தொன்றரற்கொவொரு
முகமுமவிழியுளதெனினும்வம்பென்றதட்டியிகல்
சடமதிகொள்பவர்களைவியந்தொன்றுநர்க்குமுனை
விடுவோனே, (௩௰)

தழல்விழிகளுமிழவருகந்தன்றனக்கதிலை
யெனுமவருமெனையிகழல்கண்டுமபொறுந்துமிரு
தருமமுடையவனெனவிளங்கும்பெருத்தமடி
யுடையோனே

தகரனையவுயிர்களையுடன்கொண்டலைத்துமக
வினுமுரிமையுறுதிறமறிந்துந்தினக்கொலைசெய்
சித்தியினருமனைமனைவிபொன்கொண்டுமக்கள்பெறல்
புரிவோனே

சடைமுடிகொண்முனிவர்களையுங்கொன்றுகற்பில்விலை
மகளிர்குலமுவகையுறல்கண்டொண்பயிர்க்கிடமி
றருசிறைகொள்கொடியராசுங்கண்டிருக்குமதி
பொறையோனே

தரையின்மிசைநகர்தருமெறும்புங்கொலைப்படுத
லொழியமயிலிறகுகையிடங்கொண்டகற்றுமவர்
தமதுநிலைதவறனுநெருங்குங்கழுக்கணிடு
சினமேயாய்

தமரிவரொனுறவரிவரொன்பெண்டுமக்களிவ
ரொனதுமனையெனதுபொருளென்றிங்குரைக்கவரு
தளையனையபலபிறவியின்பந்தமத்தனையு
மடுவோனே

தலையணையுநனையும்வணமென்கண்புனற்சொரிய
வெருகனவிலரியவடிவங்கொண்டுரைத்தவகை
தவறுகொலெனினைவுமென்மனங்கொண்டுதட்டழிவ
தறிவோனே

சகடமெனவருமவுணனன்றங்கறக்கறுவு
மலரடிகொளொருவணிகர்தம்பொன்றுமுத்திநெறி
தனினுயர்வையெனவுமுன்மொழிந்தென்றனிச்சையினும்
வளர்வோனே

தபனனொடுபலநலமொழிந்திங்குழைக்குமெனை
யயின்முருகனமிசமெனவுஞ்சிந்தையிற்குளொரு
சபையறியவுரைசெயவுநஞ்செந்திலிற்பனவன்
வடிவானாய், (௫)

நரவடிவமுறுமிருகர்தங்கும்பல்செப்புபுகழ்
கருதிமனமறிதரநின்முன்பந்தரப்புழுகு
நவில்கொடியரொமனுலகிடந்துன்புறப்பெரிது
முனிவோனே

நளினமலர்வருபிரமன்முன்றந்தபுத்திரனை
யனையர்கருணையையெளிமையென்றங்கிகழ்ச்சிசெயு
நகுடனனையவர்விலகருந்துன்பமிக்கடைய
நினைவோனே

நரைதிரையிலுடல்கொடுவிளங்கும்பல்சித்தர்களு
மறதியுறவளவில்பசுவுக்கன்றுமிப்புவியி
னலிகுவதென்மனமறிதருந்துன்பினைப்பெரிது
தருவோனே

நறியமலர்களபமணிபுங்கும்பமுற்சொல்பல
திரவியமும்வகைவகைதெரிந்தன்பினிற்கிரியை
நடவுமவர்மனவெளியிடங்கண்பொருத்துதொறு
மவிர்வோனே

நளிர்குவளைமலர்மலர்தருந்தண்பணைப்பொலிவு
குலவுகழைவனமதிலொரன்பன்றனக்கெனது
நகுமுடலொர்மதலையில்வரும்பண்பினுக்குமொரு
துணையானாய்

நதிபதியையுமைதிருமின்வெண்பொன்சசிப்பெண்முத
லினரறியவுடையிலணியுங்கொம்பளித்தமகர்
நசையினொடுவசைமுழுமையுந்தயங்குதற்கொரிட
மனையானே

நரியுமதிசயமடையும்வஞ்சம்படித்தகில
முழுதும்வசமழிவுறுமவிதங்கண்டியற்றுமவர்
நசியமுயல்பவர்களைவிரும்புந்திருக்கருணை
மிகையோனே

நகைவதனமறுகயவர்முன்சென்றியக்கர்பதி
யமரர்பதிமுதலியவரொன்றுந்துதித்தவாத
நடையினொடுபிறகுமலையும்புன்குணக்கவிஞர்
தமைநாடாய், (௩௰)

நடுகைநடுகடைசியரிளங்கொங்கைகட்குழவ
ருருகவவரிருபுயநினைந்தங்கவர்கருமய
னணுகுமவயனுறுமதுரையின்கணகலிற்செயிப
மதனனோ

நவையில்வழுதியுமவனுடன்சென்றபற்பலரு
மறியமலாமழையமரருஞ்சிந்திடத்தவள
நகமுறுகைதொடுபலகரும்பன்றருத்திடவும்
வருவோனே

நடலைமலிகவுரவர்பெருஞ்சண்டையிட்டரண
களநடுவிலொருபெரியசங்கந்தொனித்தமலர்
நயனமுகிலலதுபரமின்றென்பவர்க்குளது
தினம்வாழ்வாய்

நறையுகுபல்கனிவகைகளுஞ்சுண்டல்பிட்டுவடை
யதிரசமுதலியனவுமுண்டின்புறச்செய்பவர்
நமபயமுமறவருள்பெருந்தும்பியைச்சொல்பவ
ரதிசீலர்

நகிலமுறுகுயினிகர்கருங்கொம்பினைப்புலவர்
வனிதையொடுமணமுயல்கடம்பன்றனைப்பரவு
நமதுபனுவலின்விழைவுமிஞ்சுங்குணத்தொடொளிர்
குருநாதா
நயமொழிசொல்கிளியைநிகரும்பைந்தகைக்கவுரி
யருளின்வழிசமரசமுறுங்கொங்கணற்குமிசை
நணிகொளொருமுனியுருவுறுஞ்சங்கரற்குநிகர்
பலர்தேவே
நகரளவில்பலபலவினுங்கண்படைத்தவர்க
ளெதிரெதிரிலகலரிமுன்றெண்டனிட்டவரு
ணடனமிடவணுவிலணுவென்றும்பிணக்கமில
துயர்கோவே
நகரமுதலியபொறிகளைந்துஞ்சடக்கரமு
மிணையில்பிரணவமுமுமைதனபங்கின்முப்பொறியு
நரலைதுயிலரிபொறிகளுங்கொண்டுநிற்குமொரு
பெரியோனே. (௮)

---

தானதத்த தானதத்த தானதத்த தானதத்த
தானதத்த தானதத்த—தத்தான.

ஓநமச்சிவாயமுற்சொன்மூலமுற்றுநாளுநத்தி
யோதல்பற்றிமாதவத்து ழைத்தேனே
யோமலிந்தபாழ்மனந்தாடகத்தினைசைமுற்றி
யூர்முழுக்கவோடியிக்கி ளைத்தேனே
யூனினிப்பதேயெனக்கொள்பாதகர்க்குமானபொய்ச்சொ
லூழ்வினைப்பொலாமைதொட்டு ணைத்தேனே
யூதியத்தையேமதிக்கும்வாணிபர்க்குநூறினுக்கொ
ரோர்பணத்தின்மேலும்வட்டி யிட்டேனே
யூமெவெப்பமாதரைப்பராவுமற்பர்சீர்படிக்கு
முறுபட்டபாவலர்க்கு ளுற்றேனே
யூசாத்ததானபுற்பட்டாங்கிலத்தைநேர்குணத்து
லோபரைச்சதாநினைத்த லுத்தேனே
யோவியத்தைநேரசத்துவாழ்வைநித்தமாகவொப்பு
மூமர்பற்றும்வீண்முயற்சி தொட்டேனே
யோசையற்றபாழ்வெளிக்குளேகலக்காடுமுத்த
ரூகம்விட்டவாவினிற்றி ளைத்தேனே,(௯)

ஓதிமத்தன்மால்வளாக்கும்வாணியொத்தநாவலர்க்கு
மோகைசற்றிலாமையிற் சலித்தேனே
யூழியிற்கெடாததொற்றையேயெனச்சொனுலெநாக்கு
மோர்மையற்றமுடைபப கைத்தேனே
யூதையெற்றுதூலமொத்துவீண்மதத்தினையம்வைத்து
ளோரபறக்குநாள்வரக் குறித்தேனே
யோடமவிட்டமாதுபெற்றபாலனொத்தமேலவாக்கொ
வாநடக்கையேமிகபப டைத்தேனே
யூனமற்றவானகத்தையேழ்பிலத்துளேகிடக்கு
மூழலைக்கொளாதமுத்தி நட்டேனே
யூபவற்றினேடுபுற்கொலாநலத்தின்மேவலுற்று
மோவிறுக்கவாரியிற்கு ளித்தேனே
யோய்வற்பாரல்பாடல்குற்றமேதுமற்றவாவுரைத்து
ளுதடிககணையமவைதது மெய்த்தேனே
போடையொத்தநீர்வரதநார்பாறையிற்செய்கூபமுட்கொ
டோணன்மெசசவாழுமிச்சை வைத்தேனே, (வ)

மானமற்றுவேறுருநதாமீதுகுற்றமேயுனாகரு
மானிடப்பொலாகளேச செயிக்கேனே
மாமிசத்தினேடிபித்தமேவிடச்செயநீருநத்து
வாரியற்றுமவேள்வியைந்த விரய்க்கேனே
மாசில்சுத்தமானதிறறியாம்வற்றையேகனற்கண்
வானவர்க்கெனுவிடச்செய் விக்கேனே
வார்கடற்றெணீர்குடித்தகோணிறப்புருதிருக்கு
மால்வரைக்கணேகிமிக்கு வக்கேனே
மாமதத்துமாகனைத்துவாவுகொற்றமாமுகற்பல்
வாகனத்திலேறுநாக்க டுக்கேனே
வாகுபத்துநூறனைத்தவாமிகக்கொள்காரரக்கா
வாழ்வறச்செய்தாகளிற்சி றக்கேனே
மாழைவித்தையாதிபற்பல்கோடிகற்றுலாவுசித்தர்
வாசமுற்றுநாடிநட்பி யற்றேனே
மாகமொப்பிலாறெனக்கொடோர்நொடிக்குளேசமத்த
மாதிரத்தினூருநீக்தல் சுற்றேனே,(வஹ)

வாண்மருபபிஞலெதிரத்ததானவாக்கொல்சேவகத்தொா
வாரணத்தையேமுதற்று திக்கேஞெ
மாசுணத்தின்மேனடித்தநோகையிற்குலாவொருத்தன்
வாயுரைத்தபேறுறக்க ளிக்கேஞெ
மாதரிப்பெண்வாழிடத்துநாதனைதொழாததுட்டர்
மாய்வுறபல்பாடலிற்ச பிக்கேஞெ
மாயனைப்பன்மானிடர்க்குளோமிடுக்கஞ்வரைக்கும
வாதுகற்றநீயரைக்கெ டுக்கேஞெ
வாசிதொட்டதேரினிற்செல்சோதியைப்பராவுமொபயில்
வாய்மையுற்றபேர்விருபப ளிக்கேஞெ
மாளுமற்பராலமைத்ததாமதத்தரேனுமத்தி
மால்வெறுத்துளாரொனிறந மக்கேஞெ
மானதத்துளேகுறித்தவாறுசொற்பஞிமிற்ச
மானமற்றவாயசொற்கள் சொற்றுயே
மான்மியத்திஞல்வலுத்துஞானசித்தியேவிளக்கு
மாதவத்தர்சேகரத்துள் வைத்தாள்வாய், (௭)

தானவர்க்குமாவலுற்றபேறளிக்கமால்விடைச்ச
தாசிவப்பிரானெனச்செல் பெட்போனே
சாவொழித்துவாழ்வளிக்குமாவிமுற்பல்பேறளிக்த
சாகரத்தின்மாலெனஆகி டபபோனே
சாதுமொய்த்தவாசமிக்கதேன்வடித்துநீரிலுற்ற
தாமரைக்குஞன்முகத்தொ டுற்றேனே
தாழ்வில்கத்தநான்மறைக்குழாமுறைபபவாயபற்பல்
சாமிகட்குமோர்பெருத்த வித்தாஞய்
சாதனத்தின்மேல்விருப்புறுதுமுத்தர்போனடித்த
சாதனைக்குஞலரைத்தொ டுக்கானே
சாவியொத்துவேடமட்டுளார்களைத்தளாதுபத்தர்
தாமெனக்கொள்வார்களைத்த ணக்கானே
தாழைபெற்றபூவினைக்கைவாளெனக்கொள்வானைமெச்சு
தானையிற்சிலோர்களுக்கு நட்பாவாய்
தாலமுற்றவாருயிர்க்கெலாமிறப்பையீயுமற்க
தாயுதத்தனூர்வழக்கொ ழிப்போனே, (௨௫)

தானெனத்தளாதுமுற்றுநானெனக்கொளாதடுத்த
சாடையிற்சில்சீடருக்கு ணைப்போனே
தாருவெட்டுமீகையுற்றபேர்களைப்பொலாரெனபடி
சாசரிற்சொல்வார்கள்சித்த மெட்டானே
சால்புடைச்சராசரத்தெலாம்வசித்துவேதமுற்சொ
ரூபகத்துளேநிருத்த மிட்டோனே
தாமதத்தர்போகமற்றையோருளத்துளேகுறித்த
தாகமுற்றுமீதலிற்ச லிக்கானே
சாலவித்தைமோகமற்றுயோகசித்திநாடுசித்தர்
சாணையிற்கலாவெறித்தி டத்தோய்வாய்
தார்படைத்தபேர்முழுக்கவீரசொற்கமானதிற்ச
லாபமுற்றுவாழ்வுறச்செய் விப்போனே
சாரணர்க்கொல்வானொருத்தன்மீனவற்குநேருரைத்த
தாளமிட்டபாடலிற்க ளித்தோனே
சாமரத்தைநேர்செவிக்கடாசலத்தையாழியைச்சொல்
சாரமிக்கபாவெலத்த டுத்தோனே, (ஜ)

தீனரட்சகாகுறத்திகோனெனக்கனாவிலுற்றொ
சேதிசெப்பியாணவப்பெ ருக்கிவாய்
தீயையொப்பதாவிழித்தபேய்குகைக்குளேயடைத்த
தீமையுற்றபாவலற்பு ரப்போனே
சேவதைத்துணாவளர்க்குமேனியைக்கொள்பாதகர்க்கொ
டீரமுற்றசிலர்சொற்கள் கைக்கானே
தேவர்கட்குநாடுதற்கொணாதபுட்பமேநிகர்த்த
சேவடிக்கணாசையைக்கொ டுப்போனே
சேலெனக்குலாவுமைக்கண்மாதொருத்திகோவெனப்பல்
சேலையிட்டபேரருட்செ ழிப்போனே
சீகரக்கலோலவத்தியூடுதித்தமாதரிச்சை
நீர்நலத்தினோர்துதித்தொ ணிக்காரா
சேடனொக்குமூதுணர்ச்சியாளர்பத்திசாகரத்தர்
தேடிநித்தநாடுதற்கி லக்காவாய்
சீயெனப்பொய்மாயையிற்படாதுதப்புநீர்மையுற்ற
தீவிரத்தரோயடுக்கு மெய்க்கோவே,(ஜஹூ)

தேவெனக்கிதாமுனக்கதாமெனப்பல்வாறராற்று
தேணிகர்த்தவாசகர்க்கொ ளிப்போனே
சேரியிற்பெணேனுமொப்பிலுலணக்குமோகவற்பர்
சீரழித்துநாயினத்து ளுய்ப்போனே
தேனும்வெட்குபாடல்செப்பும்வாயளைக்கொடாவினைச்சி
றுர்பொருட்கவாவுறச்செய் திட்டோரா
சேவைபெற்றபாவலர்க்குமால்வருத்தியூடிடிற்பல்
சேயிழைப்பெணுர்களிப்பு றப்போவாய்
தேகமொற்றையேயுயிர்க்கெனுமயக்குநூன்மதத்தர்
தேவைவிற்குளேயுமுற்ற வித்தாரா
சேவலொத்தபோரியற்றுமாரதர்க்குளேசொலித்த
தீபமொப்பவாவினிப்பி றக்காதார்
சேருமற்புதாவிருத்தகோடிகட்குளேமுதற்சொல்
சேமசிற்பராதளர்ச்சி யிற்றேயாய்
சேடுமுற்றவாநினைத்தவாறிருப்பவாபெருத்த
சேணிடத்திலேமுழுக்க நிற்போனே. (கூ)

---

தத்தத்தத்தத்தனதானன தத்தத்தத்தத்தனதானன
தத்தத்தத்தத்தனதானன—தனதானு.

நிற்கைக்கொப்பிக்கதிர்போலொளிர்சித்தத்துச்சிற்பரயோகி
யர்-நிட்டைக்குக்குற்றமுமோதுந ரொளிமாறு
நெற்றிச்சுட்டிச்சிறுபாவையர்பக்கத்திற்சற்றிசைவீரொன
நெக்குப்பட்டுச்சொலியேயடி தொழநாணுர்
நெட்டித்தட்டைக்கிணையாகுமி தப்புப்புத்திச்சிறியோர்க
ளை-நெட்டைப்பொற்புத்திருமாலொடு நுவல்வாயார்
நித்தத்திற்செற்றிளையார்பவர் முற்செப்பப்பட்டவர்தாமு
ம-னித்தக்குப்பிற்செறிவோரொன நினையாதே
நெய்க்கொட்டைக்குச்சரியாநுளைகக்கிக்கக்கிப்பலபாடனி
கழ்த்திப்பித்தக்கனன்மேலிட மெலியாதே
நிர்ப்பத்திப்பொய்த்தவவேடனைமெய்ப்பத்திக்கற்பினராக
நி-னைத்துக்கிட்டிப்பணிவாளையு மிகழாதே
நெற்றுக்கொப்பத்திருமேனியும்வற்றிக்கைப்பிச்சைக்கொ
ளீடினெ-றிக்கட்பட்டுப்பணிநாடுதல் பிறழாதே

நெய்த்துக்கொத்துப்படுநாண்மல ரிட்டுத்தொட்டுப்புரிபூ
சைனி-லைத்துச்சித்தர்க்குறவாமிசை தவறாதே,(ஹூ)

நிர்த்தத்துப்பொற்சபையூடொரு பச்சைப்பொற்புக்கொ
டிகாணநெ-ருப்பத்தத்திற்புனைவான்மொழி மறவாதே
நெட்டிற்சுட்டக்குழலூதியிடைப்பட்டிக்கட்பலரேசிட
நெய்ச்சட்டிக்கொட்டியுண்மால்வசை மொழியாதே
நெற்பெற்றுத்தற்கினியாண்மனை யிற்கொட்டச்செப்பிய
நாதனி-சத்தைப்பற்றிகொள்பொருமையி னழுவாதே
நிற்குட்பற்பற்பலலோகம மைக்கப்பட்டுத்திகழ்வாய்மை
யி-னிப்பசசெப்பித்திரிவாரொதி ரிகலாதே
நிறகத்துக்குக்குறையாதுயர்முத்திகுட்புக்கவலோர்சர
ணிற்பட்டுப்பட்டுதிர்தாதிட லொருவாதே
நெட்டிட்டுத்திட்டும்விரோதியர் நற்சொற்சொற்றுப்பயில்
வார்களை-னிற்றித்திப்பைத்தருநீர்நல மொருவாதே
நெக்கொத்தொற்றைத்தொனிதோயவிரட்டைப்பட்டுற்ற
சினேகர்நி-றைக்குத்தப்புப்பகர்வாரொடு பழகாதே
நிட்பட்டுச்சொற்பொருண்மாய்தலெனத்தெக்குத்திக்கின
ஞள்கள்பி-ணிக்கப்பட்டுப்பிணமாமென வொழியாதே,()

பற்கைத்தட்டிச்சுடரோனையுறுக்கித்தக்கற்றலைமாறுப
டச்செற்றிட்டுத்திகழ்சீர்மிக நுவலேனே
பற்பத்தைச்சித்தமொல்காதுடன் முற்றிட்டுச்சற்றுமிடா
ரகள்ப-ழிக்கத்திக்கிற்பலவூர்தொறு முலவேனே
பசைசப்புற்றுய்த்துயராடுவெ தைத்துச்சுட்டுத்தினுழுடர்
கள்-பட்சத்திற்சற்றிசைவாரையு முனியேனே
பக்கத்துச்சத்தியொடோர்விடையத்தற்குப்புத்திரனாகியி
பத்துக்குப்பிற்படுவானென மிளிரேனே
பட்டுக்கட்டிக்கிளிநேர்மொழிகற்றுச்செப்பித்திரிவார்கள்
ப-டத்துத்திக்கட்படுபாழ்மயல் களையேனே
பத்திப்பெட்டைப்பழுதாமெனவிட்டுப்புத்திப்பரநூல்கொ
ள்வி-பத்திற்பட்டுத்தளராதுனை யுணரேனே
பற்றற்றுத்தத்துவஞானவிளக்கத்திற்புக்கவலோர்கள்ப
ணிக்கப்பெற்றுப்பொலிவார்களை மருவேனே

பட்சிக்கப்பற்றியபேய்வழி வெற்புட்பட்டுப்பெரிதோவிடு
பத்துப்பத்துப்பதுபேருயல் கருதேனோ, (வஅ)

பைக்குட்கட்டுப்படலானபிறப்பற்றுச்சிற்கதியூடுப
தைப்பற்றுப்புக்குறவேமிக முயலேனோ

பட்பட்பட்படெனமார்புதுடிக்கத்துட்டச்சனரால்வெ
ருள்-பட்சிக்குப்பற்குமிகார்வம துதவேனோ

பட்டத்துப்புத்திரர்சேர்தலின்முத்திக்கிச்சைப்படுவாரக
ள்ப-லர்க்கசசுற்றுத்தளராதிசை விளையேனோ

பட்டிக்கற்புப்பலமாதர்வயிற்றுட்காப்பத்திரனூறுப
டுத்திச்சித்தத்ததியார்வமெய் திடுவாரோ

பத்தற்குடபுற்கையைநாறுமலத்தைத்துய்த்துப்பலவாறு
ழல்-பட்டிக்கொப்புப்பெறுதாழ்மைய ருயர்வாரோ

பைத்துப்பற்கட்கடுகீருருவெப்பசசர்ப்பத்திறைமேனிகழ்
பப்புப்பொற்குக்குலமாதுள மகிழ்வாளோ

பத்தர்க்குப்பத்தனெனுமிகும வெற்றித்திட்பத்தொடுபோர்
பொதி-பட்டைக்கொத்துத்திகழ்காவல னமையானோ

பக்குப்பகுப்படென்வாதனையற்றுச்சித்திக்கவுனதுப
தப்புட்பத்தைத்தலைமீதுற வருள்வாயே, (௯)

மற்கைப்பொற்புக்கயம்வாவியிடத்திற்சத்திக்கையிலோடிவ
னப்புக்கொற்றத்திருமால்வடி வொடுசேர்வாய்

மர்த்திக்கக்கைக்கதையாதிய தொட்டுக்கிட்டிப்பொருமே
மன்வ-தைப்பட்டுப்பத்தனநாளுய வரனுனுய்

வட்டுக்கொத்துத்திகழ்பூண்முலை யிற்கச்சுத்தொட்டுளபா
ர்வதி-மக்கட்கொத்துப்பலாபானித முறுவானே

வற்றிச்செத்துக்கெடுவாரது பொய்க்கட்குப்பற்குமுனுவி
ண்வ-ழிப்பட்டுச்சுற்றியபானுவி லுறைவானே

மச்சுத்தச்சுக்கலைமீதெழு தப்பட்டுத்திக்கைவெல்கேதன
ன்-வர்த்திக்கப்பற்பலவாடல்கள் புரிவானே

வட்டிச்கிட்டுப்பொருடேடிமி கக்கொச்சித்துத்திரிவார்க
ண்ம-னத்துக்குக்கைப்பனவாகிய புகழோனே

மட்டுப்புட்பத்துணர்சாலவெடுத்துப்பத்திப்பொலிவோடு
வ-ழுத்திக்கிட்டச்சொரிவார்களை விழைவானே

மட்டுக்குட்பட்டமையாவகைதிட்டித்திட்டிப்பணிவாரையும்
வர்சசித்துக்கைத்துவிடாவருள் மிகையோனே.(௨௯)

மைக்கட்பொற்சித்திரநேர்திரு நத்தப்பட்டுக்கலைமாதை
யெண்-மட்டப்புத்திக்கொடியோருணர் வரியானே
மத்தத்தைக்கொக்கிறகோடணிபித்தற்குப்பத்திசெய்தார்
சிலர்-மற்றெப்பற்றுத்திகழ்வீடுற நினைவோனே
வைச்சத்திக்கைக்குகனேர்வதனத்துக்கிட்டத்துடனேனை
ய-வற்றைத்திட்டிக்கெடுமீனனை மதியானே
வத்தொற்றைப்பட்டுளதேயெனுநட்புற்றுப்பொய்க்கதை
கூறும-தச்சிக்கிற்பட்டுழலாரிடை பிரியானே
மைக்குப்பொத்துச்செறிமூடர்வசைக்கசசப்பட்டிருள்
போலுள-மட்குற்றுத்தட்டழிவாருரு மிசைவோனே
மத்தொத்துக்கற்கிரிபாலுததிக்கட்புக்குத்தருமாவியை
வட்டிக்கச்சட்டுவமோடொரு மகளானாய்
வற்புற்றுச்சசசரவேசெய்திலச்சைப்பட்டுத்தவியாதுயா
மத்திப்பெட்டைபபுனைவார்தம துயிரபோல்வாய்
வற்சத்தைசசெற்றதனூனிடையுப்பிட்டுத்துய்ப்பவர்பா
ழ்படு-மற்கிச்சைப்பட்டயர்மாதவர் துணையாவாய்,(௩0)

கொற்கைக்கட்பற்பலகாவலர்சுற்றிக்கைப்பொற்றிறையாதி
கொ-டுக்கப்பெற்றுற்றவன்வேன்முத லியவானாய்
கொட்டைப்பொற்புச்செறிதாமரையிற்சத்தித்துக்குடியா
மவிதி-குட்டுப்பட்டுத்தளர்சிர்சொலின் மகிழ்வோனே
குக்குக்குக்குக்குகுகூவெனமற்கிச்சித்துத்தனிகூவிய
கொற்றப்பட்சிக்கொடிபாடுந ருறவோனே
கொக்குப்பட்டுப்பலதானவர்வெட்டுப்பட்டுக்கொடுமால்
வரை-குத்துப்பட்டுப்புலவோருய வரசீவாய்
கொட்டுக்கொட்டிப்பலவாம்விழ விட்டுப்பொய்ச்சொற்க
தையாவிகல்-குக்கற்சித்தத்தினரார்வமு முடையானே
குட்சிக்கத்திப்பொடிதானுநிறைத்தற்கொப்புக்கொளுவா
ருயிர்-குப்புக்குப்பிட்டெரிதீநர கிடுவோனே
குத்துப்பொற்றைக்கிணையாமுலை முற்றக்கட்டப்படுவா
ரொதிர்-கொகுக்கொத்துத்திகழோர்கிழ வடிவாவாய்

கொட்புற்றுப்பற்பலகூகையாற்றத்துய்த்துப்பலபேய்கள்
குடிக்கத்துட்டத்தொழிலோர்படை யடும்வீரா,நூறு
கொச்சைச்சொற்குப்பைகளோனி கற்றுச்சொற்றுத்திரி
வாரது-குற்றத்தைச்செப்பவுநாணுநன் மனமீவாய்
கொச்சத்தற்புக்கிரியாமனையுத்தத்திற்செத்திடலாலயர்
குட்டிக்குப்பற்கதுவாயமு தருணையா
குட்டக்கட்டப்பிணியோர்சிலர்முற்பட்டுப்பிற்பிறவாதகு
றிப்பைச்செப்பிப்புகழ்வாழ்வருள் பெருமானே
குப்பிக்கட்டுத்திகழ்பாரமருப்பற்றுக்கைக்கரிபாரிடை
குப்புற்றுப்பொட்டெனவீழமு னடர்வானே
கொப்பத்துட்புக்கழும்வேழமெனத்துட்டக்கைத்தகுவேச
ர்செய்-குட்டைக்கொட்டிப்படும்வானவர் துயரீர்வாய்
கொப்பைத்தொட்டுப்பொருகூர்விழி யிச்சைக்கட்சிக்குமெ
ளதுகு-ணக்கற்சொற்கட்குமவாவுறு மெளியோனே
குச்சத்தொப்பக்கடைவால்கொள்பசுக்கட்பற்றிப்புகழ்வா
ர்கள்கு-லத்துக்கிட்டப்படுதேவதை முழுதாறுய்
கொற்றிச்சித்திட்டெனில்வாடுறுமற்பச்சித்தர்க்குளுமீடி
ல்கு-ளிர்ச்சிப்பற்பச்சரணல்வரு குரவோனே.(௰)



தனனதனன தனனதனன தனனதனன—தனதன.

குரவர்பலருளொருவனெனுமெய்குலவுபெருமை புனைவனே
குணமிலியமபடர்கைவழியொர்கொடியநரகில் விழுவனே
குறிமைநிணமுறுகருமவர்கள்குலையமுடுகி யடுவனே
கொதுகையனையசிறியமனிதர்குழுவினெதிரும்வெருள்வனே
குறைவில்ககனநகரின்மகளிர்குசயுகளமு மிகழ்வனே
குலமில்பதிதர்மனையில்வளர்பல்கொடிகள்குயமும் விழைவனே
குளிருமலயமுனிவனடியர்கொளுநன்மகிமை பெறுவனே
குளறுகவிசொல்சிறுவர்வசைகள்கொடுமுண்மறுகி யயர்வனே,

குலிசதரனெடுளபல்புலவர்குரவைநலமெய். திடுவரோ
குருதிநிணமொடயிலுமவுணர்குதுகுலமது மலியுமோ
கொதிசெயுததிவளையநிலவுகுவலயமிக மகிழுமோ
குருளைகளையும்வதைசெய்புலையர்குடையிலழுது மறுகுமோ

குயவர்கலமொடலையுமுனிவர்குறியின்மகிமை திகழுமோ
குரகதமிசையுலவும்வலவர்கொழுமைபெரிது நிலவுமோ
குசைகொள்கருமமுடையர்பரவுகுரிசில்செயமொடவிருமோ
குளிறலனையமொழிசொல்பலபல்குருடராசு தழையுமோ,

வரனுமரியுமயனுமொருவினருளின்வடிவெ னுணர்வுளே
னதுபொயிதுமெயெனவிகலுநரறுவர்பகையு மொருவினே
னவர்களெனதுநிலையையிகழுமளவில்வசையின் முழுகினே
னிலமிசைபல்பயிருமுயிருமறல்கொடருமம் விழைதலா
லதலம்வரையொர்கிணறுபதியுமசலமிசைசெய் துழல்கிறே
னரியபசுவினினமும்வதையுணதர்மம்விலக நினைகிறே
னலைகொள்கடலைநுகருமுனிவனருகினுறவு முயல்கிறே
னவனுமவருமதுவுமறுமெயறிவிலமிழல் கருதினே,(வஅ)

னழிவில்பொருளைநடுவிலெலனமுனருணகிரியெ னுரைசொனு
யலரியறியமலையிலுருளிலருமையுயிரொ டெழல்செய்தா
யசரசரமுமகிழுமயலுமபரிமிதமு முதவினு
யகளசகளசமரசமுமெயடியர்நெறியு மிடைவிடா
தமையவிணையில்சரதமறியவகமுளுதவி பலசெய்தா
யபலமகளிர்கலவியுரிமையடரமலியு மிருண்முனு
மசடுமுழுதுமொருவிவிழியிலருவிபொருவு கருணைதோ
யழகனெனமுனிலகிமுடிவிலநுபவமதை யருளுவாய், (௨)

கரணசதுரமனுகலரியகருணைநிலவு பிரமமே
கதிருமுழுமைமதியுமவிவில்கனலுமருவும் விழியுளாய்
கரடகலுழிமலையையனையகவிஞர்பரவு பெருமையாய்
கமலமலரின்மருவும்விதிசொல்கயிலைநிகர்பல் பதிகொள்வாய்
கடவுளளவில்பலவெனுரைசொல்கயவர்சிறிது மறியொணுய்
கதுமைகுலவுபடைகொள்வயவர்களமுமுளமும் விரவுவாய்
கவலைமிகவினடியரினர்சொல்கடினமொழியு மணிகுவாய்
கபிலைமகிழுமயலுமவர்கள்கனவுநனவு மறிகுவாய், (௨அ)

கதறிமறுகுமயமும்வதைசெய்கடையர்நினைவின் மருவிடாய்
கலியனெனுமொர்கொடியனரசுகழியவிழையு மவர்கணே
கரியையனையநடைகொண்மகளிர்கலவிமலிய முயலுமோர்

கழைகொண்மதனுநமனுமனையர்கதைகள்பலவு நடவுவாய்
கடவுமிரதமுடையவரசர்கபடநினைவி னுழைகுவாய்
கவினுமணிகளொளிசெய்கசிதகனகமணியு நெடியமால்
கழல்கள்பணியுமவரொடிகல்செய்கலகர்கெடுதல் செயவொல்காய்
கரியகுறவர்மகளைமருவுகளவனுரைசெய் பிரணவா, (௯)

வுரகபதியையனையபுலவருசிதமதியி னுழைவிடா
யொளியுமிருளும்விரவுதகையுமுடையர்பலரு நவில்பவா
வுருகுமனமுமறுவிலறமுமுரியபுனித ரினிமையா
யுறுதிசிறிதுமருவுகிலரையொருவிவிடுமொர் குணதரா
வுபயநிலையுமறியுமுனிவருலகின்முடியி லுறல்செய்வா
யுமைதன்முலையின்மதுரவமுதமுனுமொர்புதல்வ னிகர்சிலோ
ருரைசெய்பதிகநுவலும்வகைசெய்துயருமிசைகொள் பெரியவா
வொழிவில்புளியின்மதுரகவியொடுறையுமதலை யுயிரனாய்,()

உததிகடையிலெழுநலமுதமுறழுமரிய சுவையுளா
யுணர்வில்சிறியர்கருதுநெறியினுழியும்வினைசெய் பழமையோ
யுவகைபெருகுமடமையரசருதிரநதிசெய் மகிமையோ
யுடையில்சமணர்விதியிலமையுமுவலையினரு நுவல்பரா
வருமநிகருமிடியைவெலுநலுரநல்கிடுமொர் துணைவனே
யுரலினகரிலிருவன்மருதுமொடிதல்செயுமொர் மகவனு
ருபநிடதமுமறையும்வெருளவுதவுபனுவல் பலவுளா
யுருவபரமுமருவபரமுமுலைவிளிலைகொ ளொருவனே.(௰௧)



தனனதனதானதன தனனதனதானதன
தனனதனதானதன - தனதாத்ததானனு.

ஒருபரமலாதுபிறிதிலையெனுமகாதநிலை
யுடையவருமீனர்பகர் வசைகேட்கலாகுமோ
வுமதுகுலதேவனவனெமதுகுலதேவனிவ
னுவனவர்கடேவனெனு மவர்நீச்சொன்ஞாயமோ
வுரைமதுரமோசைநயநிறமுறுபல்பாவலரு
மொதியைநிகராமடைய ரிடமேற்கைநீதியோ
வுரியமுதுநூன்முறைமைதவறியிழிபாடல்பக
ருறுகவிஞரார்வமலை யெனநீட்சியாவதே

னுழையைநிகராயவிழியரமகளிராலழன்மு
னுயிர்வதைசெயாதபன வணைமூர்க்கரோசலே
னுடநிடதமாய்தல்பிழைமகமுயல்வதேநலமெ
னுறுதியுறும்வேதியர்க ளிறுமாப்புநீடலே
னுரமுமனுநீதியுமெய்தியசிலமகாரதர்க
ளுலகிலுளகோழைமனி தரினேச்சுமார்வதே
னுயர்மறையுமாகமமுமிகவிகழ்வளுரம்வணை
யுனுமதிகபாதகரு மரசாட்சிதோய்வதேன், (௯)

ஒளிவிடுபொனுசையிடைமொழிகள்பிறழாவணிக
ருசிதவழிபூதியமு மிலதேக்கமேவலே
னுறவாதுபாலுமதிபவிசைகொளும்வாணிபர்க
ளுவலைபடுமாறுமிகுபொருள்சேர்த்துவாழ்வதே
னுழவுதொழிலேயரியதுணையெனுநலோர்குழுவி
லுதரபசிதீரவமு திடுமாட்சியோரொலா
முடைதலுறலேனரனைநிகர்தவசிநேர்வரினு
முமியுமுதவாதவர்கள்பெருவாழ்க்கைவாழ்வதே
னுகரவடிவாகியலைகடலினடுவொழரியி
னுலைவில்செயநாடுமன தினருக்கமீனமோ
வொசிதலுறுமோவெனிடைவனிதையர்கண்மோகமிக
வுழல்சிலருநாடியவை புரிகீர்த்திகாதையோ
வுனலரியவாயபலசமயமுநிஞுடல்களி
னுதயமெனவேதுணிவு பெறுதீர்க்கமூடமோ
வொருவின்மிசையேறிபுலகினைவளையும்வேளெனவெ
னுடனுவல்வயாவுநிச மறுபாழ்த்தமோசமோ, (௰)

கருமறவன்வேடமொடுசுரநடுவிலேகியொரு
கவியுமொருபாவலவனெதிர் சாற்றிலாய்கொலோ
கடியபனையோடுபலவினில்விழுபவானதுணி
கனிகடருமாறுகவி பகர்பாட்டிசீர்பொயோ
கடலின்மிசையோர்பெரியசிலைகலமதாகவெதிர்
கரிவெருளநீறுருளிர் தரவாக்கவியாவனோ
கலைமகள்சொனூலதனைமறுமொழியிறுவினிது
கழறியவனேடுவெழி யமுதூட்டலார்சொலாய்

கணிவணனநாள்பிழைசெய்திடில்வருமொர்பாடல்வழி
கமலையொடுபோய்வருமெ யினைமாற்றல்கூடுமோ
ககனமிசைநாளும்வருபரிதிவடிவாயெனது
கவலைமொழியாயிரமும் வினவேற்றமாயுமோ
கலசமுனியாதியவரிகபரமுளார்களெதிர்
கருணைவிளையாடல்பல பலகாட்டிலார்களோ
கபடமலிதானவரையனையசிலவாசிரியர்
களும்விழைவிலாடல்பல செயநோக்கனீயலோ,வனு
ககபதியுநாணுமெழின்மயின்முதுகிலோர்பெரிய
கனவில்வருபோதினுமெ யருளுற்றிலாயையோ
கணபதியெனுநிலவிவெகுவுறுதிகூறியுமொர்
கடுகினளவேனுமகி ழிசைகூட்டிலாய்மெயே
கடுவுமிழும்வாயரவமணிசிவனெனுநுவலல்
கருதியுமிவாறழுது நெடுநொட்டளாடவோ
கடவுளருமாதவருமறியவினிதாகியவிர்
கறையிலதுபூதிபல பலவாய்த்துமாய்வனோ
கடைபடுவதாவளவில்சுருதிபகரீனமுறு
கலிவெருளுமாறுசெயும் வலிவேட்டல்பாவமோ
கருவிபலதோயுமுகிலெனநிகழ்நிசாசரர்கள்
களநடுவின்மாய்வுறினு னதுசீர்த்திகோடுமோ
கயனுமணிவாள்வளையுமுமிழுமணிவாரியெறி
கரையினலைவாயினுவ வியவார்த்தைவீணதோ
கவினமறுமாவுறழுமனதுவசமாகவுன
கழலிணையெனுதுமுடி மிசைசூட்டநேருவாய், (௭)

சருவமததாரகசண்முககுருபராவமரர்
தமதுசிறைதீரவமர் பொரும்வேற்கைவேடுவா
சகளமுழுதோர்பொருளெனுணர்வுதவலாலளவில்
சமயர்களுமேசும்வசை யிடைதாழ்த்துநாயகா
சகலபுவனதிபருமனுகரியவாழ்வையொரு
தவசிபொதியாசலம தனிலேற்கவீகுவாய்
சபலமனதாளரறிவரியபரிபூரணவி
சயபரமயோகியர்க ளறிமூர்த்தநூறுளாய்

தவிடளவும்வேறொருவர்பெறவுதவிடாதவர்க
டமதுகுடிகேடுசெயும் விளையாட்டுமேவுவாய்
சனியனையபாழ்மிடியினிடைதளருநாவலவர்
தமிழினுமவாவுடைய பெருமாட்டிபாகனே
சரதநிலைபேரமுடிகியகொடியகோலரசர்
தழலில்விழுபூளையது பொரநீற்றுமார்வனே
சகுனியனையார்மொழியிலுரிமையுறுவார்கள்குடை
தனிலழுநலோர்துயர மறமாற்றுமீடுளாய், (௨௫)

தரிகிடதெய்தாதிமிதெயெனவொருமினொளெதிரோர்
சபையினிடையாடும்விய னறிவார்க்கொர்தேசிகா
தரையினொடுவானுமளவியசரணமாயனது
தருமமறியாமடையர் வினைதீர்க்கநாடிடாய்
தபனனொளியூடுபலகடவுளரும்வாழல்பகர்
சதுமறையின்மூலமுணர் பவர்தேட்டுமோனமே
தடிமுரடரோடுசமர்பொருதுமெலியாதபடி
சமரசவினோதமரு ளிடுநேத்திராகரா
சனனமரணாதிகளின்விவரமறியாதசிலர்
சளசளெனவோதுமொழி களுநாட்டுமாதியே
தனையர்களுநாணமுறவுடனுடன்விடாதுவரு
தகர்நிணமுமாருமவர் கருதாக்குணாலனே
தகரமலிகாரளகமகளிரநுபோகமொடு
தனமுநிசமாமெனும வினராக்கமாகிடாய்
சமணர்விதிநூல்வழியிலுழல்சிறியபாவலவர்
சடமதிசெய்பாடலிடை யினுமார்த்தபீடுளாய், (௨௬)

அருணகிரிநாதனெனவெனையளவில்போதுசொலி
யருள்வலிதராதுதுய ரிடைவாட்டுமேகனே
யவனெனும்விவாதர்களுமவளெனும்விவாதர்களு
மதுவெனும்விவாதர்களு மறியாச்சொரூபமே
யசலமுதலாகவமைதருநிலமெலாமுடைய
வரசெனவெணாதவனை விழையாக்குரூரனே
யகிலபலசாகரமுமிடைவெளியுமோவரிய
வபரிமிதசோதியென மறைகூப்பிடோசையா

யமரர்முதலாகவெணியிவளெனவோதரிய
வணுவிலணுவாகிமிளிர் தருசாட்சிநாதனே
யகடவிகடாகடிதசலனமயமாயையினு
மமையுநிசமோருமுனி வனாநீக்கிடாதவா
வசரசரமானவுயிர்முழுதுநனிவாழ்வதெனி
யலமருமகாவிரதர் பெறுகாட்சியாகுவா
யசனிபலகோடியொளிதருபெரியவூழியினு
மழிவரியதாய்மறைவி லறிவாய்க்குலாவுவாய், (ஐஅ)

அலங்கடலைதோசைவடைவிடலையிளநீரொடிய
லனையதருவார்களிடை களிறுச்செல்வாகனே
யரிசியுடனேமறிகொய்திடல்வருசெநீரிடல்சொ
லகவனுடையானையுந ணியகார்த்திகேயனே
யலர்சொரிகைமாணிமிசைவலைவிசறிஞன்மடிய
வடுபதசரோருகம ணியசீர்ச்சதாசிவா
வலமதியோர்பலருமுளரிமுதலாவனவு
மறிதரவெநாளும்வரு மொளிபூத்தபானுவே
யலைதருபயோததியினடுமிருபணுடவிகொ
ளரவரசின்மீதுதுயில் வுறுகார்க்கொண்மூவனு
யரனையரியாதியபல்கடவுளரொடேனையரை
யமலபரையாகிமுத லருள்பேற்றின்மூலமே
யரியபொருளானவுனையிலையெனவெநேரமெளி
தறைபதிதரும்மரு வியநீட்டுநாணிடா
யயனரிமயேசர்பதவிகள்வரினுமாருயிர்கொ
லசடுமுயலாதபழ வடியார்க்குள்வாசனே.(ஙஉ)

---

தானதந்தன தானதந்தன
தானதந்தன—தானனு.

வாசவன்றனதூரிடம்பெறும்
வாழ்வையின்பென நாடிடேன்
மாநிலந்தனையோர்பெருங்குடை
வாய்கொள்வென்றியு மாசியேன்
வாலசுந்தரரூபமங்கல
வாணிசெந்தமிழ் பாடுவேன்

வாதுவிண்டெதிராடும்வண்டர்கண்
மாழ்குறும்படி பேசுவேன்
மாமிசந்தினுமூடர்தங்களை
வாயில்வந்தன வேசுவேன்
மாமகந்தனிலூனருந்தலு
மாறுமந்தணர் சீர்சொல்வேன்
மானமும்பெருவீரமுங்கன
வாரமுந்தலை மீதுளேன்
மாழையின்குவையாளர்தங்கடை
வாயில்கண்டுற வாடிடேன், (௯)

வானில்வந்தவிர்பானுபுங்கவன்
மாடென்வஞ்சமு மோதுவேன்
மாடிவர்ந்தசதாசிவன்புகழ்
வாரியென்றதி லாழுவேன்
மாயவன்றனையேவணங்கிடு
வார்களன்பிடை கூடுவேன்
வாரணிந்தபயோதரங்கொளு
மானெனுஞ்சிவை நீருள்வேன்
மாணுறுங்கிரிமேல்வரைந்தகை
மாமுகன்கழல் பேணுவேன்
மாதிரம்புகழ்வேலணிந்தகு
மாரனன்பரி னேகுவேன்
மாசறுஞ்சதுர்வேதமுன்பகர்
வாய்மையொன்றில்வி ராவுவேன்
வாவுசிந்தையெனோர்குரங்குனுண்
மாய்வுறுங்கதி மால்விடேன், (௰)

ஏசடர்ந்தபொலாமதங்கொளு
மீனர்நிந்தையில் வாடவோ
வேடெதிர்ந்துயர்காழியந்தண
னீடுணர்ந்திலர் போலவோ
வேர்பெறும்புளிநீழலொன்றின
னீரவண்டமிழ் நூலிலே

யேகதந்திரசாரம்விண்டதெ
ஞருடன்சம ராடவோ
வேழைமங்கையர்சூழுமங்கச
னேவிளைந்துகு ருவவோ
வேமவெங்கலிநோய்மலிந்திடி
யெனெறனுந்தொனி தாழவோ
வீதொர்புன்பிணமேயெனும்படி
யீமமென்றதில் வேவவோ
வீரிரண்டுமுகாரவிந்தனெ
ஞதுடம்புசெய் தோயவோ, (வனூ)

வேன்விரும்பினையாளவந்தனை
யானிருந்தமை கூறிஞ
யேழ்விதம்படுகோலமென்றனு
ளேவிளங்கிட மேவிஞ
யீகையென்றதன்மேன்மைகண்டினை
யாதபண்புற நாடிஞ
யேடலர்ந்தபல்பூவணிந்தெணி
லாதவின்கவி சூடிஞ
யேனமொன்றுடுபோனதும்பரி
யாகவங்கியி னேருளா
னேதமின்றியமேனியங்கவ
ரிர்தல்கண்டது மாதியா
யேவிளம்புகுஞலமொன்றென்மு
னேபுரிந்திடி ஞுயே
னேனுநும்பிரசாதமொன்றிட
லேயநன்குறி லாவுவாய், (௭)

பாசபந்தமெலாமடுஞ்சிறு
பார்வைகொண்டவி லோசஞ
பாகவிங்கிதசாரமிஞ்சிய
பாடல்விண்டவர் தாயகா
பாவசஞ்சிதர்பாவினுஞ்சரி
பாதியென்றமர் வானவா

பாரணங்கழுதோலிடும்பிழை
பாறிநன்றுயர் வாகவே
பாரதம்பொருபோர்புரிந்தவர்
பாகமென்றுரு லாவுவாய்
பானலங்கண்மினுரினுஞ்சிலர்
பாடுகண்டருள் கூர்பவா
பாவலங்கல்பலாயிரம்புனை
பாதபங்கய வீசனே
பானுசந்திரகோடியென்றுபல்
பாதபங்களின் மேவுவாய், (௨௱)

பாரிடம்பொருகோரவண்டர்ப
ராவருங்கரு ணாகரா
பாழியங்கைமதாசலந்தரு
பாவைகொங்கையின் மோகமார்
பாலனென்றொர்கணுவில்வந்தசு
பாவமொன்றுனை யாடினாய்
பானுறழ்ந்தவெணீறணிந்துக
பாலசங்கர னாகினாய்
பாவுதண்கடல்சூழுமம்புவி
பாலனஞ்செயு மாயவா
பாகெளுண்டைமுனைவுண்டிகொள்
நாயகா
பாதலம்புகுதீமைகொண்டவர்
பாவகங்களு மோவிடாய்
பாறையின்கணொர்கூபநன்குசெய்
பான்மையுந்தரு வாசகா, (௲)

நாசமின்றியபூரணம்புணர்
ஞானபண்டித சாமியே
நானெனுஞ்சொல்கணுவினு சால
நாணுமன்பர்க ணேயனே
நாகரந்தமிழ்மூலமென்றிடு
நாவர்கண்டறி யாதவா

நாகமஞ்சுவணேசனெஞ்சுந
காயுதம்புனை தோளின்மே
ளுமஞ்சுகமாயிருந்தவ
ளுகவென்றனை யோதினாய்
நாடனந்தமுமோடியம்பொனை
நாடிநொத்திட வேவினாய்
நாவலம்பொனுமோடுமொன்றெனு
ஞாயபுங்கவர் சேகரா
நாளவெண்கமலாதனங்கொளு
நாரியும்புகழ் பீடுளாய், (ஐ௰)

நாமசங்கமனேகமொன்றும
நாதியென்றருு கேசனே
நாரணன்சிவன்வேறெனுஞ்சில
நாய்கள்சண்டையின் மேவிடாய்
ஞாலமும்பரலோகமென்றுணர்
ஞாபகந்தரு பூபனே
நாவியுண்டயர்மீனெனும்பவ
நால்விதங்களு மோவுவாய்
நாரதன்பொருசீலர்நெஞ்சிடை
நாடகஞ்செய்வி னோதனே
நார்மலிந்துளயோகர்தங்களை
நாருடன்றிகழ் சீர்செய்வாய்
நாடியின்பிறழ்வால்வரும்பிணி
நாராறும்படி பேணுவாய்
ஞாயிறென்றியெனுதுபுன்சொல்வி
ஞவுநங்குரு நாதனே. (௫௩)



தானதத்தனத்தனதனதானன தானதத்தனத்தனதனதானன
தானதத்தனத்தனதனதானன - தாத்தாறு.

நாததத்துவச்சிரமிசையாடுகின்
வார்கழற்றுணைக்குரிமையுளாருட
னுமுற்றுனக்கினியனவேசெய மாட்டேனே

நான்முகத்தன்மக்களின்முதலாய்மல
யாசலத்திலுற்றவிர்குறுமாமுனி
நாதனொத்தமிக்கவரெதிர்போய்முடி தாழ்த்தேனே

நாமகட்குறுப்பனையபல்பாவலர்
மூடரைத்துதித்தலமரலால்வரு
நாணமற்றொழிக்கருமகிழ்வாம்வகை கூட்டேனே

ஞாலமுற்றவுத்தமர்வசையானதை
யோர்பொருட்படுத்தியுமறவாதிழி
நாயுவப்பதுட்கொளுமவர்தீவினை மாற்றேனே

நாறிடப்புகைத்தெழின்மலிகாவண
மூடுகொட்டிசைக்கருவியொடோலிட
நாண்மலர்த்திரட்சொரிபலபூசனை யாற்றேனே

ஞானவித்தகப்புலவர்தமேன்மையை
நூல்கள்செப்பிடிற்பெரிதிகழ்பாதகர்
நானிலத்தில்வெட்குறவருளாடல்கள் காட்டேனே

நாசமொத்திருட்டுயில்வரலாதிய
தீமையைக்குறித்துளமயராதொரு
நானெனக்குதிப்பவர்மருவாண்மையை மாய்க்கேனே

நாகுடைச்சடத்தினையுயிராயெணி
மாய்தலைக்கணத்தினுநினையாதுசெய்
நாணயப்பிழைக்கயவர்பொய்வாழ்வற வோட்டேனே,

நாலலுற்றபொற்றனவவையார்விதி
மாறியுட்சினப்பொலிவொடுதேவிகழ்
நாகதுர்க்குணக்கொடியரொலாமழ வாட்டேனே

நாவியிற்கொலத்தகுமிடியாலெதிர்
போயிரப்பவர்க்குவகையொடாய்வுற
நாழிகைக்கொர்சொற்பகர்பவர்மேலிடர் மூட்டேனே

ஞாதிகட்கடுத்திகன்மதவாதிகள்
வேரறுத்துவப்புறுபெரியோர்பத
நார்மணத்தசத்தியமுறுபாடல்கள் சாற்றேனே

நாரணப்பெயர்க்கடவுள்கொலோவென
வானகத்திலுற்றவர்களுமோதிட
ஞாயமற்றதுட்டரையருள்வாள்கொடு தாக்கேனே

ஞாயிலொத்தருட்கொடுவௗர்மாதவ
யோகரைத்தொடுத்தவர்பணியேசெயு
ஞாபகத்தர்பெற்றிடுநலமேனனி போற்றேனே
நாடகச்சிகிப்பறவையையேகிகர்
சாயலுற்றவர்க்கடிமைசெய்தோய்கிலர்
நானமொய்த்தமற்புயமொழிவார்களை நீக்கேனே
நாகன்மெய்த்தவச்சிசுவிழியாசைகொ
டாளுமற்புதச்சிவன்விளையாடிய
நாடதிற்றலைத்தடமயிழ்வீறணை யேற்கேனே
நாமிகச்செய்மைக்கடல்பொருணுதி
யாதியப்பிலக்கினியின்முனிடு
ஞமமிக்குடைப்பனுவல்களியாவையு மீட்கேனே,(வ)

சாதலுக்குளப்பயமுறுமாணியெ
நாளுமெட்டிரட்டியவயதாமினிர்
சால்புறச்செய்கித்தியனுளனேயென வாழ்த்தேனே
சாகரத்தலைப்பணியணைமீதிரு
மாதர்பக்கலிற்றிகழ்தரவேவளர்
தாமரைக்கணச்சுதனடியாரிசை நீட்டேனே
தாழ்தடக்கரக்களிறுருவாகியு
பாசகர்க்குளுற்றவர்களிகூரிரு
சாதனத்தசொற்பகர்கணாதனை யேத்தேனே
சாருவொத்துருக்கொடுமுனம்வாழ்கதை
கூறியிப்படித்துயர்பலவாறுசெய்
சாமியைத்துதித்துளமலர்மீதுற நாட்டேனே
தாதுகுத்தபொற்கமலமெலாமலர்
சீர்பொறுத்திடத்தினம்வருபானுவி
சாரநிச்சயத்தினர்துணையேயென வார்க்கேனே
சாமளக்குயிற்பெடையெனவேயெழி
லாளியிற்கதிப்பவளருணடிய
சார்பினர்க்குளுற்றிகபரவாதனை தீர்க்கேனே
சாறுமிக்கியற்றிடுமெதகோடிக
டோறுமுற்றவற்றினமணுகாதுயர்
தான்மொற்றையிற்றிகழுமுனுதொளி பார்க்கேனே

சாவறப்பிறப்பறவினையாலயர்
நானறத்தொகுப்பனமுழுதாகிய
தாமெனச்சொன்மெய்க்கதியிடைபோயிருடேய்க்கேனே,

சாரணத்திரட்கழுமரமேவிட
வான்மணித்தனிச்சிவிகையிலேறிய
தார்படைத்தசொற்கவுணியனார்திரு நீற்றாலே

சாரமுற்றருட்சமரசமார்திரு
வாசகத்தினைக்குருகையின்மேயவி
சாகன்மெய்ச்சொலைப்பொருவுவவாயபல பாட்டாலே

தாமதக்குணக்கவிஞர்பொறாமையின்
மூழ்கிநெக்குநெக்குருகிடநாவிரு
தாள்கொள்பட்சியொத்தொலிதருபேரருள் வாக்காலே

சானகிப்பெணைப்புணருமிராமனு
மாயர்பட்டியிற்பலமடவார்புனை
தானைபற்றுகைக்களவனுநேர்சிலர் கூட்டாலே

தாடகைக்குணத்தரிவையர்தாமுமி
ராவணக்குணப்புருடருமாகியு
தாசனச்சொல்செப்பிடுமுறவோரகல் பேற்றாலே

தாணையத்துணைப்புரவலராதியர்
வாழ்வினைக்குறித்தவர்பிறகேகுநர்
தாமினத்தெனைக்கருதாறுதாளது போக்காலே

தாழையிற்கனிச்சுவைவிழைநீர்பொரு
மோகமற்றருட்செயல்வசமாய்விரி
தாரணித்தலைக்குருபரனும்வினை யாட்டேநீ

தாய்தகப்பன்மெய்த்துணைமுதலியாவரு
மோருருக்கொள்பெட்பொடுநினைதோறெதிர்
தாவறக்குதித்தினியுதியாவழி சேர்ப்பாயே, (௭)

ஆதவற்குளூற்றவரவர்நாடிய
வாறுருக்கொள்சத்தியவடிவேயரு
ளாரணத்தின்முற்பிரணவமாகிய கோற்றேனே

யாகுலக்கடற்சுழியிடைபோய்விழு
மூடமற்றிமைப்பிலருமவாவுப
லாடலிட்டசித்தர்களநுபூதியி னூற்றூறு

யானைமுற்படச்சிறியபிபீலிகை
யீறெனக்கணக்கிடும்வகைதோய்பல
வாவிகட்குமெய்த்துணையெனவாழ்பொது நீர்த்தேவே
யாதிமுத்தர்பொற்பதமலரோகதி
யாமெனக்குறிப்பவரைவிடாதவ
நாதிதத்துவப்பரசிவமாமுதல் வீட்டோனே
யாயுதத்தினைக்கொடுமனைமான்முயன்
மேடமுற்சொலத்தகுபலவாகிய
வாருயிர்ச்செகுத்துணுமதிபாதகர் வாய்க்காகா
யாசின்முத்தமிழ்ச்சுவைசிறிதாயினு
மோருணர்ச்சியற்றுணர்பவர்போலெதி
ராடுமெட்டிகட்கருள்புரியாவிசை வாய்த்தோனே
யாவதைப்புலைத்தகையுடையார்குல
வேரறுத்திடத்தவமுயல்வார்தம
தாவன்முற்றளித்திடவணுவேனுமெ யாக்கோவே
யாணிமுத்தெனத்தகுநகைவேசிய
ரோவலிற்சலிப்பறுமவர்பாலுறு
மாடகத்தினிச்சையுமுறுவார்களை நீப்போனே,(௨௫)

ஆலடிக்குருக்களுமதன்மேவிலை
மேவுபொய்த்துயிற்கரியனுமோர்பொரு
ளாமெனத்திடப்படுமறிவாளிகள் பாற்றேய்வா
யார்வமிக்குடைப்புலவரொலாமுணர்
சீர்பொறுத்தெழிற்றவளசரோருக
மானதிற்கொலுச்செயுமிளையாள்கையி னூற்காரா
வாழியிற்பனிக்கலைமதியோடுரு
வாகியெட்டெழுத்துடையவன்மார்பக
லாதிருப்பவட்கருதிநையாதவ லோர்க்காவா
யாசுரக்குலத்தினரதிபாலிய
மாமவத்தைமுற்றறுநலமீபவ
ளாணையைத்துதிப்பவர்மெலியாதர ணாச்சூழ்வா
யாயிழைக்கிளிப்பெடையனையாரநு
போகநற்சுவைக்கறியமுதூணணி
யாடைவிட்டிரப்பவரொடுகூடவெள் காக்காவே

யாவியிச்சைமுற்றவினிழிநாய்நுக
ருன்மகத்தினிற்றினுமவர்நூல்வழி
யாய்தல்விட்டுமெய்த்தவமுயல்வார்வினை தீய்ப்போனே
யாலையிற்புனற்பருகியவாயொடு
காதுவப்புறக்கவிபகர்வாரிட
மாயியப்பணிற்றிகழ்கருணாலய ஞப்போவா
யாவெனப்பன்முற்றொளிர்தரவேநனி
கூயிரப்பவர்க்கணிபணியாடைபொ
ருயிரக்கணக்கினிலருள்சீரியர் மேற்சீருய், (௩)

கீதமுற்றிசைத்திடவலயாழ்புனை
நாரதப்பெயர்த்தவசியனூர்பலர்
கேடொழித்தருட்கடலிடைமூழ்கிட வீழ்த்தோனே
கேளியிச்சைமிக்குறுமொருபேடிநல்
வாளிபெற்றிடச்செயவெனவேமுது
கேழலைத்தொடுத்தடன்மலிவேடுவ ராப்போனாய்
கீழ்நிலப்பணிக்குழுவினையேநிகர்
தானவக்குலத்தினையிகலாகிய
கிரியிற்கெடுப்பவரொடுகூடிய ஞாட்போனே
கிளைத்தொனித்திடவளைமீதரி
வாளுநைக்குமக்குலபதியாமுயர்
கீரனைச்சிறைப்படவிடுபேயுயிர் பேர்த்தோனே
கேகயப்பரிக்குகனெனவேமலை
தோறுநட்டமிட்டணுகுநர்பாலதி
கேவலத்தனிக்கதிநிலைகூறல்வி டாச்சீரா
கேகமொத்தரற்றியுமொருமாதும
ணாளன்முற்றவித்திடவுமகோரகி
லேசமுற்றொழித்திடுநலமார்செயல் பூத்தோனே
கீடமொத்தசிற்சிலருமெனாதுசு
பாவநிச்சயத்தினையிகழ்தீமொழி
கீரமொத்தினித்திடுதலினுள்பல போக்கேகா
கேசரித்தலைத்திரளுடனேயொரு
தூணிடத்துதித்திரணியனுதிசை
கேவிபட்டிடக்குடர்நெடுமாலிகை போட்டோனே, ()

கிணமுற்றினத்தினர்முகமாறவெவார்
பாறையிற்புனற்பெறமுயலாசைகெ
டாதிருக்கவைத்திவணுலகோர்நகல் பார்த்தோனே
கேகமுற்படச்சுருதிகளோதுபல்
பேறுமிக்கெனக்குதவுவதாறுவல்
கேண்மையுற்றுமுட்பகையினர்போன்மறை தாட்டாளா
கேசவற்பழிப்பவரையும்வார்சடை
யீசனைச்சிரிப்பவரையுநேர்தவிர்
கேதமுற்றழச்செயவிழைவாருரு லாப்போவாய்
கேதனத்தருக்குடம்விடையாளிபுண்
மூடிகத்தினுக்குயர்வுறவேபகர்
கேயநட்பொழித்தவனிகர்சூதுசெய் மூப்போனே
கிலவக்கினித்திரண்மதிபானுவென்
மூவகைச்சுடர்ப்பருகுவதாகிய
கேழ்மணித்தனிக்கிரியனேயாயிற வாப்போதா
கிறவிட்டநெற்றியினெழிலாரொரு
நான்முகற்குமெட்டரியபராபர
கிதைசெப்புமெய்த்தகைகொள்சதாசிவ சேப்பார்வாய்
கியெனச்சொல்கைக்கிளியெனநீயரு
ஞசலத்திலுற்றனேயெனவோதிய
கீர்விளக்கிடத்தகியிதெனுவறி யாச்சோரா
கிசகத்தினிற்பிடிநழுவாதுசி
வோகதத்துவத்தமர்பரஞானியர்
கேளிர்சொற்களைச்செவிபலவானனி கேட்போனே.()

தானனதந்தன தானனதந்தன
தானனதந்தன—தானனா.

போனகமும்புனைதானையுமங்கையர்
போகமுநன்றென மாயாதே
பூதலமெங்கணுமோடியிரந்துடல்
போதமெலிந்துள மோயாதே
பூரணமென்றுணையாதமதம்புகு
பூரியர்தம்புடை சேராதே
போனதுவந்ததெனுவுணர்வின்றிய
போர்செயும்வம்பிடை சாராதே

பூதரவன்சிறைகூறுசெய்வென்றிகொள்
போகிவளம்பதி நாடாதே
பூமகள்கொண்கனேவேலனேயன்பில்பொ
லாரிணேயென்றிசை பாடாதே
பூரமிவந்துகிலாவுசவுந்தரி
போல்பவர்தங்களே யேசாதே
பூதிமண்முன்பகர்சாதனமொன்றுபு
ராதனர்கிந்தனே பேசாதே,(ஹ)

பூகநெருங்கலேவாயினுணர்ந்தவ
பூர்வமனந்தமு மாறாதே
பூழியர்தம்புகழ்காவினிடம்படு
பூளேயெனும்படி யோடாதே
பூபரவெந்திரமாதியகொண்டுசெய்
பூசைவளங்குறை வாகாதே
பூதகணங்கள்பிசாசர்களென்றுபு
லானுகர்கின்றவர் வாழாதே
பூசுரரும்பொருசீரியருஞ்சிறு
பூனேயெனும்படி தாழாதே
பூழின்மணங்கமழ்கோதைமடந்தையர்
பூசன்மலிந்தற நீறாதே
பூவலயஞ்சுழல்வாரிமையின்றிய
போகில்களென்றுகு றாவாதே
பூரகும்பகரேசகம்விண்டுபல்
பூடுபிடுங்குநர் மீறாதே, (வ)

கூனல்வலம்புரிகாதிலணிந்துகு
லாவுசிவன்புகழ் கூறேனே
கோகனகந்தருபாவையுரம்புணர்
கோலகினேந்துப ராவேனே
கோணியவெண்பிறைபோலவிளங்கொரு
கோடுடையன்கழல் பேணேனே
கோடிநெடுங்கிரிதோறுநடம்பயில்
கோனருள்கொண்டுகி லாவேனே

கோதையர்தங்குலதேவெனுமம்பிகை
கூர்விழிதங்கருள் பூணேனோ
கோதினலந்திகழ்பானுவுடன்சில
கூறுதலின்பய னானோ
கோரமடந்தவிர்வார்சரணம்படு
கூவினறுந்துகள் சூடேனோ
கோடையில்வெம்பிடிபோலமுழங்குபு
கோளர்கணங்களை மோதேனோ,(வரு)

கூகையடைந்தரசால்கள்வளர்ந்திடி
கோயில்களுந்திரு மேவாவோ
கூசுதலின்றியனேகவிதம்படு
கோரணிகண்டவர் தோலாரோ
கூடபதங்கவர்தேனையில்வம்புறு
கூடகர்தங்குல நோவாதோ
கூடல்வளம்பதியாதிபனென்றொரு
கோனதுவெண்குடை நீடாதோ
கூதளமொன்றுகிராதருநன்குகொ
லாவிரதங்கொடு தேருரோ
கோகுலமுய்ந்திடனாடியதொண்டர்கள்
கூலிபெறுந்தினம் வாராதோ
கோடுபுனைந்தகைநாரணனென்றகு
ணாலயன்வென்றிசு லாவாதோ
கோபமறந்தெனதாசைபொலிந்துகு
மாரனொடிங்கினி தாள்வாயே, (௨)

வேனன்வரைந்துளதாம்விதியின்படி
வேள்விசெய்கின்றவர் நாடாதாய்
வேலையினும்பெரிதாகிமுழங்கிய
வேதரசந்தெரி வார்தேவே
வேடரினுங்கொடியாரதுபின்செலும்
வீணருணர்ந்தனு காதானே
வேள்கணைசிந்துதலான்மலியுந்துயர்
வேர்களையும்படை யாவானே

வேசரியென்றுபலோரிகழ்புன்குண
 மேயகுணுங்களை யாளானே
வீடணனென்றுநலோரைவணங்கில்வி
 டாய்தணியும்பய னீவானே
மேலுலகந்தனின்மாதர்கள்கொங்கைவி
 ஞோதம்விரும்பவி டாதானே
வேதனைமிஞ்சுபொலாமிடி வெங்கனல்
 வீறவியும்படி நேர்வானே, (ωளு)

வேறொருடம்புயிர்கூறுசெய்பண்பறும்
 வேதியர்சிந்தையி னூடார்வாய்
மேதினியின்புறுகோல்புனைகின்றவர்
 வீறுபெறும்படி சூழ்வானே
வேசிகுணந்தவிர்வாணிபர்தம்பொருள்
 வீவிலலம்புரி சீரோனே
மேழிவனைந்தவிர்கேதனம்வண்பெற
 மேகசலந்தரு கோமானே
வேரிநறுந்துணர்வாரியிடுஞ்சிலர்
 வீரமறிந்தருள் கூர்வானே
வீசுதடங்கடலூர்கலமொன்றினர்
 மீமிசைவிண்டபல் பேரோனே
வேகமியைந்தவைராகமுறுந்தவர்
 வீழ்வனகண்டருள் சீமானே
வேணுவனந்தனிலோர்களவின்கண்வி
 ளுவருமொன்றுசொல் வாயானே, (ளு)

யீனர்கருங்குடைநீழலில்வெம்புமெ
 லோர்களுநம்புத யாசிலா
வேழிசைவண்டமிழ்பாடியவன்பர்க
 ளேதமடுங்கனல் போல்வானே
யீரிருகொம்பயிராவதபுங்கவ
 னேடலர்பைந்தரு வாய்வாழ்வா
யேசறுசுந்தரமால்வரைதங்குமி
 ராவில்பெருந்தவர் தாயானு

யீழமதன்கணொருமைமடந்தையி
ஞவறல்கண்டபி ராஞர்வா

வேளனம்விண்டெதிர்சாரணர்வன்கழு
வேறமுனிந்தவ ஞோர்வானே

யானைவணங்கவுமோர்பதிகம்பக
ரீடொருவன்பெறு மாறீவா

யீரமிகும்புலவோனொருவன்பெற
வேமம்வழங்கிய தாராளா,(ரு௩)

வீடில்பெரும்புளியூடுபுகுந்தவ
னீறில்பெரும்புகழ் தோய்வானே

யேறுபொரும்பரகாலனரும்பணி
யேயவியன்பெறு மாயோனே

யேவொவண்டொழுதாலுமவண்டிக
ழீசனெனுஞ்சில பேர்வாழ்வே

யீதுபரம்பொருளாமதுவன்றென
வேசுமகந்தையர் காணானே

யேகபரன்றனதானனமென்பன
வேசமயங்களை ஞர்கூடா

யோரகமென்றதிலாடிநுவன்றதெ
ஞமலிருந்தம காசோரா

வேழைமதங்கொளுமோர்சிலதொண்டரு
மேர்மலிவென்றிகொ ளாருறு

யானுணரும்பொருணீயெனநின்றபி
னியாவையுமிஞ்சிய மேலோனே. (௫௬)

---

தானதனதந்ததன தானதனதந்ததன
தானதனதந்ததன — தந்தனத்தானனு.

மேலுலகமின்றெனினுமீதனலமென்றதமிழ்
வேதநிலைகண்டுபெரி திங்குழைத்தேனையோ

வேதனைமலிந்தமிடிநோய்மிகவளைந்துசுட
வீதலிதமென்றசிலர் தங்களிற்கூடினேன்

வேறுபொருளின்றுபரமேயுளதெனுந்துணிவின்
மேவியபெருந்தவர்கள் பின்றொடுத்தேகிலேன்

மேடமுமுடும்புமுதலாவனவுமுண்டுவளர்
மேனிகொள்குணுங்கரொதிர் சென்றலுப்பாகினேன்
மேகலைபுனைந்தமடமாதராதுகொங்கைமயன்
மீறியருளின்பமும றந்திளைப்பாகினேன்
மேதினிசுமந்தபெருமாசுணமெனும்புலவர்
வீடுதோறலைந்திடல றிந்துளிற்சோர்கிறேன்
வேன்முருகனிந்திரன்முராரியெனவிங்குபல
வீணரைவிளம்புநாக கும்படிக்கோய்கிறேன்
வேடருமிரங்குமனதோடுகுலவும்படிசெய்
வீறுவினைழயும்பெரிய சஞ்சலத்தாழ்கிறேன், (௬)

மேகம்வெருளுங்கொடியகோலரசிகழ்ந்தசிலர்
வீடணனெனும்படிவி ளங்கலெக்காலமோ
வேலையில்வியன்பொருளைமாநதியிலங்கியில்வி
ராவியபசுந்தமிழ்வ ருங்களிப்பாருமோ
வேனுறுதவஞ்செய்வடவூரன்முதலன்பர்கள்வி
ஞாடர்மலர்சிந்திடவெ ழுந்துவப்பாவரோ
மேதியிலிவர்ந்துவருகாலனுளமஞ்சுதவ
வேடர்பலருங்குழுவு நன்றிகத்தாருமோ
மேதகுகருங்கலினிலாவியபெருங்கிணறு
வேனிலினுமிஞ்சுபுனல் பொங்கெழிற்றேயுமோ
வேரிமலியுங்கமலபீடமமரந்தணன்வி
ளாதமதசங்கமுழு துந்தவித்தோடுமோ
வீரமருவும்புயவிசாலர்பலருந்தமது
வேசடைதவிர்ந்துமிக வுங்குதிப்பார்களோ
மீன்வலைசுமந்தவர்சொனூல்கருதும்வண்டர்கள்வெ
யோனெதிருறும்புழுவி னங்களொப்பாவரோ, (௭)

வாலுளைமடங்கலுருவாயிரணியன்றனது
மார்புவகிரும்பெருமை வம்பெனக்கூடுமோ
மாமலர்சொரிந்துவழிபாடுசெயுமந்தணன்முன்
வாழ்வுறநமன்றனுயிர் சிந்தல்பொய்த்தேகுமோ
வாழைமலியும்புகலியூரிலொருமைந்தனுய
வார்முலைசுரந்தவனை யென்றுதித்தாயலோ

மாழைநிறமொன்றுகளிறுகிமொருபெண்டகையை
மால்வரையதன்றலைவி டுஞ்சொல்செப்பாததார்
வாணிபமடங்கைதகைவிழாமுனநெடுஞ்சிகியில்
வாகுபணிரண்டொடுசெல் பண்பன்மற்றியாவனோ
வான்வழிதினந்தினம்விடாமலுலவும்பரிதி
வான்மதியமென்றகண மைந்தபொற்பியாரதோ
மாமிசமுமென்பினொடுதோலுதிரமும்பருகும்
வாயினர்மதங்களினு மொன்றுநிட்டரேனோர்
மாரணமுடன்பிறவிநோயும்விலகும்படிசெய்
மான்மியமிகுந்தொழின்ம றந்துவிட்டாய்கொலோ, ()

வாணிபுணரும்பிரமதேவர்தலைமண்டையணி
வாரையிடையன்சினமொ டன்றுவெட்டுரிலே
வாரிதியருந்தியிமையார்குடிதுலங்கவருண்
மாதவனுவந்துதவ வந்தசெப்பாறுளே
மாதிரமுடன்ககனகூடமுநெருங்கிவளர்
மாமாமுறிந்திடுசெ யங்கொள்பொற்பூருளே
மாசறுசிதம்பரசதாசிவநடங்கருதி
மாசுணமுடன்புலிதொ ழுந்திலக்காடுளே
வாணனையடர்ந்தபினொர்பேடியிரதங்கடவு
மாயவனரும்புகழ்வி ளங்கலிக்கேணியே
வாடைமலிகொங்குவளநாடதினலஞ்செய்பெரு
வாளரவமென்றுதிகழ் குன்றணிச்சாரல்வாய்
மாரிபொழியும்பொழில்குலாவுபல்குறிஞ்சிகளின்
மானுமளவின்றியத லங்களிற்பாவியேன்
வாதனைதவிர்ந்துகளிகூர்வனமொழிந்தனைய
வாறுபுரிகின்றிலையி தென்கொல்சற்றோதுவாய், (உ)

நாலுமறையும்பழுதிலாகமமனந்தமுமெ
ஞானமயமென்றிடநி றைந்தவித்தாரனே
நானெனுமகந்தையடியோடுகெடவென்றவரு
ளுடகமிடுஞ்சரண பங்கயத்தேசிகா
நான்முகவிரிஞ்சன்முதலீனியமகன்பொருவு
நாவலர்சொலும்பல்கவி கொண்டமற்றோருளாய்

நாடியுருகும்பரமயோகியர்கீனந்தபடி
நாடொறுமுயன்றுதிரி கின்றசித்தேசனே
நாமெனவுடன்படுசொலோதுநரையுங்கறுவு
நாய்கிகர்சினங்கொள்பவர் சிந்தையிற்சேர்கிலாய்
நாவியதினுங்கொடியதாடகமெனும்புனிதர்
நாகரிகமொன்றவுத வுங்குணச்சாகரா
ஞாலமுழுதுந்தளர்வுறுமைவிழையும்படி செய்
நாசமிலகண்டபர மென்றசிற்கோலனே
நாரியரினுஞ்சிலர்விகாதமில்சுதந்தரகு
ணாலயமெனும்புகழ்பெ றும்படிக்காளுவாய், (உஹ)

நாடுமுழுதுங்கடியகாடுபலவுந்தனவெ
ளுவறிதருந்தெளிஞர் தங்களைச்சீறிடாய்
நாசியினிடம்பழகும்வாசியின்முயன்றுபொது
ஞாயமிகழ்கின்றவர்நெ ருங்கவெட்டாதவா
நாவல்சொரியுங்கனிசெயாறுதவுபொன்பொருவு
நாகபதியின்பம்விழை கின்றவர்க்காகிடாய்
நாரணனருங்கலைகொடான்மகிழ்விதஞ்செய்திட
நாகொழியுமுன்கருது நண்பனைச்சூழுவாய்
நாகருலகின்றலையதானகவிடம்பெரிது
நாரம்வருமென்றதுதொ டும்படிக்கேவினய்
நாதியருடம்புதிரவாறுசெயவென்றணுகி
ஞனினைதருங்கணையு மன்றிடப்போகினய்
நார்மலிதரும்பனவனுக்குமொருமந்திரமு
ணயமிழந்தவரி லங்கொர்சொற்கூறினய்
நாறுமலர்சிந்தியெணில்பாடலும்விளம்புநரு
ளுழிகைதொறுங்கனவில் வந்துசொற்பேசுவாய், (ஜ)

சேலுறழ்கருங்கணுமையாளெதிர்நடம்பயில்சி
வாவெனவிளம்புநர்செ யஞ்செய்நற்பார்வையாய்
தேனினுயருஞ்சுவைசெய்காவிரியிடந்துயில்கொள்
சீதரனில்வந்தொருத ரஞ்சிரித்தாடினய்
தேவகிதரும்புதல்வனுகியிகல்வண்டர்பலர்
சேணுலகுறும்படிசெ யுந்திறற்சீலனே

சீவகனைநன்குபுகழ்சாரணர்முழங்கியெரி
தீவிழுபதங்கவின மென்றறச்சாடினாய்
தேவுபலவென்றபிழைவாதமொழியும்பதிதர்
தீர்வருபவங்களில்வி ழுந்தழப்போடுவாய்
தீவிரதரங்கொள்சிலரேயுணர்வுறும்படிதி
வாவினும்விளங்குசக ளங்கொளுற்சாகனே
தேடியபசும்பொனதுவேதுணையெனுங்கயவர்
சேதமடையும்படிசெ யுஞ்சினத்தீயுளாய்
சேவலெழுதுங்கொடிகொள்வேலனெனவந்துனது
தேவைமுழுதுந்தருது மென்றுசொற்றேகினாய், ௯௫

சீயெனநிணம்பருகுமீனருமிகழ்ந்துநகு
சீர்கொளுமென்வெண்கவியி னுங்கொள்பற்றாசையாய்
சேடுபெறுவெண்குருகைவாளைபருகும்புனல்கொள்
சேய்நகரிலன்றதுப காந்தியற்றாதவா
சேரனெதிர்சென்றுபொருளீகெனவிரந்துமொரு
சேதியெனுடன்சொலவு மங்கைசைக்காதவா
தீதறுநிலங்கமழநீர்குளிரவங்கிவளி
தேசசைவிசைந்திடமு னஞ்செயுற்பாதனே
சேகரமுறுமபலபல்கோடியுயிருந்தழைவு
சேரமுகில்வநதறல்பொ ழிந்திடற்காதரா
சீடர்கள்விழைந்தபெருவாழ்வுறமுயன்றுதளர்
தேசிகர்மனந்தொறும மர்ந்தநட்போவிடாய்
சேய்மையெனலன்றியளவோதரியதென்றகல்வி
சேடவெளியும்பிறவு மொன்றியொட்டாததே
சேவரிபெரும்புள்சகடாகுமுதலொன்றின்மிசை
சேவையுதவும்பொருவில் சுந்தரச்சோதியே. (௯௬

---

தானத்தனதன தானத்தனதன
தானத்தனதன—தாந்தனதானா.

சோதிக்கதிர்மதியாதிப்பொருள்பல
தோயத்தகுமிசை தூண்டுகிலாயோ
தூமத்தினைநிகராகித்தவழ்மழை
தூறிப்பொழிவது காண்பவன்வேறோ

சூரத்துடனெழுகோபக்கனலிடை
  சோகப்படவிடு          தீங்கொழியாயோ
சோலைக்கிளியனையார்சொற்குருகுபு
  சோரப்படர்வினை          நீங்கலொனாளோ
தூரத்தினர்களுமோதத்தருபுகழ்
  சூடத்தருமுனை          யான்பரவேனோ
சோகைப்பொருகுணமுடத்திரளிடை
  சூதுக்குணமொடு          வீண்புகல்வேனோ
தூலப்பொதியுறழீனர்க்கனலொடு
  சூறைப்பெருவளி          போன்றடலாரோ
தோல்விப்படவடியேனைப்புவிமிசை
  சோதித்திடுநினை          வேன்கொடுளாயோ, (௬௯)

சோடித்தலையுமிஞைப்புகழும
  தோன்மத்தரைநிகர்          வீம்புசெய்வேனோ
தோலுக்குணுமுணவாகச்சிலசில
  சோளப்பொரியிட          லாங்கொடையாயோ
சூலப்படைகொடுமேதிப்பரியிவர்
  சோரச்சமனிகல்          போந்தகையாதோ
சூலுட்படுபவமாமைக்கடல்விடு
  தோணித்தலைமையு          ளான்பிறனேயோ
சூளைக்கலமுறழ்மேனித்திரள்செய்சு
  பாவத்தினைவெல்          பாங்கருளாயோ
சூர்மிக்குறுமெளியோரைத்துயர்புரி
  சூள்பற்றினர்குல          மாய்ந்தொழியாதோ
சூழ்கற்பகநகர்வாழத்தருவர்கள்
  சோபச்சிரமடும்          வேந்துதியானோ
சூகத்திரள்களுமார்தற்கியைவுறு
  சோகிப்பலர்நிலை          போந்தழியாரோ, (௭௰)

**கா**திக்கருமஙவாமற்புதமுனி
  காதைப்பெ... வுசொல்          வான்கலைவீணோ
கானப்பெ...றின்மலிஞானப்பொதியைம
  காவி... ...          மாந்தல்பொயாமோ

காமர்க்குதிரைகொள்வானுற்றவன்விழி
காணக்குருவெதிர் நேர்ந்ததெவாறே
காழிப்பனவனநாள்செப்பியகவி
காயக்கினிபுகின் மீண்டதெணேறே
கார்துய்த்திடவருநீலக்கடல்படு
காலத்தொருசிலர் மாண்டிலரோறே
கால்பெற்றுலவுவன்மீனுட்பருகும
காரைத்தரவருள் கூர்ந்திலையோ
காரிக்குளமெலிவாகப்புளிபுகு
காதற்றமிழ்மறை யோர்ந்தமையேறே
காவிக்கலைபுனேமோனத்தவர்பலர்
காசற்றுயர்கதி சேர்ந்திலரோயோ, வறு

காதுற்றிடமலைமீதுற்றுருளிலொர்
காயத்துடனுய வீண்டுசெய்தாயே
காணக்குவைதருவாரிற்குலவிய
காதக்கலிதர வேன்றனையேமா
காளப்பதியிலொடத்தவனிடு
காசக்கனவொடு போந்ததலோவோர்
காகத்தொடுமெனதாவற்சொலியுப
காரப்படல்செய வேண்டிலையோ
காரத்திறும்வெகுவாகக்களையும்வி
காதத்தினையினி தீர்ந்தனையோ
காயத்தமராருநாடிப்புகழாச
காதித்தவரயினர் தாழ்ந்தெழமேளுள்
காமுற்றுனதுரையால்வெட்டியசதி
காரக்கிணறதின் மான்புனைதோளார்
காருத்தரொனுமனுருச்சியொடடி
காலப்புதயம தாம்படிபாராய், (௭)

வாதிப்பவரொதிரேறொத்தொலிதரும்
வாய்பெற்றவர்பகர் மாண்புடையோனே
வானத்தினைவழியாகக்கொடுமுன்வ
ராவப்பெருவர மாங்கருள்கோவே

வாசக்கமலமுளான்முற்றருமகர்
வாழத்திருவுரு வாங்குருநாதா
மாணைப்பொரும்விழிதோய்பொற்றிருவமர்
மார்பத்துடனொரு பாம்பணைமேயாய்
வாணிக்குறழவையார்மெய்க்கதிபெற
வால்வெற்பதன்வரை நீண்டகையானே
மாசற்றொளிர்தமிழ்பாடிப்பகர்கிளி
வாழ்மற்புயமிசை பூண்டகுராவா
மானக்கிரிமகளாகிப்பலதுயர்
மாறச்செயுமருள் வாய்ந்தவிநோதா
வாரிக்கிடையெழுபானுத்தலையுல
வாதுற்றுலகது சூழ்ந்தறிவானே,(௯௰)

வாரிப்பலமலர்தூவித்தொழுதமு
மாணிக்கெமபய மீர்ந்தகுணாலா
மானக்கெடுதிவராமற்கதறிய
மாதுக்கணிகலை யாந்திரளீவாய்
வாழைக்கனிவடைதோசைக்குவைபொரி
மாமுற்பகர்பல வார்ந்தகணேசா
வாளொத்தவிர்விழிவேடச்சிறுமிமுன்
வாடிப்பரவிய வாஞ்சைகொள்வோனே
வாயுத்தவபலமாகித்திகழநு
மானுக்குரைவிதி யாய்ந்துசொல்வானே
வாலைப்பருவமுணுமுத்தகையும்வ
ழாதுற்றுயிர்முழு தீன்றருடாயே
மாயைத்திமிரமதாணிற்பலரொன
மாழ்குற்றிகழ்பவர் தாங்கரும்வாழ்வே
வாழிசசதுமறைமேனிச்சயமுணர்
வாரைக்கறுவுபுன் மாந்தரையாளாய், (௯௧)

ஆதிக்கடியனவோதித்தளர்வுறு
மாணைக்குடனெதிர் போம்பெரியோனே
யாகுப்பரிமிசையேறிச்சகலமு
மாமப்பிரணவ மோம்பமமனேனே

யாழிக்கிடைமனுனுற்றிடவரு
மாலத்தினைநுகர் சாம்பமயேசா
வாலிச்சுவையினைநேர்சொற்சொலியரா
ஞருக்குவகைசெய் மாங்குயில்போல்வா
யாதித்தனைநிதநாடித்தொழுதெழு
மார்வத்தினர்நுகர் தேன்பொருதேவே
யாறுக்கதிகமிலாவுத்தமநெறி
யாரத்திகழ்வத ரும்புயவேளே
யாரத்திதழியில்வாசத்துளசியி
லாணிப்பொனின்மிளிர் தீங்கவியோனே
யாண்மைக்குணமலிநாகத்தினையனை
யானைக்ககபதி யேய்ந்தடுவானே, (சஎ)
ஆணைக்கமைதியுருமற்பிழைசெயு
மாடற்சிறுவர்க ளாய்ந்தறியாதா
யாளிக்கடுவனரைச்சரபம
ரைட்டிடும்விழை வோங்குநர்பாகா
வாசைக்கடலிடைமூழ்கிக்கெடுமவ
ராள்கைக்கிறுதிசெய் தூண்பொருதோளா
வாவிக்குறுதுணையாகிச்சுருதிய
னேகத்தினுநனி தூங்கிருதாளா
வாசிச்சமயமெலாமுற்றவரவ
ராதிச்சையின்வழி காண்டகுசோரா
வாழத்திருவுளமேபற்பலயுக
வாயுட்பெறுமவர் தாங்களுமாவா
யாவற்சமரசமேயற்புதசக
ளாசித்திகள்புரி சோம்பலிலானே
யான்முற்றுயும்வகைதேடிச்சுழலெனை
யாசித்தருமையொ டாண்டபிரானே. (சஎ)

தானதந்தனத்தனதனதத்தன தானதந்தனத்தனதனதத்தன
தானதந்தனத்தனதனதத்தன தந்தானு.

ஆண்மைகொண்டபொய்ச்சமயமனைத்தையும்
வேருடன்கெடுத்திமையவருக்கரி
தானவின்பமுற்றுனதுபதத்தினில் வந்தோனு

ராரணங்களுச்சியினுவலத்தரும்
வாய்மையைத்தலைக்கிழவன்முதற்பல
ராகமங்களுக்கயலறுநுட்பம றிந்தோறு

ராசுமுன்சொலப்படுகவிதைத்திற
நாலுநன்குகற்றவனாயுநித்தமு
மாசியஞ்சொலத்துணிபவர்முற்றற வென்றேறு

ராசிலந்தணத்திரண்முதலுத்தம
ரியாவருங்கலிப்பிணியில்வெதுப்புறு
மாகுலங்கெடுத்தவரவரிச்சைசொ ரிந்தோறு

ராவலென்றமைக்கடுவைவெறுத்துன
பாதபங்கயத்துரிமைமிகுத்துநி
* ராசைவென்றிபெற்றறிவினிடத்தில மிழ்ந்தோறு

ரானினங்கண்முற்றுயமுயலுற்றொரு
நான்முகன்குறித்துளசமயத்தொடர்
பாறுநன்றென்மெய்ச்சமரசநட்பில மைந்தோறு

ராடையுண்டிபொற்பணமருள்சிற்சிலர்
மீதுசெந்தமிழ்க்கவிகள்வகுத்துழ
வாதுனன்புடைப்பனுவல்கண்மெத்தமொ ழிந்தோறு

ராவியொஞ்சுறத்தருமொழிசெப்பிடு
மாதர்குங்குமத்துணைமுலைவெற்பின
வாவொழிந்துசிற்சுகமவுனத்தில ளைந்தோறு,(௯௰)

ஆழியங்கரைப்புலவர்நடுக்குற
வானகங்கறுத்திடமுனுநித்திடு
மாலமுண்டவற்பரவுநலத்தைவி ழைந்தோனே

வானையொன்றுமிக்கலறிவனத்திடை
மூலமென்றிடக்கடிதுகரத்துறு
மாழிகொண்டளித்தவனைநினைத்துணர் கின்றேனே

வாருவென்றமைப்பரிமிசைமுக்குழி
தோசையுண்டையெட்பொரியவலப்பள
மாதிதந்தவர்க்கருகுறுமத்தியி னண்போனே

வாடலம்பரிச்சிகியினிடத்தமர்
சேவலங்கொடிக்குமரன்வலத்தயி
லாயுதந்துதித்தரியதிருப்புகழ் விண்டோனே

வாயிரங்கரத்தலரிமுனித்தம்பி
டாதுதெண்டனிட்டெனதுமனக்குறை
யாறிடும்படிக்கருளெனநத்தியி ரந்தோனே
வாறணிந்தபொற்சடையினனத்தின
மாலயன்சுரக்கணமறியத்தனி
யாமையங்கழற்றொடுகவுரிக்குறு மன்போனே
வாவிதுன்புறச்செயல்கொலல்குக்கல்கொ
ளூனருந்தல்விட்டவர்நெறியுத்தம
மாகுமென்றிசைத்திடுபொதுமைத்தகை கொண்டோனே
வாரியந்தமிழ்க்கலையும்வெறுத்துட
லானதுங்களைத்திடுமுதன்முத்தியி
னார்பதங்கள்பட்டுதிர்பொடியுச்சிய ணிந்தோனே, (வ)

**வா**ண்மலிந்தமுத்துறழுமெழிற்றிரு
நீறுகுங்குமத்தொடுமணடித்துகள்
வாய்தரும்பொதுத்திருவுருவத்தொட லைந்தேனே
மான்மியங்கொள்சட்சமயமுமெய்ப்பர
ஞானமுந்தனிப்பிரணவமொப்பிம
காபதந்தனிற்புகலிலகச்சொல்வ னைந்தேனே
மாயனைங்கரத்தினனரன்வெற்றிவை
வேலனென்றநற்கடவுளுருச்சிலை
வாழ்வுறுந்தலப்பகுதிகள்பற்பல _னே
வாலசுந்தரக்கவுரிமடித்தல
மீதுறுங்குகக்கடவுளருட்பெற
மால்பொதிந்தமற்றிருமலையுற்றுமு ருண்டேனே
மானமுன்பிறப்பினிலுருவிச்சொரி
பாடலும்பெறக்கருதியலைப்பெரு
வாரியின்கணுற்றுயிர்விடுபெட்பொடு சென்றேனே
மாசில்செந்தமிழ்ப்பனுவல்களெத்தனை
யோவரைந்துபற்பலதரமப்பினின்
மாறிலங்கியிற்சினமுடனிட்டுமெ லிந்தேனே
மாயைநின்செயற்கயலலநிச்சய
மாகுமென்றிகத்தினும்விழைவுற்றபல்
வாறடைந்திடப்பெரிதுகுறித்துமு யன்றேனே

மாதவஞ்செயுத்தமர்சரிதப்பெரு
நூல்கணம்பியுட்கனவில்வெறுப்புவ
ராமலின்றுமிக்கணமுமதித்துந யந்தேனே, (வரு)

மானதந்தனிற்கருதுமுருக்கொடு
நேர்தலன்றிமற்றையவடிவத்தொடு
மான்மனந்தனைப்புகழ்பவர்வெட்குற வந்தாயே

வானிலண்டர்மிக்கதிசயமுற்றிட
வேலைவண்டர்தட்டழியவிகத்துறு
மானிடஞ்சிரித்திகழ்பலசொற்கள்ப கர்ந்தாயே

மாரணஞ்செயக்கருதியென்முற்பல
பேய்கள்வந்தவற்றையிலவைவிட்டவர்
மாய்வுறும்படிக்கறையவொர்சற்றுமு னிந்தாயே

மாடிவர்ந்தவக்கினிமலையிற்புலி
சேலமண்டபத்தெதிர்கன்முதற்பல
வாவிளைநதத்தினிலுயவிட்டும கிழ்ந்தாயே

மாமிசந்தினச்சிறிதுமுள்வெட்கமு
ற்றுதவம்பர்முற்றெற்றழியுமுன்மிக்கம
ஞ்ஞலயஞ்செயற்கிசைவறுமெய்ப்பகை தந்தாயே

வாரணங்களற்பொறியுகுகட்பொரு
சீயமெண்பதப்பறவையிணைக்கவி
வாணர்சங்கமெச்சியபுகழிட்டும ணைந்தாயே

மாழைவெங்கலிப்பிணியிலிளைத்தறி
வீனர்நிந்தனைக்கனலிடைமெத்தவும்
வாடிநொந்துனைபபழிசொலவைப்பது நன்றாமோ

மாநிலந்தனிற்புதைபடும்வெற்புறழ்
பாறையின்கிணற்றறல்வருவித்ததி
வாரமொன்றிமுற்றரும்வரமொத்துமு னின்றுள்வாய்,

சேண்மடந்தைநட்புறுகுகனைத்துதி
கூறிமீண்டுமெற்கொருகனவிற்பல
தேவரின்றென்மெய்த்தெளிவுபுணர்த்தும கண்டோகா

சேடனெண்கதிர்ப்பரிதியகத்தியன்
வாயுமைந்தன்முற்படுபலவித்துவ
சேகரந்தொடுத்தணிபனுவற்புனை சந்தோடா

சீகரந்தெறித்திடவலைமொய்த்தகல்
சாகரந்தனிற்குடிகொடயித்தியர்
சிரழிந்திடப்பொருமவரிச்சைய திந்தீவாய்

சேல்வரைந்தமற்கொடிகொளொருத்தன்முன்
வாழவென்றுமட்சுமையுமெடுத்தொரு
சேவகன்கரத்தடியுமுவப்புறும் வம்போனே

சீதசந்திரத்திருவதனத்தொரு
மாதழுங்குமத்ததியிலொர்சட்டிய
தேநறுங்கனித்துணையுதவச்செயு மொய்ம்போனே

தேனெனுஞ்சுவைக்குதலைமொழிக்கனி
வாய்மலர்ந்தடுத்துரையுமுரித்துறு
சேய்வதஞ்செய்கைக்கொடியவருக்குமி டுந்தாளா

சீதரன்கடற்றுயில்கொளுமச்சுதன்
மாயனைம்படைக்கரியனெனப்பகர்
சிலர்தங்களைப்பெரிதிகழற்பரி டஞ்சேராய்

தீதிறுந்துமித்தொணிபெருகப்பரி
யாகமங்கியற்றியவரசற்கெதிர்
சேயவன்சிறைப்பறவையிடத்தில விர்ந்தோனே, ௯௫

சீறிவந்திழுத்தவனுடைபற்றவ
மாதுநொந்துனக்கபயமெனப்பகர்
சேதிகொண்டுபெற்பலகலையக்கண மங்கிவாய்

தீயுமிழ்ந்தகட்செவியெழுதப்படு
கேதனன்குலத்தொடுமடியக்கன
தீரமொன்றறத்திறைமகன்முற்சிலர் பங்காளுய்

தேவிபங்கர்முற்கனகவரைத்தலை
பாரதம்பொறித்தவனைநினைப்பவர்
தேடுகின்றவெப்பொருளுமிகத்தரு திண்டோளா

தேரிவர்ந்தமுத்தலைவரிடைச்சிறு
பேதைமங்கலப்பணிசெயவிட்டவி
சேடமொன்றுசொற்கிழவியைவெற்பில்வி டும்பீடோய்

தேளெனுங்குணத்தவுணரறப்பொரு
வேலணிந்தகைக்குமரனெடுத்தகொர்
சேவல்வென்றிசெப்பிடுமவர்பத்தியி டந்தோய்வாய்

சேதமின்றிமுற்பிரமன்விதித்தன
வாமதங்கள்வத்திரமெனவுற்றுணர்
தீவிரங்கொள்பக்குவரையடுத்தவ ருந்தேர்வாய்
சீயமென்றசிற்றிடைவணிகக்கொடி
நாமமொன்றுரைத்திடலுமருட்செயல்
சேர்நலஞ்செயற்புதம்விழைவுற்றவர் கண்போல்வாய்
தேறுசெந்தமிழ்க்கிளிமதுரக்கவி
யேமொழிந்திடத்துணியும்விடற்கெதிர்
சேகுறுங்குணத்திருடரையற்றைவ கிர்ந்தோனே,(ஐ)

ஏண்மதங்களத்தனையும்வெறுக்கரு
ஞாயிறும்பனிக்கதிருமுடுத்திர
ளியாவுமங்கிமுற்பகர்பவுமுற்றிடு மொண்சேர்வா
யேமபங்கயத்திரள்புளிமுற்பகர்
தாவரங்கள்சிற்சிலவறியத்தின
மேழ்பசும்பரிச்சகடமதிற்றிகழ் சிங்காரா
யானைமுன்சொலெக்குழுவுமண்முற்படு
பூதமைந்துமெக்கடவுளுமுற்பக
வினியங்கையிற்கயிறுதொறட்டிகொ ளுந்தாயே
யிரிரண்டெழிற்றவளமருப்புறும்
வேழமொன்றிலுற்றவனுமவற்புண
ரோழையுந்துணைப்புலவருநத்துமி றும்பூதே
யீசனென்றசொற்பொருளிலெகிச்சய
மாகுமென்றதட்டியுமறைகட்பெரி
தேசுகின்றதுட்டரையுமளித்தரு டந்தாயே
யேயெனுஞ்சொல்சொற்றிகழினுமெய்க்குரு
நாதனுண்டெனுட்டுணிவுபெறிற்பழி
யாதுமின்றிநற்சுகமடையச்செயும் வண்சீரோ
யீகையென்றசற்குணமொருசற்றுமு
ஞுதுபொன்புதைத்திடுகையவர்க்கனு
வேனுமின்பமுற்றிடவுதவற்குளி ரங்கானே
யீரமென்றுணர்த்திரள்சொரியச்சனி
யாததொண்டருக்கெமபயமற்றிடி
யேறெனுந்தொனித்துதிபகர்வெற்றித ருந்தாகா,(ஐஅ)

விமெறும்புமுற்பகர்பவுமிக்கது
ராகமொன்றுமுற்பெறுகலவிச்சுக்
மேபுகழ்ந்துநற்றவமிகழற்பர்க ளண்டாதா

யேகலன்கிழப்பனவன்முதற்பல
ராயுமன்பருட்கணவினிடத்தினி
தேகியந்தரத்தினரறியச்சொல்வி ளமபாரவா

வேகமென்றசொற்பிழைபலபற்பல
வாகுமென்றெதிர்த்தமர்செய்மதத்தரு
மீடுகொண்டுவெப்புறவுமளித்தில குங்கோரா

வேடுதுன்றுமுற்றுளவியடப்படு
பாலுடன்சருக்கரையுநிகர்ப்பவு
மீனநிம்பமொத்திழியவினித்தபெ ருஞ்சாரா

வீகமுந்துபொற்களபமுலைச்சம
ராடுமங்கையர்க்குரிமைமிகுத்தெளி
யேனிவண்டவித்திடலுமியற்றவு மொஞ்சானே

யானுயுந்தனிக்கதியினுமிக்கது
கோறலும்புலைத்தொழிலுமறுப்பதெ
ஞவிரும்புசத்தியம்வருவித்தக சோரா

வேவுறுங்கரத்தெயினர்களிற்கடை
யாருமிந்திரர்க்குயருநலத்தரு
மேர்பொருந்துறப்புவியிலியற்றும்வி யன்சாரு

வேறுவெண்களப்பறவையிடிக்குர
லாகுசிங்கமற்றிணையிலுருட்சக
டேழகங்களிற்சகளவுருக்கொளு மெங்கோவே. (மஅ)

---

தந்ததனதந்ததன தந்ததனதந்ததன
தந்ததனதந்ததன—தந்ததனதானு.

எங்குநிறைந்தபொருளொன்றதுநினைந்தபடி
யென்றும்வருமென்றனு மிசைந்துமகிழாதா

ரென்கடவுணன்கடவுளங்கவர்தொழுங்கடவு
ளிங்கிவர்கொளுங்கடவு ளென்றுசொலநாணு

ரின்சொல்பலவும்...னவறிந்தும்விடமுங்கனலு
மெஞ்சியகொ...மொழி யுஞ்சினம்விடாதா

ரிந்தவுலகின்றலைபிறந்துமடியுந்துயா
மின்றியுயுமொண்கதிவி ழைந்துனிசைபாடா
ரிந்திரன்முகுந்தனுயர்கந்தனெனவம்பனையி
டும்பைகெடுமென்றெணியி யம்புபுலோகாவா
ரெண்டருபெருங்கடலருந்திவிடுகும்பசனி
ரண்டுசெரணங்களும்வ ணங்குநெறிதோயா
ரிங்குறழ்கொடுங்குணமுறுஞ்சமணர்தஞ்சுருதி
யின்பமெனநம்பலினி ளங்கவிஞராறு
ரிண்டனையபுன்கவிவியந்துமதுரம்பெருகி
ருங்கவியிகழ்ந்திடுமு ரண்டகைகெடாதார்,(ஞு)

இந்தனையவெண்பொடிசிவந்தபொடியொண்டிருமு
ணென்பனவிகழ்ந்துகரு மம்புரிபொலாதா
ரிம்பரைவிரும்புமவரும்பர்நலமென்றுபெரி
திஞ்சையயமுங்குதிரை யுங்கொளல்செய்தீயோ
ரெண்கொடுகுரங்குறழ்குணங்கொடுசகம்பெரிதி
டைந்திடநெடுந்துயர்செ யுங்கொடியகோலா
ரெந்தமணிதன்றனியிரந்துநனிகெஞ்சினுமி
ணங்கியொருபண்டமுத வுஞ்செயலுறாதா
ரென்புதிரமென்றசைநரம்பதள்குளம்புடன
யின்றிழிசுணங்கலென நிந்தைபெறும்வாழ்வா
ரிண்டையணிசெஞ்சடிலனன்பனெனவிண்டுமவ
னெண்சொருபமொன்றுநிறை வொன்றுமுணராதா
ரிண்டர்பரவுங்கரியனண்டரிறைவன்சுதனி
டம்பொருகளந்தனினு வன்றமைமெய்ணுதா
ரென்றுமதுளங்கடவுளுந்தொழுதுனன்பிலமி
ழென்றனையிகழ்ந்திடமெ லிந்தயரலாமோ, (வ)

செங்கனகமன்றினிடைவந்துதிவிண்டதொர்தி
னந்தனின்மொழிந்துளவ ரம்பழுதுபோமோ
சிந்துதிரையுந்துகடலின்கரையிடங்குலவு
செந்திலிலவண்கபட மன்றுசெயலேனே
தென்றல்வரையின்றலையமர்ந்தமுனிவன்கைதரு
செம்புநதியின்கணது விண்டதுபொய்தானே

திங்களுலவும்படிவளர்ந்தொருகுன்றின்மிசை
சென்றுருளுமன்றுயிர்ப்பு ரந்தருளலேனோ
செண்டுகொடுகுன்றறையுமன்பதியிலென்சிறிய
சிந்தையறியும்படிசொ லுஞ்சொலெணிலாயோ
தெங்குகமுகும்பலவுமிஞ்சுமெழில்வஞ்சியதி
பன்கொடைவிழைந்துலைய வுங்கடவிலாயோ
தின்பனவுமுண்பனவுமின்றியலைகின்றபலர்
தெம்புறவழங்குமிசை யுந்தரவலாயோ
தென்றிசையினந்தகனைவென்றுயகினைந்துயர்செ
பந்தவமுயன்றபய னென்றுமிலேயேயோ,(வ௨)

திந்தெய்திமியென்றுநடனம்பயில்சிகண்டியிலெ
திர்ந்துமொருவம்புமொழி யங்குசொலிலாயோ
தெண்டனிடுமென்கனவிலன்றருணையின்கனொரு
திண்சொலறையுங்கருணை யுங்கெடுவதேயோ
சிங்கவடிவுங்கொள்விடையின்புறமிவர்ந்துமைசி
றந்தருகிருந்திடவெ னெஞ்சுள்வரல்வீணோ
சிங்களமுறுந்தினமொரரந்தணனெனும்படிதி
கழ்ந்ததுபகர்ந்தநினை வுங்கழிவதேயோ
சிந்தகறுமைழந்தவனுடன்கனவில்வந்தகல்செ
கங்குளிர்விதஞ்சொல்சர தந்தவறுமேயோ
சிந்துரமுகங்கொடுநிகழ்ந்துநினைவின்படிசெ
யம்பெறுவையென்றுறுதி விண்டதழிவாமோ
செந்துமுழுதுஞ்சுகமுறும்படிவிரும்பெனுடல்
செம்புலமடைந்துநசி யும்படிசெயாதே
திண்டிடைசரிந்தினிதிருந்தபடியன்றிலைசெ
றிந்தபொடிகொண்டணர்ப யன்புனையவாள்வாய்,()

சங்கமணியுங்கையுமையுங்கமலமொன்றிவளர்
தங்கமொடுவெண்பொனிகர் மங்கையருமானாய்
சண்டனைவதஞ்செய்தொருமைந்தனுயவன்றுபுரி
சங்கரசயம்புவென வெண்கயிலைமேயாய்
தண்டம்வளைசங்குசிலைகண்டகமணிந்தவுணர்
தங்குலமடுங்கரிய னென்றுமிளிர்வானே

தண்கமலவுந்தியரிமுன்புதவவந்துபல
சந்தசுருதிநிறைந்தசிக மங்கடருவானே
தந்திரமுமந்திரமுமின்பமணமுந்துயர்த
ரும்பிறிதுமுன்றெருழவி ளங்கியகணேசா
சம்பரனேவென்றுமகிழங்கசன்மணங்கமழ்ச
ரம்பலதொடுந்தொறுந குங்குணவிசாகா
தந்ததனவென்றிசைபயின்றளிவிருந்துணரி
தஞ்சததளம்பலதி றந்தருள்விஞேதா
சந்திரன்முனன்பிறெடுபொங்கலிடுகின்றவர்த
கும்பயனுறும்படிசெ யுங்கருணையோனே,(௯௯)

சங்கடமறும்படிதுணிந்துமறைவிண்டவிர
தங்களின்முயன்றவர்க ஞெந்தழுதல்காணுய்
சந்தமொலியின்சொனிறமுன்சொல்வனகண்டறிக
ரங்கெடுமிளம்புலவர் புன்சொலணியானே
சந்தனநெடுங்கிரியைவந்தனைசெய்கின்றவிலர்
தஞ்சமெனநின்றருள்சு ரந்துபொழிவோனே
சஞ்சலமறுஞ்சமரசங்கொளும்விடங்கரொதிர்
சண்டையிடும்வண்டர்குலமுஞ்சுடவொல்கானே
சந்தையினிடம்படுசுணங்கனின்மெலிந்துசர
தங்கெடமுயன்றிடமெ யன்பனைவிடானே
தந்துமலியுங்கணிகைமங்கையருமிழ்ந்துதவு
தம்பலமுமுண்பவர்சொ னிந்தைமிகையோனே
தந்தையனைமைந்தர்மனைமுன்றிகழ்பெருந்தமர்த
ணந்துயர்தவஞ்செயவ ருந்துறவர்நேயா
தண்டிகையுடன்களிறிகழ்ந்துபலியுண்பவர்கள்
சங்கைமுழுதுங்கெடவி ளம்புமுபதேசா, (௱)

அங்கணிலமுண்டுபிஞுமிழ்ந்தமைவிளம்பிடுமொ
ரந்தணனிரந்துதொழ லுங்கிழிகொய்தோனே
யண்டர்பலர்கண்டுளநடுங்குறவெழுங்கரிய
வங்கதமதன்றலைந டம்புரியுமாயா
வங்கியும்வெருண்டழவருங்கடுவெறிந்துமினி
தஞ்சலெனவிண்டெளித ருந்தியமயேசா

வைந்துபொறியுந்தினமொழிந்துருவசிந்தனைய
துஞ்செயுநலம்பெறில்வ ரம்பலவுமீவா
யங்கசன்விழைந்தபடிசெஞ்சிலையுமம்புமரு
ளம்பிகையைநம்பியவர் பின்செலுமொயாரா
வண்டமுடிகண்டுவெருகொங்கணனுடன்பிறரு
மந்தகனைவென்றுநில வும்படிகொள்வானே
யங்கெயினர்துன்புறமுறிந்தபலவின்கனிய
னந்தமுதவும்படித ழைந்திடல்செய்தோனே
யன்பில்சனகன்சொரியுமுண்டிமுழுதும்பருகி
யந்தநிலைதந்தருள ரும்புகழுளானே, (ஞ௲)

அஞ்சனநிறம்பெறுபெருந்தருவர்தம்பதியி
லந்தரர்கொடுஞ்சிறைவி டுங்குமரவேளே
யந்திபகலுங்கனவில்வந்தெனைவிரும்பியென
தஞ்சுகமெனுஞ்சொலுமொ ழிந்திடவெள்கானே
யஞ்சுவிதமென்பவர்களொஞ்சவகையொன்பதுமு
னஞ்சனைசுதன்களிபெ றும்படிசொன்னோனே
யம்புவியுடன்பிறவுமுன்றரும்விரிஞ்சன்வரு
மம்புயமலர்ந்திடவும் வந்தகதிரோனே
யண்டரியபுன்குணமலிந்திடலினண்டுமிக
ழுங்கணநிகர்ந்தமன முந்தழுவுகோவே
யம்பிடைபிசைந்துவிதியொன்றுமறிகின்றிலர
கந்தையிலிடுஞ்சிறிய மண்குவையுமோவா
யந்தகமதங்களொடுகண்கொள்சமயங்களினு
மன்றியபதந்தனினு மொன்றுமொருதேவே
யஞ்சலிபெறும்பரவெறும்பகடுறும்புழுவ
கம்புலுயிரும்புணர கண்டமயவாழ்வே. (ஙகூ)

---

தனனதந்ததந்தான தனனதந்ததந்தான
தனனதந்ததந்தான—தாந்தான.

அகநிறைந்தசந்தோடமுடையதொண்டர்பின்பேகி
யவர்பதந்தொழுந்தாக மீந்தாயே
யவலநெஞ்சகந்தோயுமதவிதண்டர்முன்பேசு
மதுவிதென்றசந்தேக மீர்ந்தாயே

யகளமென்றொடுங்காதுசகளமென்றுமிண்டாம
லவைகலந்தபண்போர வார்ந்தாயே

யறுமதங்களும்பேணும்வடிவுகொண்டுகொண்டேயெ
னறிவெனுங்கண்முன்பாக நேர்ந்தாயே

யசலவந்தரம்போயெனுடலுருண்டவன்றீடி
லலரியென்றுகண்டேகல் வீண்போமோ

வறலணிந்தசிங்காரமுடியரன்றன்மின்பாக
மமையவந்தவண்கூறி லான்றோனே

வருணையின்கணன்றோர்வமலிபெதும்பையென்றுசி
லமலைவந்துறுஞ்சேவை மாண்பியாதோ

வகிலமுண்டகெம்பிரான்முறிவணைந்துபொன்சால
வருள்வனென்றிடும்பான்மை பாழ்ஞ்சூதோ, (௯)

அரவணிந்திடும்பாரவயிறமைந்தவன்கூறு
மரியசெஞ்சொலும்பாரி லோங்காதோ

வயிலணிந்ததிண்டோளின்மலர்கடம்பன்வந்தோது
மறையனந்தமும்பாவ மாங்கூறோ

வணுகுமன்பர்தங்கேதமுழுதொழிந்துளின்பார
வருள்வழங்கிடும்பீடு தீர்ந்தாயோ

வளவில்பண்டமுண்டாயுமுயலெலும்புமுண்டாடு
மசடர்பங்கிலன்போடு சாய்ந்தாயோ

வதிரதன்கொலென்றியாருமிகவியந்திடும்போர்செ
யடல்புனைந்தபண்போனை வேண்டாயோ

வருகுநின்றுசெஞ்சோரிசொரியவஞ்சியுந்தூர
வமர்செய்கின்றசண்டாள ரோங்காரோ

வலைவளைந்தமண்பூமிமகளழுங்கொடுஞ்சோக
மறமுயன்றிடைந்தார்க ளீண்டாரோ

வரதனங்களுங்கோதில்கனகமுங்களைந்தாடை
யணிதலுந்தவிர்ந்தாரும் வீம்போரோ, (௰)

மகரகுண்டலந்தாவுசெவிகொளும்பெருங்கோல
வழுதியென்றோர்பெண்போக மார்ந்தாயே

மலையனந்தமுந்தாழுமிமயமன்றரும்பேதை
வயினடைந்துவம்போதி மீண்டாயே

மரகதம்பொருங்கோலமுடனிரண்டுமின்போலு
மகளிரின்பயின்ருழி வீழ்ந்தாயே
மதலைதுன்புறுந்தீமைபலசெயும்பெரும்பாவி
மனநடுங்கவந்தாகம் வார்ந்தாயே
மறைமுகந்தொறுந்தோயோர்பிரணவஞ்சொல்கின்ருருள்
வழுவையென்றிலங்காடல் சேர்ந்தாயே
மரமிரண்டுதுண்டாகிமிகவுலர்ந்தபின்பாடி
வளர்தல்கண்டபெண்பாடல் பூண்டாயே
மழைவருந்தொறுந்தாதையெனநடஞ்செயுங்காமர்
மயிலிவர்ந்துகுன்றேறி வாழ்ந்தாயே
மணமுயன்றதன்கேள்வன்முனிவுகண்டுமஞ்சாத
வணிகமின்கரம்பேண வேன்ருயே,(வலூ

மடமலிந்தபெண்போலுமுருவுகொண்டொரைந்தேவர்
வளரகின்றவைம்பூத மின்ருயே
வலியகொங்கணன்ருனுநிகர்நலம்புனைந்தாரும்
வழிபடும்பெருஞ்சீலம் வாய்ந்தாயே
மகிதலங்கொளுங்கோடியசரமுஞ்சரந்தானு
மகிழவந்திடுஞ்சோதி தோய்ந்தாயே
வளிதருஞ்சுதன்றேறவுரைநலம்பகர்ந்தியாதும்
வழுவில்குந்தியின்கேளி யெய்ந்தாயே
வயிரநெஞ்சமுங்கேடிலுரிமையும்பொலிந்தோர்புன்
மதம்விரும்பினுங்கூடி வீழ்ந்தாயே
வருளவங்கசன்ருனுமியமனும்புரைந்தாரு
மலிகதஞ்செய்வம்பியாவு மாய்ந்தாயே
மதுரபுஞ்சவண்பாடல்பலவனைந்துகொண்டனர்
மனைதொறும்புகுந்தோத நான்போகேன்
மலர்பொருங்கண்முன்காணவிழைதொறுந்திகழ்ந்தான
வரம்வழங்கிநந்தாது சூழ்ந்தாள்வாய், (௭)

பகமனைந்தனைந்தாவிமறுகுறும்பெருங்காமர்
பரவுபுன்சொலுந்தாளில் வேய்ந்தோனே
பதிதர்தங்கண்முன்போயுமிதம்விளம்புமென்போல்வர்
பலநயஞ்செயுஞ்சீரு மோர்ந்தோனே

பளிகறும்பொலன்பூமியரசிணங்கவென்றாறில்
பரிவதஞ்செய்கின்றனை மாந்தானே
பதுமபுங்கவன்கானமறையினந்தமொன்றூர்வர்
பவமனந்தமுந்திய வேந்தியே
பறையறைந்தநெஞ்சாளர்நடுநடுங்கவும்பேசு
பதகரும்புகழ்ந்தோது மாண்போனே
படைதுரந்திகன்றூர்தமுடிகவர்ந்திடுந்தோளர்
பழுதொழிந்தசெங்கோன்மை தாங்கேகா
படியும்விண்டலந்தானுமிகழ்தருங்கொடுங்கோலர்
பகைமைகொண்டநெஞ்சூடு சார்ந்தோனே
பறவைதின்றுடும்பாதியனவுமுண்டுகன்றோடு
பசுவையுங்கொல்கின்றோர்பொ லாங்காவாய், (௨௯)

பதநயம்பொலிந்தாலியெனநலந்தருஞ்சீர்கொள்
பனுவல்விண்டதொண்டோரை நீங்கானே
படிறியைந்தவன்பாளர்பிறகுசென்றிடுஞ்சோரர்
பணியுவந்தரும்பேறு தூண்டானே
பகடிவர்ந்திடுங்கோரநமன்விடுங்கொடுந்தூதர்
பதறியஞ்சவென்றூரு ளாழ்ந்தோனே
பரவையம்புமிஞ்சாதுதினமருந்துபண்போடு
பகபகென்றெழுந்தீயு நாண்கோபா
பலிறுகர்ந்தகங்காளனெனவிளங்கிடுங்கோலர்
பதமுகந்தரும்போக நான்காவாய்
பணிநடஞ்செயுங்காரையனையவன்றனன்பூடு
பதிவுறும்பெருங்கேளிர் வான்பேறே
பவளமென்றவிர்ந்தானைவதனமும்பொருந்தாதி
பரிசுணர்ந்தபண்போர்செ லோங்காரா
பருவதந்தொறுஞ்சேவலொலிமுழங்கநின்றூடல்
பயிலுறுங்குகன்பாலர் தேம்பாகே, (௩)

சகதகென்றெழும்பானுநடுநினைந்திறைஞ்சாத
சளமதங்களுங்காத லாங்கோவே
சயிலமன்றரும்பூவைதிருமடந்தைவெண்பாவை
தகைமைநன்குணர்ந்தோர்கொ டந்தேனே

சகசமென்றிடுங்கோதில்பதமடைந்துகுன்றுத
தவமுயன்றிருந்தார்மு ளுங்தேவே
தபனனிந்துமுன்கூறுநவமெனும்பெருங்கோள்க
டமைமறந்துறுந்திரர் காண்போனே
தலையிழந்திடுந்தீமைவரினும்வம்பியம்பாத
சரதபிண்டர்தம்போத மூன்றீறே
தளிர்குருந்தையின்கீழொர்குரவன்வந்தவன்றுவி
தனையறிந்தவன்காணு மீர்ங்காவே
சடமெனுங்கொடுங்காலமுனிபவன்றெரிந்தோது
தமிழுணர்ந்தசெம்போதர் நோன்போவாய்
சரளிநன்குணர்ந்தியாழ்செய்முனிவன்முன்பகம்பேசு
சனகனன்பொழிந்தியு மூண்போதாய், (ஞஹ)
சலசமும்பசுந்தேனுமலையிடங்கிடந்தாடு
சரவணந்தரும்பால ஞஞ்சீலா
சலதியும்பெரும்பாருமலைகளும்பொதிந்தாய
தழைவுறுஞ்செழுஞ்சோதி கான்றூர்வாய்
தரணிமுன்பயந்தாடன்வடிவமென்றுயர்ந்தோர்சொ
றருதிகொண்டுவிண்போயொர் மான்றேய்வாய்
சருவமுங்கடந்திடில்சொருபமென்றமைந்தியார்சொல்
சகளமும்புனைந்தாடி நீண்டோனே
சமயசங்கமும்பேசுபிரணவம்புகுந்தாவி
தருதன்முன்சொலுஞ்சீரொர் மூன்றேய்வாய்
தகரமிஞ்சுபைங்கோதைமகளிர்நெஞ்சிடங்கூடு
தனம்விரும்பினுந்தூது போந்தாளா
தருமமுங்கலங்காதகருணையும்புனைந்தோர்கள்
சமணொன்கினும்பேணு மான்றோர்வாழ்
தலமடைந்தடைந்தார்வமிகவழங்கியன்போடு
சரணபங்கயஞ்சூடி யாண்டோனே. (உ௰)

தானத்தானன தானத்தானன
தானத்தானன—தன்னனதாஞ.

பூணைச்சீரொடுவீரப்பீடுலை
வாகித்தாழ்வுறு மின்னல்கெடாதோ

வாசற்றோர்சிவயோகத்தோர்முத
லாமுற்சாகர்கொ ணன்மையெய்தாதோ
வாலிற்றேசிகனேயொப்போரடி
யார்பிற்போயவர் சொன்மகிழேனே
வானைக்கோவொருவாவிக்கூடய
ராபத்தீர்பவ னுண்மருவானே
வாதிப்பூசைகொள்வானைத்தேறவை
யாரைப்போன்மிகும் வண்மைசெயேனே
வாடற்கேகயமேறிச்சூழ்குக
னூலுற்றோர்வன மெய்ம்மைபடாவோ
வாணத்தால்வழிபாடுற்றோர்பிணி
யாறக்காணுமெ லென்னையெணுதோ
வாலைப்பாகினைநேர்சொற்பார்வதி
யாளப்போதுசொ லுண்மைபொயாமோ, (ஷூ)

ஆவைக்கீறியதூன்வெட்காதினி
தாருற்பாதர்கள் கண்ணவியாதோ
வாழிப்பார்மகள்வாய்விட்டேறவ
ழாமற்சீர்கனி துன்னலுறாளோ
வாசுப்பாவலர்மூடத்தீயர்மு
ஞசிப்பாடல்சொல் புன்மையறாதோ
வாகத்தோடுயர்வீடுற்றோர்தமி
ழாசித்தோர்கவி வெம்மைவிடாதோ
வாவற்சாகரநீர்வற்றுகைய
ளாவிப்பூரியர் தம்மைவெலேனோ
வாயச்சாவடிமேனட்பாமிறை
யாண்மைக்கேடுல கின்மிளிராதோ
வாரப்பூண்முலைமாதர்க்கேவல்செய்
தாமைத்தாள்பணி தன்மையர்மேலோ
வாணித்தேர்கொணெல்வேலிக்கோயிலி
லாளத்தேசிக னின்னம்வாரானே, (வ)

ஏணப்பாலனைநேர்பெட்பாளர்மு
னீனர்க்கோகைமி கன்முறைதானே

வீகைப்பான்மையிலாகிட்டோர்க
ளேமக்கோடுறழ் பொன்னுறலேன்றோ
வேதக்காடுறழ்சீர்மைப்பாதக
ரீசற்போன்மடி வண்ணலெனாளோ
வீகக்கோடுடையானைப்பேணவி
னேசற்றேறிசை மின்னவொன்றோதோ
வீரக்கார்பொருசீருற்றேறிடி
யேன்றேப்பாமடல் வண்மைகொளாரோ
வேடிட்டோன்மகிழ்கூரற்காறெறி
ரோறிப்போகமு னுன்னினன்வேறே
வீழத்தோமொழுமூவர்க்காணவ
வீறிட்டோனுனி லன்னியனேயோ
வேலத்தார்குழலார்சற்றாடுமு
னேகித்தூதுசொ றிண்ணியனோரோ,(வனு)

ஏண்மிக்காருழவாரத்தோனலெ
யேகற்றேணியி லுன்னிலனேயோ
வேர்முற்றேர்குருகூரிற்பாவல
னேகப்பாவனை நண்ணிடல்வீண்றோ
வேவிற்றேமரம்வாள்பற்றேர்கவி
யேயத்தாளிடல் பண்ணுகிலேன்றோ
வேல்வைச்சீர்திகழ்கூடற்கோனெதி
ரோர்புற்றேர்கிழி கொய்ம்மொழிதாழ்வோ
வீமொய்த்தாலெனநேர்நட்போர்சொல
வேழைக்கோர்கர முன்னல்கிலாயோ
யாரொப்பேருருநாடிக்கூவினு
மேனப்பாவென முன்னவிராயோ
வேனத்தோடிணைகூறப்பாழ்படு
வேனைச்சோதனை செய்ம்மறமேன்றோ
யானிப்பாடுபடாமற்காவிலை
யேனுட்காதலின் மெய்ந்நிலையீவாய், (௭)

சோணைக்காதுகொயாண்மைப்பாடல்சொ
லார்சொற்பாவகை யும்விழைவானே

சோர்வற்றேயொருதேரிற்சூழ்தரு
சோதிக்கூடுறை யும்வலியோனே
தூலப்பூதர்கள்வானத்தோரொடு
சூழப்போய்நகும் வெண்ணகைவாயா
சோரிப்பூசைசெய்வாரைச்சாடவொர்
சூலத்தோடெதிர் சென்முதன்மாதே
சூரத்தானவரூரிற்போயவர்
தோல்விப்போர்பொரு கைக்நெடியோனே
தூய்மைத்தாமொருகோடுற்றீடறு
தோலைப்போலொளிர் செம்முகமேயாய்
சோலைக்கார்வரைதோறுற்றூடிய
சோரக்காமுக னென்றொருவேடா
சோபப்பாழ்மதவாதத்தோர்கள்சு
பாவத்தோடுமேல் கும்வசைநாணாய், (௨ஹ

சூகத்தூனுமுணோர்வத்தோடுசு
லாவுற்றோருயிர் சொன்முனிவோனே
சூதற்றேசினமீறிப்போர்செய்சு
வானத்தோடுறழ் பன்மறையாளா
தோகைச்சாயணிலாவுற்றாரிடை
சூல்பெற்றார்கனி யெண்ணியதேவே
சூறைக்கால்வரிலாழிக்கூடயர்
தோணிக்காரர்கள் பன்னியநாமா
சூழிப்பாலறவோர்பொற்றாடரு
தூள்வைத்தோரது பின்னலைவானே
சூகைச்சேகரமேயொத்தோர்மன
தோடுற்றோரது நன்னிலைதேர்வாய்
சூறற்போன்முதுநூல்கற்பாரது
சூழற்பாலவிர் தொன்மைவினோதா
சூனர்க்கோமொமனுதற்கேமுயல்
சூளுற்றார்பகர் நன்னயமோர்வாய், (ஹ

சா லைப்பானனிதேய்கற்போலவிர்
சால்புற்றருணர் பன்னிருபாகா

சாகத்தானசைவேள்விக்காதகர்
தாமெட்டாதுயர் சின்மயரூபா
சாருப்போலொருநூல்செப்போர்முறை
தாபிப்போரறி முன்னிலையாகாய்
தாயைப்போலுநின்வாய்மைக்கேமிகு
தாகத்தோர்வினை வின்வணமாவாய்
தாபத்தான்மனதாரத்தீமைசெய்
சாலத்தோரது சென்மமறுனே
சாடைப்பார்வைகொண்மானொப்பாரது
சார்பிற்போமவர் கண்ணரியானே
சாவப்பேசினுஞானத்தான்மகிழ்
சாதுப்பான்மையர் நன்னருள்வானே
சாணிக்கூடையனார்முற்கோதில்ச
வாதொப்பார்வெரு டின்மையுமீவாய், (௨௰)

தாளச்சீர்மூலைவேடப்பாவைச
லாபத்தான்மகிழ் சண்முகவேளே
தாமச்சாயகவேளைப்பார்வைய
தான்முற்காய்தரு கண்ணுதலோனே
தானத்தேயிடையூறுத்தோணிசை
தாழக்கோவடு நுண்மைகொண்மாயா
தாலிச்சீர்நுவல்வானுக்கேசனு
சாலிச்சோறடு கன்னியுமானாய்
சாலைப்போல்வயிறேறுடுற்றேபல
தானப்பூசனை கொண்முதல்வோனே
சாரிச்சூரியனாகிப்பாதப
சாலத்தேசில நண்ணவுமீள்வாய்
தாதுப்பூமுழுதாகப்பூசைசெய்
தாரைத்தோய்தரு புண்ணியவாழ்வே
தாலப்பாதலவானத்தோர்பகர்
சாமிப்பேர்தரு தண்ணளியானே, (௨௧)



*தனதனதந்தத்தனத்ததானன தனதனதந்தத்தனத்ததானன*
*தனதனதந்தத்தனத்ததானன—தனதானா.*

அளிமுரல்கஞ்சப்பொகுட்டினான்முகன்
வினைவழியென்றற்குடற்செயாதுன
தருளிலமிழ்ந்திக்களிக்குமோர்தின முதியாதோ
வகரமுனென்றெக்கலைத்தொனூல்களு
மிசையவிளங்கிச்சமத்தலோகமு
மளவியவைம்பத்தொரக்கரோசையு மறியேனோ
வறிவிலகண்டத்துவத்ததாகிய
சமரசவிந்தைப்பழக்கமேவியெ
ணரியமதங்கட்கொருத்தனாகியு மிளிரேனோ
வதிநயபுஞ்சத்தமிழ்ச்சொலோர்வரு
மடையனைநம்பித்துதிக்கநாணமி
லவர்களுநிந்தித்திடக்குருவியு மெலிவேனோ
வகளரசந்துய்த்திருக்குமாதவர்
தமையிகழுந்தூர்க்குணப்பொலார்களை
யடியொடுவென்றிட்டிமைப்பிலாரொடு பழகேனோ
வசரமருந்தற்கும்வெட்குவாரெதிர்
சரநிணமுண்டுட்களிக்குமீனர்க
ளபரிமிதஞ்சொற்றதட்டுதீவினை யொழியாதோ
வருமறையந்தத்துரைக்குமோர்பெரு
நிலையைமறந்திட்டகத்தினானித
மதுவிதுவென்றெக்களிக்கும்வாதிக ளுலையாரோ
வமுதுறழ்செஞ்சொற்கொழிக்குநாவினர்
வெருளுறமிஞ்சக்கசப்பதாகிய
வநுசிதவெஞ்சொற்பிதற்றுவார்மகிழ் வடைவாரோ,

அகிலம்வருந்தப்படுத்தியாருயிர்
வதைமுதல்வம்பைப்பெருக்கலோடர
ணழிவுசெய்வஞ்சக்குணத்துநீசர்க ணசியாரோ
வலைகடலம்பைக்குடித்தநாள்விடு
முனியரசன்கைத்தலத்தினாலினி
தருள்பொடிவென்றிப்பெருக்கமாயினு மிலகாதோ
வமரர்நடுங்கத்தவத்தினாலுயர்
முனிவர்தயங்கப்புவிப்பெண்வாய்விட
வறம்வெருடுன்பப்பெருக்கமானது சுவறாதோ.

வவலேவினைந்திட்டுலக்கையானதை
யுரலினிடங்குத்திடற்குநேர்வினை
யசடர்குலங்கொக்கரித்திடாதுமெய் திகழாதோ
வபிநயமொன்றப்பகட்டும்வேசியர்
மயலிலழுந்தித்தவித்துளாரிட
மணுகியுமம்பொற்பணத்தவாவுதல் விலகாதோ
வடன்மிருசந்தத்தமிழ்க்கொராலய
மொழிதிரியுஞ்சொற்கவிக்கொர்தாயக
மனையர்திரண்டுற்றிடப்பல்வாறிசை பெருகாதோ
வகமறியுஞ்சத்தியக்கனுவிலொர்
தவசிவிளங்கிச்சிரித்தவாயுட
னருணையிலன்றப்படிச்சொல்வாசக நிலவாதோ
வசலமுடன்செப்பிடக்குலாவிடு
நிலவகையைந்திற்றுதித்தபாடலு
மபலமடைந்திச்சகத்தினோடொடு மடிவேனோ,(வ)

குளிர்மதியுங்கொக்குதிர்த்ததூவலு
மணிதருசெம்பொற்சடைப்பிரானருள்
குறியெனநம்பித்துதிக்குநாவல ருயராரோ
குவலயமுண்டக்கணத்திலேயுமிழ்
நெடியவனன்பைப்பிரித்துவாதுசெய்
கொடியவர்சிந்தைக்கலக்கணும்வித நடவாதோ
குவடுறழுங்கட்டுடற்கொண்மூடிக
மதனிலிவர்ந்தெத்திசைக்குமேகிய
குடவயிறன்பத்தியிற்புகார்செயல் பிறழாதோ
குருகுவெனுஞ்சத்தமிட்டசேவலி
னுருவமையுங்கத்திகைக்கைவீறுறு
குகனைவணங்கச்சலிப்பிலார்புகழ் மலியாதோ
குமுதமொடுங்கப்பெருத்ததாமரை
விகசிதமொன்றத்தினத்தில்வானிடை
குலவுபதங்கற்குரித்துளார்துயர் கழியாதோ
குழலிசையொஞ்சச்சமர்த்திநோடுமை
பயிலொருவஞ்சிக்கொடிக்குநேர்சிறு
குமரிபதந்தொட்டருச்சியாதவர் வெருளாரோ

குருபதமன்றிப்பிறப்புருகிலே
யிலையிலையென்றுச்சரிப்பதாகிய
குறைவினலம்பெற்றிருக்குமேலவர் தளர்வாரோ
கொலைபுலையிஞ்சைப்படுத்தலாகிய
திரிவிதமுந்தப்பெனச்சொனூன்முறை
கொடுமகிழ்தொண்டர்க்கருத்தமாதியு மரிதாமோ, ()

குதிரைகொளென்றத்தினத்தில்வேல்புனை
வழுதிதரும்பொற்பொதிக்குநீடருள்
கொளுமவன்முன்செப்பிடக்குலாவடி யவர்போலே
குருகையிலம்பொற்புளிக்குள்வாழ்வுறு
முனிமுதலென்றெட்டெழுத்திறுனுயர்
குடிமுழுதுஞ்செப்பிடப்பல்சீர்புனை சிலர்போலே
குடகமதன்கட்டறித்ததோர்பல
வடிநொடியொன்றிற்றழைக்குமாறுசொல்
குசலமடைந்திட்டுமுத்திசேர்கிழ மகள்போலே
குறைகடலின்கட்செழித்தராவண
னறவடும்வென்றிச்சிலைக்கையான்மகிழ்
குறுமுனிசந்தக்கிரிக்கண்மேவிய தவர்போலே
குரவையிலங்கைத்தலத்துமாதர்க
ளழுதுபுலம்பித்தவிக்கவாலமுல்
கொழுவறுமந்தப்பெயர்க்கொள்வான்முத வினர்போலே
குவளைநெடுங்கட்சிறப்புமேவிய
கலைமகளொஞ்சச்செயித்தனுள்புணர்
கொழுநன்மதஞ்செற்றுவக்குமாதவ முனிபோலே
குடநிகர்கொங்கைப்பகட்டிலாவிள
மகளுயர்கங்கைக்கலத்திலினிய
குழவிசொனம்பிப்பொதுக்கண்மேயபு ணியர்போலே
குடிலமொழிந்தத்தகைக்கவாறெளிர்
பெருமைபொருந்தித்தடிப்பிலாததொர்
குடிலையுடம்புற்றுவெற்றிதோய்வகை புரிவாயே,(உ)

களிறெரிடங்கர்க்கிளைத்துவாய்விடு
சருணமறிந்தத்தடத்திலாழிகொள்
கருமுகிலென்றுற்றளித்தசீர்சொலின் மகிழ்வோனே

கடலமுதந்துய்த்திடற்கவாவிய
புலவர்நடுங்கக்குதித்துமேலடர்
கடுநுகரும்பெட்புரைத்துளாரது துணையாவாய்

ககனமளந்திட்டளக்கர்மால்வரை
புவனிவிளங்கச்சொலித்துமானிடர்
கருமமனந்தத்தினுக்குமோர்கரி யெனவாழ்வாய்

கரடமதங்கொட்டிடக்கராசல
வதனமிலங்கப்பழிப்பில்பூசைகொள்
கணபதியன்பிற்குளித்துளார்துய ரடுவானே

கலபவிடங்கச்சிகிப்புளேறிய
குமரனைநெஞ்சிற்குறிக்குமியோகியர்
கவலைதவிர்ந்துட்களிப்புமேவிட நினைவோனே

கமடமெனும்பொற்பதத்துமாதரி
முலையமுதந்துய்த்திடற்குமாசைகொள்
கவிஞர்களன்பிற்றெருடுத்தபாமுழு தணிவோனே

கசடறுதெண்சொற்குருப்பிரானையு
மனிதனெனுஞ்சொற்சொலற்கொல்கார்முயல்
கனதவமும்பொய்ப்படச்செய்தேமிடி யிடுவோனே

கடவுளதொன்றெப்படிச்சொனுனும
வணம்வருமென்றெப்பிடற்கொவாநெறி
களிஞுழல்வண்டர்க்களக்கொணுதெழு பவமீவாய், உஹ

கலசமுறுங்கைத்திருட்டுவேதிய
னெழுதியவம்பைத்தவிர்த்தும்வீடருள்
கழல்கனொடுஞ்சிற்சிலர்க்குநேர்வரு குருநாதா

கனகநிலம்பெற்றளிக்கும்வாழ்வது
புனையினுமொன்றைக்கொலத்தகாதென்மெய்
கடவருநண்புற்றவர்க்கொளினு மெளியோனே

கருணையெனுஞ்சற்குணத்தின்வாடையு
மறியநினைந்துய்த்தவக்கையாலிகல்
கலகமதங்கட்கெடுக்கநாடுநர் மனமோவாய்

கனிவிரவுஞ்சர்க்கரைக்குநேர்சுவை
மருவியசந்தக்குழிப்பின்வாசனை
கடுகளவும்பெற்றிசைத்திடாரையு நுகர்தாளா

கதறியகன்றைப்பசுக்கணேர்கொலே
செயுமவரஞ்சப்பொரறக்கவாவறு
கடையர்வணங்கித்துதிக்கொணுதுயர் பொருளானுய்
கலிபுருடன்சத்திரத்தினீழலி
லுறினுமவன்கைப்பிடித்தகோலிகழ்
கருவமுறும்பத்தருக்கெலாமொரு பொதுவாவாய்
கதுமையுறுங்கைப்படைப்பல்வீரர்த
மிரணகளந்துற்றெறுலிக்கும்வார்புகழ்
கவினுநலம்பெற்றிடச்செய்தேசிலர் தமையாள்வாய்
கறைபடுநெஞ்சத்திருக்கறுதயர்
சமயவிதண்டச்செருக்கர்பேசிய
கதைமுழுதுந்தொட்டவற்றுளியாதினு மமையானே, ஐ

தளிர்நிறமொன்றிச்சிறக்குமோகினி
வரலுமயங்கித்தவித்தமாதவர்
தழலினுநெஞ்சிற்குறித்தவாபல தருவோனே
தருவரசன்கைக்களிற்றிலேறிய
பெருமையிழந்திப்புவிக்கண்வாடவொர்
தவசிசொலுஞ்சொற்கனற்குளேயும்வை கியதேவே
தமநியமன்றிப்பொருட்படாநிலே
யுடையகுணுங்கர்க்கிடுக்கண்மேவிய
ததியினுமன்புற்றளிக்கநாடுந ருடன்வாழ்வாய்
தமரவரின்பப்பெருக்கமார்வது
கருதிமுயன்றெய்த்தவர்க்குமார்வமில்
சளறுகறொன்சொற்பனத்துமாடிய தகவோனே
சலனமில்சிந்தைத்தவத்தினுலுன
தருள்புனையுந்தத்திரத்தினேன்மிகு
தமிழ்வலேயின்கட்கிடக்குஞாயமு மறிவோனே
சரளபதங்கட்கழித்துவாவிரு
ளனையபதங்கட்டொடுத்தபேர்புகழ்
தழைவதுகண்டுட்கொதித்துளார்பகர்வசைதோய்வாய்
தமருகமொன்றைத்தொனித்தநாள்வரு
கலேகளிரண்டுக்குமத்தியாநிலே
தவறியிடும்பைப்பழிச்சொல்கூறினு மிசைவோனே

தனதனைவந்தித்திடிற்பொனீருவ
னெனவெனுடன்சொற்றுரைத்திநாள்வரை
தரவவனெஞ்சைத்திருத்திடாதுறு கொடியோனே ()

தருசிறையுங்கைக்கொளற்கொல்கார்குடை
யியலினுமின்புற்றிருக்குமாசுறு
சகலர்களன்பிற்குறித்தவாடனு முயல்வோனே

சகமறியுங்கற்கிணற்றிலோர்நதி
வருமெனவிண்டிப்படிசசெய்தாயெரி
சகரர்கடம்புத்திரற்கொராறருள் புகழோனே

தனநுகரும்பற்களூற்றநாளையில்
வலியவெனெஞ்சிற்குறிச்சியாள்சிறு
சரவணனென்றுற்றுமுற்றுமாகிய பழையோனே

சபைபலவின்புற்றிடச்செய்தோர்சில
வயினறிவின்றிக்குதர்க்கவாறுமி
றடியர்கள்வந்தச்சுறுத்தியேசவும் விடுவோனே

தவளபுயங்கப்பணிச்சதாசிவ
னெனவெழிறெண்டிப்பதத்திறேடொரு
தரமெனுள்வந்தத்திருட்டுவாசக மொழிவோனே

சகடுதைபும்பொற்பதத்துமால்விழி
துயிலுமரங்கத்தினைச்சொல்பாடல
தனிலளிமிஞ்சிச்சிரித்தவாறுசொ லியவாயா

சனனபயஞ்சற்றுமற்றமானிடர்
புகழல்விழைந்தற்புதப்பொய்பேசுநர்
தகனுமஞ்சக்கினிக்கண்வேவல்செய் தொழிலோனே

சகளமுமந்தப்பரத்தில்வேறல
வெனவுணருஞ்சித்தருக்குளாடிய
சரணசுகந்தக்குருக்களாவரு பெருவானே.(உஉ)

---

தனனதானதானன தனனதானதானன
தனனதானதானன—தன்னனு.

பெரியபூதவாகாயநிறையமேவியோவாத
பிரமநாளெனுவாது சொன்னேனே

பிரசமோடுதேனூறுகமலபீடமேன்மேய
பிரமனார்கையேதிய • தென்னேனே

பிணமெலாமுமாகாரமெனவுணீனமார்பாவ
பிடகராதியோர்கோர முன்னேனோ
பிழையிலாதநால்வேதமுதலிலோதுசீர்மேய
பிரணவாதியாமோசை நண்ணேனோ
பிமரமாயைமாயாதவருளில்வேறெனுமோவாது
பிடிகொள்வார்கள்சாய்நீதி யண்ணேனோ
பிரபுடீகர்பாலேகிவிசையன்வீமன்வேள்சாமி
பிணையெய்தானெனுவாழ்வில் விம்மேனோ
பிறழ்சொலோதுமாபாசமடையரீகைமேலாசை
பெருகிவாடுறுதோகை துன்னேனோ
பிறையெனுமுனூல்கூறுநுதல்கொண்மாதரார்மீது
பிரியமீறிடாவீர மெண்ணேனோ,(௯)

பிகமதானமாகாளமுடையமாரவேளேறு
பிளிறிடாதகார்வேழ மன்மேலோ
பிசகிலாவுசீர்மேயதலைகொள்வாருமாகாத
பிசிதவூண்விடாவாழ லெங்காளோ
பிசகிலாதநூலோர்கள்பலருமீடிலாதாய
பிசிபொயாதெனுமோதன் மின்றோ
பிசிரில்வேல்வலாராகியிவுளியானைமேல்வாவு
பிசனமார்பினோர்நீதி கண்ணோமோ
பிரியுமாதர்போல்வாடுமெனதுளோர்களூடு
பிரமைதீருமாறேது சொன்மாறே
பிசுநர்சோரரோயாதியவர்களாருமீளாத
பிசினின்மேவும்வீயாகி மன்னோமோ
பிடரிலேமன்வாழ்தீமையறிகிலார்களாய்மால்செய்
பிடியனூர்பினேகார்சொ லுன்றோதோ
பிறவியோடுசாவாயகொடியநோய்கள்போமாறு
பிரையில்பால்வெணீறிதல் சும்மாவோ, (௰)

அரியசிவன்மாறுதகதியினூடுபோய்வாழ்த
லமலஞானமேயாகு முன்னுலோ
வலையறுதநீர்வாரிபருகிவானுளோர்காண
வருளுவானைநேர்சீலர் தம்மாலோ

வயிலுமானுநோரானவிழிகொண்மாதர்போகாதி
யவையின்மாயுமால்சேரு மென்னுலோ
வருணையூரிலேநீடுசிகரிவாயில்வாழ்நாளி
லறையுமோர்சொனோராத தென்னேயோ
வனுவுமீகிலாலோபர்மனைகடோறுநான்வாட
லமணராதியோர்நாடு கண்ணாறே
வகளீறுபூசாதகடையராருமேலாகி
யணிகுவார்கள்கீழாதன் முன்னேயோ
வகிலமாவிநீயாயதிரிவிகாரமோர்தூய
வறிவிலேயுமேலாதல் பொன்னேயோ
வதுவிதேதெனுவாதுபயிலுமாண்மைநோய்தோயு
மசடர்தாமுமியானேதல் பன்னுரோ,(வரு)

அசுரரோயனார்சேனைமுழுதுமாயவேநாளு
மமரரோயனார்சேனை கும்மாதோ
வறமுநீதிதோயிடில்சரதமாதியாமியாவு
மழிவுறுதுபார்மீது செம்மாவோ
வசுவமேதமூடேனுமுயிர்கொல்பாவமாகாதெ
னதுலர்பாடுநூல்பானை யம்மாதோ
வசைவுறுதமாயோகசகசஞானவாசார
ரடிமையாகுவாராள்கை பண்ணுறோ
வலரில்வேதன்மேனுள்சொல்சமயமாறும்வேறாகி
யலமராமனூடே பின்னுவோ
வகவல்சூடியேநீடுகிரியினேடுபேய்கீறு
மயில்விசாகனுவாள விங்காளோ
வலரியீசன்மாமாயியரிகணேசன்வேளாகு
மறுவர்தாமுநீயேயென் வண்மாறு
ததியுலாசமாலோகமுழுதுமேகியேயாடி
யமைதியாயுனேடார முன்வாராய், (௭)

கரியெனுமுனூல்கூறமுனிவர்தேவரோயாதி
கடபடாமதீறுய தம்மானே
கமலனாதியோரானபுலவரோனுமேலீடு
கழறெனுதவாறுய பெம்மானே

கடல்சுலாவுபாரோடுமேதலநாடியேசேய
கதனநாடிமேனுடு கண்ணனே

கடுகுகோடிகூறேயுமுயிரொலாமுமோவாத
கருணைவாரியேயான வம்மானே

கழைகுலாவுதோண்மாரரளவில்கோடிபேர்கூடு
கவினுநாணவேமீறு தென்னனே

கணிதவீறுகாணுதவுலகெலாமும்வாழ்சீர்செய்
கருமைதோயுமேலான மன்னனாய்

கரியினோடுதீமூளினுருகிடாததாய்வீறு
கனகமேருபோலாத தொன்மாழாய்

கலியனோடுசேர்தீயரறியொணுவினோதாமெய்
கருதுவார்பினேயேகு தன்னனே, (௬௰)

கயமைதோயுமாமூடர்குலமுமேசிடாதான
கதிரனேகமாவூரும் விண்ணேனே

கயிலைமீதுவாணோரொடவுணர்நாடவாழ்வாயோர்
கவுரியோடுசீராய பெண்ணனே

கடவுளார்முனுவோதுமுருவமியாவுநோவாத
கருவினன்முனுளீனு மம்மாவே

களிறுமூலமேவாவெனுரைசொலாமுனேபோன
கபடநாடகாநேமி கொண்மாலே

கவிதைபாடியேபூசைபுரியுமாயியார்நேரில்
கதியின்மேவுமாறேவு கைம்மாவே

கலபநீடுசேர்மேயமயிலிலேறியேதேவர்
கணமும்வானும்வாழ்காவல் செய்ம்மேலோய்

களவினேயமானூர்தமருகிலேகியாராத
கலவியாசைபோலாடு பொய்ம்மோகா

கருமவாதநூலாளருறவினுனுண்மாழ்காது
கசியுமோனமேயார்த மெஞ்ஞானா, (௬௰)

பொரிசெய்சோறுநேர்கோதிலவிவிராவுதூவேள்வி
புரிகுவார்களோடாடு நன்மானு

புணரியேழுமேயாடையெனநிலாவுபார்மாது
புனிதமாகவேநாடு மென்னனே

புரவியேறிமாவியானையதனிலேறிவாழ்வார்கள்
புரிசைவாயில்காவார்க ளுண்ணார்வா
பொருள்கொடார்தமேலாசில்பனுவல்பாடியேவாடு
புலமையோரெலாமாரு மின்னாவே
பொதுமையாளராவானுளுடலினோடுபோனார்கள்
புகழையேவிடாதோது செந்நாவே
புகர்சொலாறுபோவார்கள்கெடவியாழனோதாறு
புகுநர்வாழவேநாடு முண்ணேயா
புதுமைகாணமாலாகியதுபெறாததால்வாடு
புலவிமாதர்போல்வார்கள் வைந்நாதா
பொருவிலாததாயேசில்கிருபையானமாமாரி
பொழியுநீர்மைதீராத கொண்மூவே,(௨௰)

புகலியூரிலோர்வேதமுதல்வனார்கொள்பேறாய
புதல்வனார்சொல்பாமாலை புன்மார்பா
புளியின்மேவினான்வாய்சொல்கவியுமேனையாழ்வார்கள்
புனைபல்பாவுமாமாசி யொன்மானோய்
புடவியூடோர்தேவாயகிழவிமூவர்நேரோது
புரையில்பாடல்போலாம தன்மூலா
புளினமீதிலேபாடுமொருவன்வாய்கொள்கீலால
புடைவைபூணுமோராட லின்வேலா
புகையிலாததீநேருமிரவியோடுசேர்கோள்கள்
புவனியாளுமாறீய நிர்ம்மலா
புவனையாதியாமாதர்பலருமாகுவாய்வீறு
புழுதியாடுவாரோடு சென்மேலோர்
புரவலாநலோர்தேறுமிரவலாசதாகோடி
புரமுளாயவாறோது மன்னானே
புருவமூடுவாழ்சோதியுருவுமாகினாயேக
புரணபாவனாதீத முன்னோனே.(௨௧)

தனத்தந்தானனதானனதானன தனத்தந்தானனதானனதானன
தனத்தந்தானனதானனதானன—தந்ததானா.

தமுக்கொன்றாலறிவாளொலாநக
வெனக்கிங்காருமொவாரொனவேயறை
தரற்கஞ்சாதெழுமாணவநோயில முந்திடாதே

தனச்சிங்காரமயூரமதேயென
விமைக்குஞ்சாயன்மினார்கனிவாய்பகர்
சமர்த்துங்தோதகலீலையுநாடிம யங்கிடாதே

தவிட்டின்றாளுமிடாமுழுலோபிய
ரிடத்தஞ்சாதினிதேகியொல்காதுயர்
தமிழ்க்கும்பாசெயராகவனேயென நின்றிடாதே

தவப்பண்போர்பகர்நூல்வழிபோயருள்
வசத்தொன்றாதுவிணைசையினன்மிகு [தே
தகர்க்கொன்றானுகர்வேள்விசெய்வாரொடி ணங்கிடா

சகத்தின்போகமதேபயனமென
மதித்துன்றுணைசையேதுமுறுதவர்
தருக்குங்கோரமுமாதியநாடிய யர்ந்திடாதே

சமுக்கஞ்சாமதவாதிகளாமவ
ரெதிர்க்குந்தோறும்விடாதுபல்வாதுகள்
சடக்கென்றேதுவதால்வருசோகம விந்திடாதே

சடைக்கஞ்சாமதுமாமிசமாதிய
வுணற்கொஞ்சாதகுரூரசுபாவர்கள்
சளத்தின்கூறுறவேயவரோடுக லந்திடாதே

தழைக்கும்பாவமெனுவுணராதுயிர்
வதைக்குங்கீழவராள்கையினலக
றைப்பெண்கோவெனவாய்விடனுடலி னைந்திடாதே.

தகிக்குஞ்சூரியனேபரமாமென
நினைத்தன்பாலடிபேணிடுமேனிலை
தனிற்சந்தேகமிலாதுறுசீர்மைபொ ருந்திடேனே

தழற்கண்டோய்நுதலீசனையேநனி
துதிக்கும்பாவலர்நால்வர்கொண்மேன்மையெய்
தலுக்கன்பாய்முயல்வார்பததூளிய ணிந்திடேனோ

தலைக்குன்றீனியபார்வதிபூசையி
லரக்கும்பாய்புலிநாய்நரிகாமுறு
தசைத்துண்டானதுமார்பிழைமாறமு னிந்திடேனோ

தழைப்பைந்தாரொடுபீலியுநாடொறு
முடிக்குங்கார்முகில்போல்பவனுள்புனி
தனைக்கண்டாலவரோயவனுகதி னைந்திடேனோ

தடுக்கும்பாழிடையூறுகளியாவையு
முருக்குந்தூலவிநாயகன்வாழ்பல
தலத்தும்போயவனாதுவினோதமொ ழிந்திடேனோ
தமக்கும்பேஙிகர்தானவர்வேரற
வறுக்குங்கூரியவேல்புனைதோள்வர
தனுக்கென்றேபலபாடல்கணாளும்வ னைந்திடேனோ
சடத்தின்கூறறியாததைநானெனு
மயக்கந்தோய்சிறியோர்களும்வேறொரு
சனிப்பின்றாகியவீடுறநாடல்பு ரிந்திடேனோ
தனக்கென்றாடகமாதியதேடிந
லறத்தின்பான்முயல்சீருடையார்மிசை
சலிக்கின்றோர்பிடிசோறரிதாயழல் கண்டிடேனோ, (வ)

கமுக்கங்காரணம்வேதமொடாகம
முறைக்கும்பூரணஞானவினோதமெய்
கருத்தின்பால்வலிதேயுறவாடவு ணர்ந்ததாரோ
கலிச்சண்டாளனையோர்சிறுதூளென
மதித்தெங்கேயுமெலோருநல்வாசனை
களைக்கொண்டாடுதல்காணவெநேரம்வி ழைந்ததாரோ
கருக்குந்தீஙிகர்பாழ்மிடியாலுயிர்
துடிக்கும்போதினுமீகையின்மால்கொடு
கடுக்குந்தாழ்குணலோபிகள்வாழ்வையி கழ்ந்ததாரோ
கலைப்பெண்சூரியனாயிரம்வாயர
வெழிற்சந்தாசலமாமுனிமாருதி
களிக்கும்பாடல்களாகியமாரிபொ ழிந்ததாரோ
கனக்குங்கோதையர்மோகமகோததி
நடுச்சென்றாலுமுனாதருளாசையொர்
கணத்துஞ்சோர்வுபடாதுறுசாதன மொன்றலாரோ
கரத்தன்றேமலர்மீதுறுநான்முக
னெடுக்குந்தூரியமானதனாலிடு
கதிர்ச்சங்காழியிரேகைமெயாகவ மைந்ததாரோ
கடற்றண்சேலைகுலாவியபார்மகண்
முதற்கண்டோர்களெலாமழவேயொரு
கலிற்சென்றேயுருள்போதினுமாவியொ டுய்ந்ததாரோ

கடுக்கன்பாகைமதாணிபொனூலணி
மிருக்குஞ்சோமனல்வாகனநாடுநர்
கணக்கும்பாலர்குஞலமெனுவழி கின்றதாரோ,(வறூ)

கனக்குங்கார்பொதிசிர்மலயாசல
மதிற்றென்காலுடனேவருமாறது
கனைக்கண்டேவருமோர்வரிதாம்வகை விண்டுளாயே

கசக்கும்பாழ்மொழிபேசிவெணீறும
ணிடக்கண்டாலும்வைவார்மதமாயபல்
களைக்கஞ்சாதிகல்வீரமகாபகை தந்துளாயே

கவிர்ச்செங்கேழிதழார்பலர்கோள்சொல
வுறுக்குந்தாயடியாலுரலோடுசெல்
கழற்கொண்டோனிகர்பேறுறநாடவு முந்தினையே

கமைப்பண்பேதுமிலேன்மனமாம்வெளி
யினிற்சஞ்சாரமுனுள்செயலானபல்
கதைக்குங்காவியமோதிடுமாறுசெய் தொன்றினுயே

கலிக்குங்கார்கடலாறுசில்கால்குள
மவற்றுந்தீயினுமியானிடுபாடல்கள்
கதிக்கும்பாரிடையீகுவதாயும்வி ளம்பினுயே

கருத்தன்றுனெனயானறிவான்முழு
வரத்தொண்பேர்கொள்பனீரிலையீயவொர்
ககத்தன்றுயகல்வான்வழிபாரிவி றங்கினுயே

கலக்கங்கேதம்விசாரம்விடாய்பய
மருட்சந்தேகமுனுவனவானனி
கவற்றுஞ்சோதனையேனருணீதிபி றழ்ந்திடாமே

கனிச்செந்தேனுடுபாலமுதாமென
ருசிக்கும்போகமுஞானமுமியான்மகிழ்
கணத்துந்தோய்தருமாறுசெய்வாயினும் வஞ்சியாதே, ௨

குமுக்கென்றேபிடிகோடையில்வீழ்தவி
னடுக்கங்கோடிசெய்தேபுலையாடிய
கொலைப்பண்போர்குலவேர்களைவாருள மர்ந்தகோவே

குமைக்குங்கோதுறுநாயனையாரொடு
பகைததிங்கேபலவாறுழல்வேனது
குறிப்புந்தேறியவாறொருவாய்மைசொல் பண்பினனே

கொதிக்குங்காதலிலாமுனிவோரொடு
தொடுத்தன்பால்வழிபாடுசெய்தேமகிழ்
குணச்சிங்கேறனையார்விழைவியாவும்வ ழங்குவானே

குணக்கந்தோய்மடமாதர்கள்பூண்முலை
நினைக்குங்காமுகரோர்வரிதாவளர்
குளக்குன்றேகனியேமலர்பூவில்வ டிந்ததேனே

கொடுக்குந்தாருவுநாணுறுபேரருள்
படைக்குந்தாரகமேயடியார்புரி
குறைக்கண்பார்வையிலாதவனேமுழு துங்கொள்வானே

குரக்கின்சேகரமேயனையார்பிழை
பொறுக்குந்தேசிகனுவருவாயொரு
குலத்தும்போயொருதாய்வயிறூடுபி றந்திலானே

குருக்குந்தேவர்கொளாதிகழ்கார்நிற
வெருக்குங்கோடியகோல்புனைகாவலர்
குலச்சிங்காதனமேமைடகடோறெழல் கண்டுளானே

கொழிக்கும்பாவையர்பாலுநொயாசக
மெடுக்கின்றேருமொனுவொடுசூழ்படை
குமைக்குந்தாண்மதயானைகொள்சீர்செயி னுஞ்செய்வோனே,

குழக்கன்றூடுபல்காலிகொணீசரை
வெறுக்குங்கோபமிலார்தவநோன்மைகள்
குலைக்குங்கோடிவிகாதமெனுநிகழ் கின்றதேவே

குவட்டுஞ்சிரியதோள்கொளோர்காவல
னடுக்குஞ்சேனைகளுல்வகையோடொரு
குசப்பெண்பாலகனுன்மடிவாகவு முன்செய்தோனே

குவிக்குங்கோதில்கண்வானவருனுட
னவர்க்கன்பாயணைவார்துவர்வாய்மொழி
குமட்டுஞ்சாரமளாவியபாடல ணிந்ததாளா

குடக்கின்கோளநாடரசாள்பவ
ரிடத்தும்போய்வெகுவாயிரவாமெலி
குதற்குங்காரணமாகியசோரமு றுங்குணலா

குருத்தின்றேனுகுதாறுகொள்வாழைகண்
மிகுக்குஞ்சோலைநெயாறதிஞுடிய
கொடைப்பொன்பேறுறுமாறுபொயாநுவல் வம்பினனே

குதர்க்கம்பேசியநான்முகன்மால்சம
ரொழிக்குந்திமலையோரமெனேயொரு
குவைப்பொன்றேளினனுநகைசகூறிம றைந்தவேடா
குதத்தின்பாலுறுமியோனியையேபர
கதிக்குஞ்சிரியதாகினைபான்மையர்
குழக்கண்டேசுவதாம்வசையியவு மொஞ்சிலானே
குழைக்குஞ்சேறுறழ்கூழினுமாடக
மணிக்குன்றீனமதேயெனுமேலவர்
குருக்கண்டேறுமகோனதமானவ கண்டரூபா, (௬)

அழுக்கும்பாரமதானகலோடலை
கடற்கண்சாரணர்கோனிடமாழ்கின
னருட்கொண்டேகரையேறவநாள்புரி கண்களானே
யவச்சிந்தூடமிழாதரிதாகிய
தவத்தின்பான்முயல்வார்பெறவேவர
மளிக்குந்தோறும்விண்மேலொருசேவிலி வர்ந்துபோவா
யடுக்கும்பானைகள்போலகல்வானிடை
நெருக்குங்கோளமெலாமயில்வாய்பெரு
கலைக்கங்காநதியினியதாள்பெறு கொண்டல்போல்வா
யசத்தென்பார்குலசேகரனுகிய
தகப்பன்பாலிகல்பாலனநாளுய
வடற்றிண்டோள்பலதோய்தருகோளரி யென்றுநேர்வா
யணித்தென்கால்வரைமீதுபன்மாதவர்
துதிக்குஞ்சீர்புனைவான்முதலோர்கண்மு
னருக்கன்பாதியிலாகிடவேநிமி ருங்கணேசா
வசுத்தந்திருணவேமலைபோலெதிர்
குவிக்கின்றேர்பகையாயபொலார்குல
மழிக்கின்றய்பலவூர்தொறுநேர்பல சந்தியோனே
யமர்க்கஞ்சேழைமையோவரும்வானவர்
நகர்க்குந்தியிடுதானவர்கோனுட
லதைத்துண்டாடியவேலொடுநீபம ணிந்தமார்பா
வடிக்குஞ்சீரலைவாயிலெனேடினி
துரைக்கும்பேறருளாதுபல்பாடல்க
ளடிச்செந்தாமரைமீதிடநாணமில் கந்தவேளே, (௩௭)

அகத்தங்காரகனேர்சினமேமிக
வளர்க்கும்பாழ்மதவாதசமூகர்சொ
லலர்ப்புண்பாடுபுகாதுயர்பானுவு ளென்றும்வாழ்வா

யயிற்கண்டோய்சசியோடுவெளாளைய
தனிற்பொன்பூமியினளுமுலாவரு
மரிக்குந்தேவைநல்கோர்மகவீனிய விந்தையானே

யலர்த்தண்பீடம்வைகோரிருமாதரு
முமைப்பெண்பாவையுமாதிமினர்குழு
வனைத்துந்தானெனமேயபராபரை பங்கினனே

யழுக்கின்றுயமனேலயசாதக
ரெவர்க்குந்தேசிகனுமொருமாமுனி
யமைக்கும்பாவணிவாயவனேடுனுள் வந்ததாயே

யதட்டுந்தீமொழியோரொவொர்நூன்மிசை
பிடிக்கும்பேரபிமானமதாலிடு
மலடுந்தீருமதீதமுமாகிய விர்ந்தவாரா

வரற்றும்பேயொடுபூதமுநான்மறை
யுரைக்குந்தேவரெலோர்களுநீயெண
வடுக்கும்பேரறிவாளரைநாளும கன்றிடானே

யயத்துந்தானெனநானெனநாடவி
னிலைச்சந்தோடம்விடாவநுபூதியி
னழுத்தஞ்சேர்பரமேசிவமேயகல் விந்துநாதா

வருத்தங்கோடியுமாமமுதேசம
ரசக்கண்டேசவியாவணமியாவையு
மசைக்குங்காரணமேமறவாதவர் தம்பிரானே (௨௪)

---

தந்ததத்ததானன தந்ததத்ததானன
தந்ததத்ததானன—தந்ததத்ததான.

நம்புகழ்ச்சியேமிகவிண்டவர்க்கும்வேணவை
தந்திரட்சியாதவர் முன்பிரக்கலாமோ

சந்தமிக்கபாடலையும்பழிக்குமூடர்க
டந்தியொக்கவேமத மொன்றிநிற்பதேனே

சங்கையற்றபாடன்மொழிந்தவர்க்குநீயொரு
தஞ்சமொத்துநேரினில் வந்தளிக்கொணதோ

தண்கடற்குவார்கரையின்றிவைத்தசீர்பகர்
தந்தனைப்பொலாரழ லிண்கணிட்டதாறே

தண்டுசக்கராதிகொண்ணெண்கரத்தனேதும
தங்களிற்பொலாதுசொல் வண்டார்முத்தர்தாமோ
தங்கமொத்தவேள்வியினஞ்சமொக்குமூனுகர்
சண்டிகட்குமேன்மைவி ளம்புதுட்டர்மேலோ
சண்டன்வெட்குமாறுதவஞ்செய்பத்தியோர்மிகு
சஞ்சலத்திலாழவி டுங்குணக்குளாயோ
சம்பரற்கொல்வீறுறுமைங்கணைக்கைவேள்படை
தந்தபத்தியாலுரு கும்பிணக்கருதோ, (௯)

சந்தையிற்செனுயெனநொந்திடப்பல்வாறுசெய்
தந்திரத்துமாயையை வென்றசித்தராரோ
சம்புபெற்றபாலருண்முந்தகத்தியேசர்த
ருந்திருக்கைநீறதும் வம்புபட்டதேயோ
தண்டையிட்டதாள்பெறுசெந்தகர்ச்செவேள்சிவ
சங்கரற்கொர்சேயென நம்பலற்பமேயோ
சங்கடப்பொயாமொழிவெண்கவிக்குமால்கொள்வி
தந்துதித்தபாடல ணிந்திடத்தகாதோ
சந்திரச்சடாடவியந்தியொத்துளானைநி
தந்துதிக்குமாசைத ணிந்திடச்செய்வாயோ
சங்கையொத்துநீறியவென்பினிற்பெணீதல்ச
கஞ்சொலக்குருவிவ ருந்தல்கெட்டிடாதோ
சந்தனத்தளாவியகுன்றமொத்தமாமுலை
தங்கிடைச்சிமார்கள வன்சொன்மெய்ப்படாதோ
தன்றகப்பனேடிகலுஞ்சிறுக்கன்வாழவொர்
தம்பமுட்பல்வாயரி யென்றுதித்திலாயோ, (௰)

அம்புயத்திறேடுநெருஞ்சிமட்டுமோரவ
விர்ந்தருக்கனூடுவி ளங்குசத்திவேறு
வங்கசற்குவேலையிடுஞ்செருக்கிலாளைய
ணைந்தளித்தபாலன லந்துதிக்கிலேனே
வைங்கரத்தொராரனையைநெஞ்சுள்வைத்தபேதைய
றிந்தடுத்துநாளும்வ ணங்கிநிற்கைதீதோ
வந்தரத்துவானவர்கண்டுவெட்குமாறவை
யந்தவெற்பிலேறவி டுந்துதிக்கைதாழ்வோ

வங்குசத்தொடோர்கயிறுந்தரித்தவேய்திக
ழம்பிகைப்பெண்வாய்மொழி கொண்டுமெய்க்கலாமோ
வஞ்சலித்துநாடியகொங்கணற்குமேனைய
வன்பருக்கும்வேணுவ ரங்களிட்டிலாயோ
வங்கணத்தைநேர்சமணம்பவுத்தமாதிய
டைந்தவர்க்குளேசில ருங்களித்திலாரோ
வந்தரித்தசாலியினொந்துழைத்தழாதுமு
னஞ்சலத்தமீயுந லந்துலக்கிடாயோ, (வஞ)

வண்டார்மெச்சுசீர்கொள்சிதம்பரத்திலேயென
டம்பழித்திடாமலி சைந்துரைத்துளாயே
யங்கதத்திலேதுயிலுந்திருக்கண்மாயன
கங்களித்தவாறுவ லிந்துசெப்பினாயே
வங்கியிற்குலாவுநிறங்கொளத்தியாகிய
றந்தழைக்குமோர்சொனு வன்றுபற்றினாயே
யஞ்சிகிக்குமானில்வந்துவெட்குறுமலெ
னஞ்சுகப்புணீயென ழும்பிதற்றினாயே
யம்பரத்திலேகுபதங்களிற்பல்வேளையெ
னண்டலற்றபிருவு ளுஞ்சொலித்துளாயே
யஞ்சநட்டசீர்நடைதுன்றுசத்தியாகிய
னந்தவித்தையாடியோர் தெம்புணர்த்தினாயே
யங்குரித்தபேரருளின்குறிப்பதாகவெ
னங்கமொத்தொவோர்விசை வந்தொளித்துளாயே
யண்டலர்க்கொர்காலனெனுஞ்செயத்தின்மேவிய
கங்கரிப்பிலாதுனி டங்கலக்கவாள்வாய், (௯)

கொம்புடைப்பல்காலியசங்கொலற்குநாணமில்
குண்டரைக்கொல்வேல்புனை யுங்கரத்தர்வாரா
குண்டையொக்குமானிடர்தங்களைச்செவேளரி
கும்பனைப்பென்வாயினர் புன்சொலிச்சியானே
கொங்கைமுற்றிடாவிளமங்கையர்க்குளேசிலர்
கொண்டபத்திநாடியு மன்றளித்தநேசா
கும்பனுற்றமாதவர்தங்களுக்கொர்கோவுறழ்
கொன்பொறுத்ததேசிகர் சிந்தைவிட்டிடானே

குண்டணிச்சொனாரதன்முன்சொல்சுத்தயோகியர்
  கும்பிடப்பல்பேறுத  வும்புகழ்ச்சியோனே
கொன்றிறைச்சியார்பவர்தங்கணத்தின்மேல்வெகுள்
  குஞ்சரத்தைநேர்சில  ரின்புறச்செய்வானே
குன்றினத்தின்வார்சிறைதுண்டுறச்செய்கூர்வளி
  குன்றலற்றவாயுத  ரொஞ்சும்வெற்றியோனே
கொங்குபட்டபூமுழுதுந்தொடுத்தமாலைகொள்
  குங்குமத்தைநேர்சர  ணம்படைத்தநாதா, (௨௫)

குண்டுடைப்பயோததிமுன்கொடுத்தவாவிகு
  றுஞ்சுவைத்தென்மேன்மைபெ  றுஞ்சுபக்குணாலா
கும்பியிற்புகாமைநினைந்துழைத்துளாரிடு
  குங்குலத்திலார்வம  டைந்திடற்குநாணாய்
குஞ்சமொக்கும்வால்சுழலும்பசுக்களாவிகு
  ளிர்ந்திடச்செய்வாளாவி  ரும்புநட்பினானே
குண்டலத்தையேபெயரொன்றுரைத்தநாளொரு
  கொண்டலொக்குமாதவன்  வந்திடச்செய்தோனே
கொண்கனிட்டமேகுறியென்றிருக்குமாதர்கு
  லம்பயிற்றுமாறுசெ  யுங்குணத்தினானே
கொஞ்சுபத்தியோரையிகழ்ந்துடற்கொள்கால்வழி
  கும்பகத்தினாலுமு  யன்றவர்க்குமாவாய்
குஞ்சுமுட்டையூன்வரையுண்டுவக்குநீர்கொள்கு
  ணுங்கரைத்தொடார்சம  யங்களைத்தளானே
குன்றியிட்டமாதர்கள்பந்தடித்துலாவுகு
  றிஞ்சிமுற்குலாநில  மைந்துடைப்பெமானே, (௨௬)

**ப**ம்புசத்தசாகரமுங்குடித்தமாமுனி
  பண்டையிற்செய்தேயருள்  செந்தமிழ்க்குமோகா
பன்றியற்றைநாளொருகொம்பினிற்கொள்பார்மிசை
  பைந்தகைப்பராரைம  ரங்கண்மிக்குளானே
பந்தயத்தினாலிகலுந்துடுக்கராமவர்
  பண்பினைச்சதாமுனி  யுங்கருத்தினானே
பங்குபட்டவாயமதங்களெட்டிடாதப
  தந்தனிற்குலாவுசு  தந்தரப்பிரானே

பம்பரத்தைநேர்முலைமங்கையர்க்குமால்கொள்ப
வன்கடுப்பவேகியி ரந்துதுய்த்தவீசா
பம்பைகொட்டுமூரில்வளர்ந்துவெற்றிநாடிய
பஞ்சவர்க்கொர்தாயினை லஞ்செய்திட்டமாயா
பண்டிமுட்டவூணிடுகின்றவர்க்குவேணப
யன்கொடுக்குமானைமு கந்துலக்குவானே
பங்கயத்துவேதனமும்படிக்குமோதுப
யங்கரகுகாவுயர் சுந்தரக்குமாரா,(௲)

பங்குவிற்கொர்தாதையெனுஞ்சொலுற்றுலாவுப
தங்கனைத்தொழார்தம தங்களைக்கொளானே
பஞ்சரத்தில்வாழ்கிளியென்றிசைக்கும்வாய்கொள்ப
ரம்பரைக்கவாவுறு தொண்டர்பெற்றபேறே
பங்கிமுற்றிலாதுநிதம்பறித்தசாரணர்
பஞ்சமற்றவாழ்வுற வும்பரிக்குமேகா
பஞ்சிலற்பமானதரங்கொள்புத்திராதியர்
பந்திகட்குமானவ ரங்கொடுத்தசோரா
பஞ்சவற்கும்வாள்வளவன்றனக்குநீடுப
னந்துணர்க்கொள்வாரொடு பின்சிலர்க்குமார்வா
பஞ்சைகட்குநோய்தரும்வன்புகற்றகாவலர்
பந்தினர்க்குநாசநல் கும்பெருத்தகோபா
பண்டொனித்தவேதமனந்தமெச்சுநாயக
பந்தமற்றஞானநி லங்களுக்கொர்கோவே
பங்கமற்றவாசெயதுங்கதற்பராவுள
பண்டமுற்றுமோதிட மெங்குமுற்றதேவே. (உ௫)

தத்தத்தனதத்தத்தனதன தத்தத்தனதத்தத்தனதன
தத்தத்தனதத்தத்தனதன—தனதானா.

முற்றத்துறவுற்றுக்கையினுகர்
பிச்சைப்பதநத்தித்தவமுயன்
முத்தர்க்குரிமைப்பட்டவர்பணி புரியேனோ
மொக்குட்பொருகுத்துத்தனமிசை
கச்சுப்புனைபொற்புச்சிறுமியர்
முத்திக்கொடணைக்கைக்குருகுவ தொழியேனோ

மொக்கைக்கலியிற்பட்டலமரு
துக்கத்தையொழிக்கக்கருதலின்
மொய்ப்புட்பமருச்சித்தனதடி பணியேனே

முத்தைப்பவளத்தைக்கருமணி
யைச்செப்புநிறச்சொற்றமிழினின்
முச்சட்டையெனப்பட்டநுதின முயலேனே

முக்குற்றமறுத்துப்பரகதி
யிற்புக்குறவிச்சித்தமணமை
முட்டிப்பொரும்வெற்றிப்புலவனின் மினிரேனே

முட்கொத்துறழ்பெட்புக்கயவர்கள்
கைப்பொய்ப்பொருளிச்சித்தவர்மனை
முற்றத்துழலற்பப்புலவனை வெருளேனே

முட்டைக்கருவைத்துய்த்திடுதனு
முற்றுத்திரிதுட்டத்திரளைமு
ருக்கிக்கருணைச்சித்தனைநனி புரவேனே

முக்கிப்பெரிதிச்சிச்செனமயி
ரொக்கப்பலர்பற்றிப்பறிசெயு
மொட்டைத்தலையர்க்கற்பினரழ வொருவேனே,(ஹ)

முச்சிற்புழுதிக்கைச்சிறுமிய
ரொத்துச்சிலருட்புக்கவிருமை
முற்செப்பியவொற்றைத்திருமொழி கிலவாதோ

முட்டற்றவுணர்க்கொத்தவர்செய்த
வத்திற்கும்வரத்தைத்தருமரன்
முச்சிட்புனலிக்கற்கிணறிடை யுதியாதோ

மொப்புத்தயிரிச்சித்திடையர்கள்
பட்டிக்கிடையுற்றுப்பழகுமு
ழுச்சித்தனெழுத்துப்படிபொரு ளுதவானோ

முத்திக்கடன்மத்திப்பிரணவ
வித்துட்புகுசத்திக்கணபதி
மொத்தத்திலுணாக்கப்படுமொழி பலியாதோ

மொச்சைப்பயறுெத்துத்திகழ்பலி
னர்க்குத்தலைவற்குட்டியவன்மு
னைச்சத்தியொடுற்றுத்தருபொடி கிலையாதோ

மொட்டுக்கமலத்தைப்புனையும
னத்துச்சிலர்நத்தித்தொழவின்மு
தற்சொற்கதிர்சித்திற்பெரிதென்மெய் கெழாதோ

முக்கற்பெருவெற்புக்கருகுபு
தைக்கப்படுமெக்கற்பினனுண்மு
ரட்பக்குவமெய்ப்பட்டனையவர் தழையாரோ

மொய்த்துப்புவிகத்தத்துயர்செய்ப
தர்க்கொததவனைச்சத்தியபலர்
மொத்திப்பலதிக்கிற்சிதறல்செய் துயராரோ, (வ)

அற்றத்தருமைச்சொற்பொலிவுட
னிட்டுத்தவர்முற்பட்டவனைய
ளிக்கத்தகுநட்புற்றவர்மிடி யுறலாமோ

வத்தத்தைமதித்துத்தவசைவெ
றுத்துக்கலகத்திற்றினமுய
லற்பக்குணமிக்குற்றவர்களி பெறலாமோ

வத்தத்துறுமிக்குச்சிலைமத
னைச்சுற்றியமைக்கட்படையைய
டக்கத்தகுவெற்றிக்குரியரு மழலாமோ

வக்கத்தொடுகட்டைத்துளசிவ
டத்தைப்பணிகட்குட்பெரிதெனு
மற்புற்றவனைப்பத்தியில்சிலர் நகலாமோ

வக்கத்துணையற்றுற்றவன்மனை
பெற்றிட்டசதப்புத்திரர்கிக
ரற்குத்துளதுட்டர்க்கெமபுர மமையாதோ

வப்பத்தெருவைப்பிட்டடனழு
மக்கட்குதவிப்பெற்றவளுட
லைச்சுட்டவனெக்கத்துறவிகள் பெருகாரோ

வட்டத்திசைமுட்டச்செயமுறு
கொற்றப்படைகைப்பற்றினர்களு
மச்சப்படுமற்சொற்புலவர்கள் குழுவாரோ

வச்சித்திரன்மெச்சப்படுமிறை
பக்கத்திலிரக்கிற்பெறுமிழி
வற்றுப்புகழ்சத்தக்கடலெனை வளராதோ,(வறு)

வப்பித்தொடர்துட்டப்பழவினை
யொற்றைச்சடம்விட்டொற்றையிணிடை
யட்டைக்குவமைப்பட்டுறல்செய லழியாதோ

வத்திக்கலைகட்டிப்பலமலை
முற்செப்புயிர்கட்பெற்றவளைய
ரிக்கொப்பவிரட்சித்திடும்விழை வினனறோ

வச்சுப்பல்விதத்திற்கொடுமன
துட்புக்குநினைத்தற்கரியன
வற்றைத்தினமெத்தப்பகர்தலு மவமேயோ

வக்குக்குவைகக்கிக்குடவளை
மிக்குற்றவளக்கர்க்கரையில
ருட்பெற்றிவிளக்கித்தரல்பிழை யெனலாமோ

வற்பட்டகளத்துக்கனல்வரை
யிற்செப்பியமெய்ச்சொற்படிசெய
வட்டிப்படனிற்குத்தகுதிகொ லறியாயோ

வப்புக்கிடைவெப்புக்கனலிடை
விட்டிட்டகவிப்புத்தகமுழு
தட்டித்தருதற்கொப்பியதுக படமேயோர்

வத்தத்தருணத்திற்பலபல
பத்தர்க்கருள்சுத்தப்புகழைய
ழிக்கத்துணிதற்கொத்தெனையிவண் விடலாமோ

வத்தித்தொடைபச்சைத்துளவுக
டப்பப்பிணையற்கொத்துளனவ
னைத்திற்குமுரித்தாற்றவனிலெ னெதிர்வாராய், (௫)

பற்றற்றவர்சித்தத்தினின்மறை
யுச்சிக்கணடித்தாத்திகழிரு
பற்பச்சரணத்துக்குருபர னெனவாழ்வாய்

பத்திக்கடலுட்புக்கமிழ்ந
லத்தைக்கைவிடுத்துசசினமொடு
பக்கைக்கணிடித்துக்கொளுமவ ரறியானே

பைக்கட்செவிசுற்றிப்பெருமலை
மத்தைக்கடவிட்டற்றையிலிரு
பட்சத்தர்மதிக்கிற்பெருகமு தனையானே

பத்துக்கவிசெப்பிச்சிலர்சில
ரொற்றைக்கவிசொற்றுக்கருதுப
வற்றைப்பெறவிட்டுப்புகழ்பல பெறுவோனே

பச்சைப்பரிகட்டித்திகழிர
தத்திற்றினமுற்றுற்றருவணி
பத்தைக்கறுவிச்சுற்றியபரி தியிஞனே

பப்புப்பொலிசுத்தக்கடலினி
டத்திற்றிருவுக்குத்துணைவரு
பக்கத்தவளச்சக்கரமுழு மதியோனே

பத்தத்தொடடுத்துப்பணிசெய்க
சற்சுட்டபொடிக்கட்பருகிவீ
பத்தட்டுயிர்கற்பித்தவன்முத லுடுவோனே

பட்டுக்கெடுமுற்புற்புதல்வனை
யப்புத்துளியிட்டுப்பசுமைசெய்
பட்சித்திரளொத்துப்படர்பல முகிலோனே, (௨௰)

பட்டுத்துணிசுற்றிக்கொளுமவர்
வெட்கப்புலியிற்சிற்றுரிவைப
னைக்கைக்கருவெற்பிற்கொளுமதள் புனைவோனே

பைக்குட்பல்சரக்குக்கொடுமது
ரைக்குட்செலுநட்பைப்பெரிதுப
ழிச்சிற்கலியற்றுச்சுகமுற நினைவோனே

பற்பத்தின்முழுக்குற்றவிரொரு
செக்கர்ப்பொருபொற்புற்றணிமதிள்
பற்கக்குநெருப்பிற்பொடிபட முனிவோனே

பட்டிக்குலமொத்துச்சுருதிகள்
சுற்றத்தண்வனத்திற்சிலையடி
பட்டுக்கணையிட்டிட்டதுசொலின் மகிழ்வோனே

பட்டப்பெயர்பெற்றிட்டவனது
சொற்கொத்திருளிற்பொய்ச்சசிதரு
பட்டித்தொழிலுக்குத்திருவுள மிசைதேவே

பட்டைப்புனல்குற்றத்தசையிடு
துட்டப்பயல்கட்குக்கொடியப
யத்தைத்தருசெற்றத்திரிபுரை வடிவாவாய்

பத்தித்தவளப்பற்சிறுகுயி
லொத்துக்கணவுற்றுப்பழுதில்ப
ணிக்கட்கடையிற்பட்டொழுகரு டருவாளே
பற்றைச்செமலர்க்கைச்சதுரமி
ரட்டைப்படிநெற்றெருட்டறவகை
பற்பற்பலுயிர்க்குச்செயுமிசை யுறுதாயே, (ஞ)

வற்றக்கடலைத்துய்த்திடுமுனி
செற்றத்திடைபட்டுச்சுழலொரு
மத்தக்கரியைத்தொட்டருளிய நெடுமாலே
மைக்கொத்தமனத்துக்கணகனை
யட்டுக்குடைப்பொற்கிரிகிகர்
மற்பெற்றபுயத்திற்புனையவொ ரரியானுய்
மச்சத்துருவுற்றுக்கடலிடை
புக்கத்தகுவற்செற்றவவெழில்
வட்டத்திகிரிக்கைக்கருமலை கிகர்வானே
மட்டுக்கமலத்துப்பிரமனு
திக்கைக்கிடமிட்டுத்திகழும்வ
யிற்றிற்புவியொக்கப்பருகிமு னுமிழ்வானே
வர்க்கக்கனியப்பக்குவியல்கொ
ழுக்கட்டைபயற்றுக்குவைமுதல்
வைத்துத்தொழுநட்பர்க்குவகைசெய் களிருனுய்
மற்றெருப்பில்வனப்புக்கொளுமுலை
வெற்பைக்கொடுமுட்டிப்பொரும்வல
வைச்சத்தியணைத்துப்பெருநட மிடுதாளா
வற்சத்துதிரத்தைப்பருகவு
மொத்துக்கொள்பவர்க்குச்சமணிகர்
மக்கட்குறுதத்தைக்களைதரு பெரியோனே
மட்கிக்கலியிற்சிக்குறுதுய
ரற்றுப்புகழ்பெற்றுப்பொருவில்வ
ரத்தைக்கொளிரட்டைப்புலவர்க ளறிசிலா, (ஞஹ)

மற்பொற்புறும்வெற்புத்தொறுநட
மிட்டுச்சிகியிற்சத்தியொடுவ
சித்துப்புவனத்தைக்கணமதில் வளைவோனே

வட்டொத்தமுலைச்சொற்கிளியென
நெட்டைப்பாணுற்றுக்களிகொண்ம
றத்திக்கருமைச்சொற்பலசொலி யணைவோனே

வர்த்திக்குமிசைக்கட்பழகுமு
ணிக்குத்துயர்மிக்குற்றிடவொர்ம
கத்திற்கனல்வெற்பொத்தெழுதக ரிவர்வோனே

மட்டித்தனமுற்றுத்தளருமெ
னச்சுட்கனவிற்புக்கருணைம
லைத்தத்தையெனச்செப்பியசிவ குருநாதா

வத்துத்திறமொற்றைப்படுவதெ
னத்தக்கதவத்தர்க்கெதிரிகல்
வற்புற்றமதக்கட்டினருணர் வரியானே

வட்டிப்பொருளிச்சித்தளவில்பி
ழைச்சொற்கள்படித்துத்திரியும
ருட்பட்டமனத்தர்க்குளும்வளர் கொடியோனே

வத்திப்புகையுச்சிச்சுடரத
னிற்குப்பெனவுற்றுத்திகழும்வ
ழுக்கொத்தருள்பெற்றிட்டவர்வடி வழுமாவாய்

வைப்புத்தியளித்துத்தவசைவ
ளர்த்துச்செயசித்திற்கொழுவிம
யக்கற்றகதிக்குட்புகவிடு மிறவானே. (உ௬)

---

தனனதனதந்ததத்த தனனதனதந்ததத்த
தனனதனதந்ததத்த—தய்யனு.

இறையளவுமன்பில்சித்தமுடையவெனுள்வந்துநட்பொ
டெனதடிமையென்றுரைத்த கள்வனு

ரினியவுணவும்பசப்புமகளிர்சுகமுங்கசப்ப
வியலிசைநடந்தெரித்த செல்வனு

ரிடிநடுநடுங்குசொற்சொலவுணர்முதல்வண்டருக்கொ
ரிகலெனவிளங்குபெற்றி நல்கலா

றெறிகடல்கடைந்தெடுத்தவமுதநுகரின்பமுற்ற
விமையவர்களுந்துதித்த வள்ளலா

ரிகபரமிரண்டும்விட்டுநடுநிலையினின்றபத்தி
யெதினுமுயர்வென்றுணர்த்த வல்லனு

ரெவரெவர்களெங்கியற்றுபணிகளுமுவந்தவர்க்கு
  ளிசையுமவணஞ்சிறக்கும் வெள்ளனே
ரிவனிவளிதென்றாற்றுசமயமுழுதுந்தரித்து
  மெவையினுமிணங்கலற்ற பொல்லனே
ரொளிதருள்குணம்படைத்துமுதலுநடுவுங்கணிக்கு
  மிறுதியுமறும்பதத்தி லொல்வதார், (௬)

இனியுலகறிந்துரைக்குமதிசயமனந்தம்த்து
  மியல்பினரறிந்திடச்சொல் சொல்லனோ
விரலைமுயலென்றுபற்பல்புலவர்சொல்களங்கமுற்ற
  வெழின்மதியையுண்டுகக்கு மெல்கொலோ
விடபமிசையந்தரத்திலுமையவளுடன்றவத்த
  ரெதிர்வரம்வழங்கநிற்கு நல்லனோ
வெழிலிவருகுன்றமுற்றும்வழிபடுநலம்பொருத்த
  விமயமலையன்றுபெற்ற தையலோ
வெழுபுவியுமுண்டுகக்கியளவிலுயிரும்புரக்கு
  மிசைபெறுநெடுஞ்சடத்து மையனோ
விருபுழையியைந்தொர்வெற்பில்வருகதைவரைந்தமைக்கு
  மெறுழொடுவிளங்குமொப்பில் கையனோ
விலையசைதருந்திருக்கையயிலொடுசிகண்டியுற்றெ
  ணிதயநடுவுங்குதிக்கு மெய்யனோ
விளமகர்தமிஞ்சைமிக்கபசுவதையுடன்செய்துட்ட
  ரினமுநமதென்றுகித்தம் விள்வதோ, (௭)

அறைதருமதங்களுக்குளுயிர்வதையெனும்பிறைச்சி
  யயில்கையிலமிஞ்சிநிற்க நள்ளினே
னணுவளவுநெஞ்சிரக்கமிலர்கொடியவஞ்சகத்த
  ரனைவர்களையும்பெருக்க வெள்ளினே
னருமறைவிளம்புபற்பல்கடவுளரினுஞ்சிறக்கு
  மறுவரையுநெஞ்சகத்தி லுள்ளினே
னறிவதுமயங்கலுற்றகனவினில்விளைந்தசித்தி
  யறுபவகினைந்துமிக்கு துள்ளினே
னசடரைமணங்கலக்குமுறவொனநம்பிநித்த
  மவர்தருமிடும்பைதுய்த்து நைகிறே

ணசலமெனநின்றுசித்தசலனமறலின்றிமுற்று
மவலமதிகொண்டுபத்தி செய்கிறே
னகளவிநயஞ்சொலித்தசமரசருணம்பொறுக்கு
மதுலர்மனமுங்கொதிக்க வைகிறே
னடமருவுசண்டிகட்குமெதிர்மொழிவிளம்பல்விட்டு
ளவசமொடுநொந்துமெத்த நொய்கிறேன், (வனு)

அதுவிதெனும்வம்புபட்டசமயமுழுதுந்தவிக்க
வமர்கனிபுரிந்தும்வெற்றி யெய்துவே
னழலினுடனம்பிலிட்டபனுவல்பலவுங்கிடைப்ப
வகிலமொழியும்புகழ்ச்சி கொள்ளுவே
னடன்மலிநமன்றனக்கொரொமனெனவிருந்தசித்த
ரமர்பதிதொறுஞ்செலற்கு மொல்கிடே
னருணகிரியின்கணுற்றகிளியெனவலிந்துரைத்த
வயிலவனரும்பதத்தி லொல்லுவே
னகடவிகடம்படித்தமகளிர்பினடந்துசொட்டு
மதரமதுரங்குடித்து வெள்கிடா
தலைகைநிகர்செம்பொனிச்சைமலியரசகெந்திசுட்டு
மதலவரையுந்துளைத்து ஞொள்குறு
தலையுடைமடந்தைதுக்கமுறமுறைமறந்துவக்கு
மரசர்களொடுஞ்சிரித்து வைகிடா
தவமதிதொலைந்துலப்பில்வெகுமதியமைந்துசுத்த
வருள்வலியுறும்படிக்கு வௌவுவாய், (௭)

நிறையுமுணர்வின்றியற்பர்மனைதொறுநுழைந்திரக்கு
நிதிமயல்கொணெஞ்சகத்து முள்ளவா
நிகமமுதலென்றுசெப்புமளவில்கலையுந்தவிக்க
நிசமொடுகலந்துநிற்கு மையனே
நிணமிகவருந்திடப்பல்வதைபுரிகுணுங்கருக்கு
நிரையமெனவுங்கொதிக்கும் வெய்யனே
நிரைபடுகணங்கண்முற்றும்வழிபடலறிந்துநித்த
நினைதருபயன்கொடுக்கு மொய்யனே
நிகிலசெயதுங்கமிக்கபுலமைமுடிகண்டுவக்கு
நிபுணர்பலருந்துதிக்கு மல்லுளாய்

நெறுநெறெனவண்டமுற்றுநடுநடுநடுங்கியெய்க்க
நெடிதறல்பொழிந்தொலித்த செல்லுளாய்
நெளிநெளிநெளிந்தசற்பமுழுமையும்வணங்கொருத்த
னிதமொழியினும்பெருத்த சொல்லுளாய்
நிரதிசயாஞ்சிதத்தணமுதரசபுஞ்சமுத்த
நிமலகதியின்கணித்தல் புல்லுவாய், (௪௬)

நிறையறவுயர்ந்தெறிக்குமணிகொண்மருடந்தரித்த
நிருபர்பயமொன்றுறச்செய் செய்கையாய்
நிகர்றுநலஞ்செய்சுத்தவமுதகிரணங்கவிழ்க்கு
நிலவுமதிகண்டுவெட்கும் வில்லுளாய்
நிலமுழுமையுந்தொனித்தகடன்முழுமையும்பொருப்பி
னிலைமுழுமையும்படைத்த கையனே
நெடிநனிதருஞ்சிவத்தமிளகுறழ்பொசுங்கர்கட்கு
நிதமுணவிடும்பழிப்பு மல்குவாய்
நெறிபடமுனம்படைத்தபொருள்கள்பலவுங்கணத்தி
னிமிடமுனியுஞ்செயத்தொர் துய்யனே
நிபமறிபெருந்தவத்துமுனிவரதுசிந்தைகட்கு
நிபிடமறைவொன்றமைக்கும் வைபவா
நிகளநிகர்பந்தமுற்றவுயிர்செய்தவமிஞ்சவிட்டு
நியதிகளையுங்குணத்து வல்லவா
நிறுவலின்முதிர்ந்தெறிக்கும்வெயில்பொருமலங்கழற்றி
நிழல்பொருபதங்கொடுக்க வெஃகுவாய், (௬)

சிறையினையறைந்தரற்றுபறவையெழுதுங்கொடிக்கை
திகழ்தரநடஞ்செய்பற்பல் சையனே
சினவரவினந்துடிக்கவகவிநடனஞ்செயொப்பில்
சிகிமிசையிவர்ந்தணைக்கு மெஃகனே
சிவசிவவெனுஞ்சொல்செப்புமவரடிபணிந்தபத்தர்
திரிபுடியுறழ்ந்தபச்சை வில்வனே
செகமுழுதுமஞ்சும்வெற்றியுடையநமனங்கமட்ட
திருவடிகொள்குன்றமொத்த மெய்யனே
திரைகடல்வறந்துதொற்றவருணனுநடுங்குறச்செய்
செயமுறவளைந்தவொற்றை வில்லனே

திசைமுழுதுமஞ்சுறப்பல்கொடுமைபுரிகின்றதுட்டர்
திறமழியவென்றுசிற்சில் பொய்சொல்வாய்
தினுமவைவழங்குநட்பரிகலறமுனிந்துசித்தர்
திரளிடைவிடுஞ்சிவத்த தெள்ளியே
சிரசிலிடுகின்றகுட்டொடிருசெவிமறிந்துபற்றோர்
செயல்புரியுமன்பரிட்ட மஃகுறாய், (ஷ௯)

சிதன்முதல்விளம்புடுக்கண்மதியாதனங்கண்மட்டில்
செறிவிழிகளுந்துலக்கும் வெய்யிலோய்
செழுமணியொடம்பொனுற்றகடையர்மனமென்றி
ருட்டுதிமிரமுழுதும்பறத்து பல்கரா
சிகரமொரிரண்டையொத்தமுலையினொடுசிங்கமுற்ற
திரிபுரையெனும்பெயர்க்கொள் வல்லியே
சிகலறுசெல்வம்பொறுத்தகடன்மகளும்வெண்பொனிட்ட
சிதமகளுமென்றிரட்டு தள்ளேயே
செடிமுழுதொழிந்துமிக்கமணமுறுமடந்தைபெற்ற
சிறுவன்வனையும்பல்சொற்கள் புல்லினாய்
சிரகமுறுசெங்கரத்தொடொருமதில்கடந்தவித்தை
தெரியுமுனிவன்படித்த கல்வியே
திருடுபடும்வன்குணத்தர்கருதும்வடிவுங்கொள்சித்த
சிரமகுடிலங்கெடுக்கும் வெள்ளமே
செவிடுகுருடென்றுதிட்டுமெவரையும்விரும்புகத்த
சிறிதுமொழிவின்றியுற்ற தெய்வமே. (உஎ)

---

தய்யத்தனனதத்தந் தனத்தந்தானன
தய்யத்தனனதத்தந் தனத்தந்தானன
தய்யத்தனனதத்தந் தனத்தந்தானன—தய்யான.

தெய்வத்திருவருட்சம்பவத்தெம்பாலென
துள்ளப்படிநடத்தும்பெருக்கந்தோய்தரு
செல்வப்பொலிவினைத்தென்றிருச்செந்தூரினல்
கில்லாயே

தெய்தித்திரிகிடத்திங்கணத்தொங்தோமென
வெள்ளைப்பொடிமுழுக்கன்குதிக்குஞ்சீர்திகழ்
தில்லைப்பதியினிற்செந்தமிழ்க்கொண்டோதிய
சொல்வீனே

செல்விற்கயல்குதிக்கும்புனற்கொண்டோமிடு
மல்லித்தடம்விளக்கும்பதிக்கண்பாடல்கள்
செய்யச்சொலியெனக்கன்றளிக்குஞ்சீரிதழ்
பொய்தானோ

தெள்ளித்திருவுருக்கொண்டுமைப்பெண்பாவையொர்
வெள்ளிக்கிரியடுத்தன்றளிக்கும்பீடுறு
செல்லக்கணபதிக்குஞ்சரத்தன்பார்சொலு
மில்லாதோ

செவ்விக்கிணையொழிக்குஞ்சிகிக்கண்கூரிய
வெஃகப்படையொடுற்றண்டருக்கன்றீடருள்
செய்கைக்குகனெனைக்கண்டுரைக்கும்பான்மைகண்
மெய்தானோ

தில்விற்பலபிணக்குங்குணக்குந்தோய்தரு
மையொத்திரவினிற்சஞ்சரிக்குந்தானவர்
செல்லற்படவுறுக்குங்கறுப்பன்போல்புக
ழெய்தாதோ

தெள்ளித்தெளியுறட்பஞ்சொலிக்கின்றோர்புக
ழெல்லைத்தொழுதுநித்தங்குறைப்புண்பாடுகள்
செல்லப்பெரிதிரக்கின்றதற்கென்றோர்பய
னில்லேயோ

தெவ்வுத்திரள்வதைக்குங்கறைச்செஞ்சூலமொார்
கையிற்குலவிடத்திண்டிறற்சிங்கேறிவர்
சில்லுற்றவளுருக்கங்கொடுத்தன்றோதிய
தொல்லாதோ,(௬௰)

செல்லுக்கிடர்விளைக்கின்றவர்க்குந்தேர்வரு
மெய்ம்மைப்பிரணவத்தின்பொருத்தங்கோவுறு
சில்லத்துவிதையொத்தென்கலக்கந்தீர்தரல்
செய்யாதோ

செள்ளுக்குலம்வளர்க்குஞ்சிறைக்கங்காதிய
புள்ளிற்றசைமிகத்தின்றுவக்குந்தீவினை
சில்லர்க்குமறநித்தங்குறிக்கும்பேரருள்
பொல்லாதோ

சிவ்வுச்சிவெனவக்கஞ்சிவக்குங்கோபிகள்
வையிற்றலைகுனித்துந்துதிக்கும்பாவலர்
தெய்யச்சொலுமொலிக்குங்கவிக்கென்பாவகை
கள்கீழோ

செய்சொற்கவிதொடுத்துன்கழற்கன்பாவிட
வில்பற்பலருமுத்தம்பெறக்கண்டேனைய
சில்பத்தரைவருத்துந்தொழிற்கொண்டாயிது
நல்லாறே

செவ்வைக்கருணைமுற்றுந்தவிர்த்தஞ்சாதெணின்
மையைக்கிரியைவெட்டுங்கொலைப்புன்பூசைசெய்
செய்யற்குழியையொக்குந்தகைச்சண்டாளரை
யெள்ளாயோ

சில்லித்தொனிதழைக்கும்பொழிற்குன்றேமுத
னெய்தற்புவிவரைக்குங்கிளத்தைம்பாரினர்
தில்பற்பலவகுத்தங்கியற்றுஞ்சாறுன
தல்லேயோ

செய்யுட்டொனிவளப்பங்களைக்கண்டேகொடை
நல்கற்கிசையுநட்பொன்றினர்க்கும்பூவளர்
செய்யட்குமுறவற்றம்புவிப்பெண்டாழ்வுற
லஃகாதோ

தெள்ளற்றவிடொர்க்குத்துங்கொடுக்குஞ்சீலமில்
கல்லற்கயவர்கைப்பொன்பறித்தன்பேவிளை
செய்யொப்பவர்மிடிப்புண்கெடுக்குக்கோன்வா
வுள்ளாயோ, (வ)

சைவத்தலைமைபற்றுஞ்சிலர்க்கென்பூடொரு
கொவ்வைக்கனியிதழ்ப்பெண்கொடுக்கும்பாடல்செய்
தர்மத்தினைமுதற்கொண்டொக்குஞ்சீர்கள்செய்
துள்ளாயே

சையத்திறைதவத்தன்றுதித்தஞ்சானன
வையற்கிடம்வசித்தண்டமுற்றும்பேணிய
தள்ளைக்குரிமைவைக்குந்தவர்க்கின்பாவன
பெய்தாயே

சல்லிக்குணமுடைக்குண்டரைக்கொன்றேபுவி
யுய்யச்செயுநிமித்தம்பிறக்குங்கார்முகில்
சையற்கருதிநிற்கின்றவர்க்குந்தீவினை
கொய்தாயே

சர்வத்திராருநத்துங்கதிர்ச்செங்கேழொளி
மையத்துணருருக்கொண்டடுத்தங்கோர்சிறு
தையற்குமறுமற்குங்குறிக்கும்பேறருள்
செய்தாயே

சல்லக்கயிறொடிக்கும்பிறைக்கொம்பாதிய
கொள்ளத்தியின்வணக்கம்பொறுக்கின்றாரது
சையத்தனையுமட்டின்புறக்கண்டாடுதல்
கையாயே

தல்லிப்படைதரிக்குங்கரச்செஞ்சேயரு
ளெய்தப்பரதவிக்குந்திருத்தொண்டாரது
சள்ளைக்கலியொழிக்குங்குணப்பொங்காழியு
றழ்வாயே

சள்ளிட்டுருமுமக்கன்குலத்துந்தாழ்வுறு
பொய்மைச்சமயமுற்றுந்தனக்கென்றோதிய
தெளவைக்கதைகளுக்கும்பொருத்தம்போலநி
கழ்வாயே

சைகைக்கடைவிழிப்பெண்களைப்பொன்பூமியில்
வைகிப்புணர்வதற்கென்றுபுற்றின்றேவளர்
சவ்வுத்திரள்கள்சுட்டுண்பவர்க்குஞ்சீர்தர
வொல்காயே,(வஹு)

தள்ளிக்கதவடைக்கின்றவர்க்கும்பாடல்செய்
நொய்மைப்புலவர்மொய்க்குஞ்சபைக்கும்போயுயர்
தய்யத்தொனிவிளைக்கும்பதத்தின்சாரமும்
விள்ளாதே

சள்ளற்கடிதடத்துந்தவப்பண்பீனமென்
மையற்கடனடுச்சென்றுழைக்குந்தீவினை
தைவெட்கமுமலுப்புஞ்சழக்குந்தோய்தலை
னையாதே

தையிற்கதிபன்முற்கண்டுரைக்குங்கோள்சில
வெய்துற்றிடவெதுப்புங்கடுப்புந்தீயவர்
சள்ளுக்கிரைகொடுக்குந்தவிப்புஞ்சூழ்தர
வெய்யாதே

தவ்விப்பலரிடத்தும்பொருட்கொண்டூரமி
லெள்ளற்றமரவர்க்கும்பகுத்துண்டேசிறு
தல்லத்திணைநிகர்க்குங்களிப்பொன்றாநனி
துள்ளாதே

தல்லைப்படைநடுச்செங்கழைத்திண்டோளுட
னல்லுக்கிரமதக்குஞ்சரக்குன்றேறிய
சவ்விக்கிரகசித்தன்றொடுத்தைஞ்சாயக
மெய்யாதே

தைலத்தொடுமெணக்கும்பொடிச்சிந்தோர்மலர்
மல்கிப்புவிபடைக்குந்திறத்தெண்டோள்விதி
தையற்சிலவமைக்கும்புழைப்புன்றோனுட
னல்காதே
சைலத்துறழும்வெட்டுந்துணைக்கொம்பேறதில்
வெல்பெட்புறுகுவட்டொண்டிறற்றண்டோடெதிர்
சைகற்பொருமொருத்தன்செலுத்துந்தூதர்கள்
கொல்லாதே
தைதத்துணைபொருத்துங்குறிக்கொண்டோர்பொது
வெல்லைக்கிடைநிலைத்துங்கொலைக்கஞ்சிடுறு
சைநப்பகையும்விட்டின்புறக்கண்டாயொரு
கைதாராய், (௯)

மெய்வர்த்தனைசெயற்கென்றுழைக்குஞ்சீரியர்
தொய்யிற்களைமையொக்கும்புயப்பெண்சேர்சுகம்
வெஃகுற்றிடினுமொத்தங்கதற்கொன்றாறுகள்
செய்தேவே
வெல்லத்தினுமினிக்குங்கவிச்செந்தேன்மழை
பெய்திட்டுலகளிக்கும்புகழ்க்கன்பாமவர்
விள்ளத்தகுசொன்முற்றும்பரிக்குந்தாண்மலர்
கொள்கோவே
வெவ்வுட்டினமனத்துண்டரிக்கஞ்சோர்வரு
கள்ளத்தகுவர்சுற்றங்கெடத்திண்டோண்மிசை
வில்வச்சிரமெடுக்கும்பலர்க்கண்டாதுய
ரொய்யாரா
மெய்யிற்சிலுசிலுப்பொன்றிடச்சந்தோடமொ
டுள்ளித்தொழுதிரக்கின்றவர்க்கண்டாலிகழ்
வெய்யர்க்கெமனெனச்சென்றொறுக்குந்தீரர்த
முள்வாழ்வே
வெள்ளிக்கிரியினுச்சந்தனிற்கங்காநதி
துள்ளப்பிறைவிளக்குஞ்சொலிக்குஞ்சீர்தரு
வில்வச்சடைநிருத்தன்கருத்தின்பாலமர்
தெய்வீகா
வெய்துற்றுயிர்களைக்கொன்றுவக்குங்காலனோர்
பிள்ளைக்கெதிருறுக்குங்கணத்தங்கேவிழு
வெல்லத்தகுபதத்தன்புயர்த்தும்பேர்களை
வெளவேகா

வில்லைப்பொருநுதற்கொம்பினுக்கன்றுடைவ
னல்கப்படுபழத்தொன்றினைத்தின்றேயவள்
வெள்கிக்கையைநெரிக்குங்கணத்தொன்றேறுடரு
ஞல்லாசா

விர்விர்த்தொனிபிறக்கும்படிக்கம்பாயிர
மெய்திட்டவைவிடுக்குஞ்சிலைக்கொம்பான்மலி
வெள்ளத்தலையின்மொத்துங்கரத்தன்பேடுற
நல்கேவா,ஒனூ

வெள்ளைக்கடனடுப்பண்கிடக்கும்பாய்மிசை
தையற்றுணைபிடிக்கும்பதத்தண்காரொன
மெல்லத்துயிலொருத்தன்றிருட்டின்கூர்மையை
நள்ளார்வா

மிர்துத்தளிர்பல்புட்பங்களைத்தன்றுளினி
லொல்லச்சொரியுநட்பன்கலிக்கும்போலை
மெல்லித்தலையினிற்கண்டுயக்கண்டாய்பெரு
மல்வாகா

வில்லற்கருதியெய்க்கும்படிக்கென்பாலொரு
பொய்சொற்றிதழெழுத்துங்கொடுத்தந்தாதிந
வில்கைக்கிடம்வருத்துங்குணக்குன்றேயளை
கள்வோனே

வில்லைப்படையினைக்கொண்டருக்கன்கார்பட
வெல்விற்புரிதலைச்சந்ததத்துங்கூறியொர்
வெள்ளிற்செயலினைக்கின்றவர்க்கஞ்சாமைப
கர்வானே

வியைப்புணர்மலத்தன்றனக்கன்றேதிய
சொல்லைப்பொதியைவெற்பின்றவச்சிந்தானத
மிழ்செப்பியமுனிக்குந்தெரிக்குந்தேசிக
னுள்ளோவாய்

விள்ளக்கமழ்கடப்பந்தொடைக்கந்தாவலர்
கைதைச்சுரிகைபற்றுங்கரத்தன்றுழவ
விர்சொற்புனைமிடுக்குஞ்சமர்த்துந்தோய்தரு
செவ்வேளே

வில்லத்தொருதிமுற்றும்புரக்கின்றுய்பெரு
மல்லற்புவனிசுற்றுஞ்சிகிச்செஞ்சேவக
வெள்ளக்குறள்களைக்கொண்டிகற்றிண்சூர்கிளை
கொல்வோனே

வெள்ளிக்குருலிகற்பஞ்சொலக்கொண்டோர்பலர்
நையப்பொருதழிக்குங்குணத்தெந்தாய்பொயில்
வெள்ளற்கெளியமுற்றுங்கதிர்ச்செஞ்சோதிகொள்
கைவேலா, (ஜ)

மைவத்திரம்வருத்துந்தகப்பன்பேர்சிலர்
சொல்லிற்றுயர்பெருத்தஞ்சிலைக்கண்போல்வளர்
வல்லிக்கொடிமனக்கஞ்சமுற்றெஞ்சாதெழு
மொள்வாரா

வையக்கொடிமலர்த்தண்பொருட்டின்பாவையர்
வெள்ளைச்சசியடற்குஞ்சரத்தன்பார்பிடி
வள்ளிக்குயின்முதற்பெண்களைக்கொண்டாடிய
சல்லாபா

வல்லொப்பெனவிசைக்குந்தனத்தின்பால்சிறி
துள்ளிற்கொளுமவர்க்கிந்திரர்க்குந்தேடரும்
வள்ளுற்றிடவளிக்குந்துணர்க்கொம்பேமலி
கள்ளாறே

வள்வட்டொணிகுழைக்கின்றவற்றின்றீயுண
வள்ளிக்களுமரக்குங்குடித்துண்பார்களை
வைமுத்தலையயிற்கொண்டுகுத்துந்தோளணி
கொள்வாளே

மைதுய்த்திடுபுனற்றண்கடற்பைந்தானைகொள்
செவ்விப்புவிவிளக்கஞ்செயற்கென்றேயதி
வல்லைப்பொழுதினிற்சஞ்சரிக்குஞ்சூரியர்
புல்சோதீ

வள்ளைக்கொடியும்வெட்குஞ்செவிப்பெண்கோகில
நல்கற்றலைமகற்றந்திடற்கென்றேதொழ
மல்லற்றளைமுகக்குந்தலத்தன்போடெளி
செல்வோனே

வர்மத்தகுவர்குப்பங்கசக்குந்தோளுறு
கொர்வத்தநுமனுக்கன்றெழுத்துஞ்சேர்சொலும்
வைகெப்பொருளுமற்றுங்கவிப்பண்பியாவையும்
விள்வோனே

வள்ளக்கமலபுட்பம்புளிக்கொம்பாரிலை
யொவ்வத்திகழ்பவற்றுங்களிப்புண்டாகிட
வைகற்பொழுதினித்தங்கிழக்கின்பாலெழும்
வெய்யோனே, (ஜஹ)

மையச்சமரசப்பண்பளிக்குந்தாரக
மைதிப்படிசொலிச்சிந்தையிற்கொண்டோர்குலம்
வௌவற்குரம்விளைக்குங்களிற்றின்போதம
மைவோனே

வள்ளற்பிரபலர்க்குங்குடிக்குங்கூழ்விடு
நொய்மைக்குடிகளுக்கும்பனைத்துண்டாகிய
வைகட்குமதுரச்செங்கவித்தண்டேன்விட
வைதாகா

வைதிட்டவனொருத்தன்றனக்கங்கேயவ
னையற்கெதிர்பணப்பொன்கொடுக்குஞ்சீர்சொல்வண்
மைதுற்றிடுமெனக்குங்குறிப்பொன்றோதிய
செவ்வாயா

மைமற்பொழுதையொக்குங்குறப்பெண்காதலி
னைவுற்றவனுவக்கும்படிக்கங்கேகிய
வள்கைத்துணையணைக்குஞ்சிறப்புங்காணுமோர்
கைமாவே

வைவைச்சுதனுமற்றுங்கெடுக்குந்தேவர்கள்
பல்பற்பலருநற்பண்பிசைக்குந்தேவரு
மல்கெப்பதியினிற்றங்குயிர்க்குந்தாயைநி
கர்வோனே

மல்லிட்டிகலறுக்குந்தலைச்செங்கோலினர்
நெய்யிற்பிசறுதுய்ப்புங்கசத்தன்பானுடை
மல்லைப்பவிருசிக்கின்றவர்க்கொன்றாகிமி
ளிர்வானே

வள்ளைக்களகுமுற்றுங்களிக்குஞ்சீர்பொலி
நெல்லைப்பதியினிற்செந்திலிற்செம்பாறதில்
வையைக்கரையினிற்குன்றினத்தின்பானுவல்
பல்வாறு

மைமைக்குடிலைவெப்பங்கடக்குஞ்சிலர்க
ழல்பட்டுதிர்பொடிக்கன்பளித்தைந்தேயெனு
மையற்பிணியொழிக்குந்திருக்கண்கோடிகொள்
வல்லோனே.(உஅ)

தய்யதன்னதாத்ததாந்த தத்ததந்ததானதன
தய்யதன்னதாத்ததாந்த தத்ததந்ததானதன
தய்யதன்னதாத்ததாந்த தத்ததந்ததானதன—தனதான.

வல்லையன்னவாக்கம்வாய்ந்தடுத்தகொங்கைமாதர்பகர்
சொல்லையுண்மையாக்கொண்மாந்தரைக்கலந்துபாரின்மிசை
வைகுமென்னைவேற்கைவேந்தனுக்கியைந்தசாருவெனு
மவனாரோ

வள்ளிமின்னொர்பாற்குலாந்திருப்பிறங்கவேபலபல்
புள்ளிமஞ்ஞைமேற்கொடாண்டுதித்தவன்றுதாழுமெனுண்
மல்குமின்னறீர்க்குமாண்புரைக்கையின்றிவேடமிது
வெனலாரோ

வையமெண்ணிருஞ்சிதோய்ந்தராற்றவென்றுநீமைநனி
செய்யுமவன்மைநீட்டும்வேந்தரைத்தடிந்துகாருணிய
வள்ளலென்னொர்கீர்த்திதாங்கிடத்துணிந்துபாடுநசை
தரலாரோ

வர்மமன்னுதூர்த்தவீம்பரைத்தொடர்ந்துபோயவர்கள்
செய்கைநன்மையாச்சொல்பாழ்ஞ்சொல்கற்றலைந்தபாவலரை
வைய்யும்வண்மையேற்றுமீண்டுதட்டழிந்துவாடியழ
விடலாரோ

வள்வளென்னுநாய்ப்பொலாங்குமிக்கடைந்தசாரணரை
வெல்வதெண்ணியாற்றலோங்கொருத்தனன்றுவீசுமிதழ
வையையென்னுமாற்றினீந்திடச்செய்துங்குலாவுபுக
ழினனாரோ

மையின்வன்னமேய்த்தகூந்தல்பற்றியன்றிராசசபை
யுள்ளொராபெண்ணையீர்த்துநோம்படிக்கணிந்ததோர்கலைக
வாதலெண்ணிநூற்றின்மேம்படத்தருங்குணலமரு
வியதாரோ

மையல்வெம்மைமாற்றுசாந்தசித்திதங்குஞானமுறு
மௌவைசொன்னபாட்டின்வாஞ்சைமுற்றியன்றுவீடுதவும்
வல்லவென்னவாழ்த்திநோந்தபத்தரின்பமாரவருள்
பவனாரோ

வள்ளமென்னவாய்த்தபூண்டனத்துமங்கைமார்கடம
தையெனம்மைகாட்சிவேண்டிநிற்குமன்பராவலைய
வர்களெண்ணமேற்கொடீந்தளிக்குநண்புநீடுமதி
சயனாரோ, (ஊ)

வள்ளிதுன்னுபூட்கைபோன்றெழுச்சிகொண்டிடாதமுலை
கள்கொள்கன்னிவேட்குஞான்றுகட்கிசைந்தகேள்வனென
வல்லைநண்ணியேற்குநோன்பினர்க்கிடுங்கைதோய்மகநல்
கிடலாரோ

வைதிகம்விடார்க்குஞாங்கர்வைத்ததிண்கையாலளவில்
வெய்யர்தம்மைமாய்த்தபாங்கினர்க்குமென்றுமோவரிய
வள்செய்தன்னைபோற்பண்மாண்பளித்துநின்றுகாவல்புரி
கிறதாரோ

வைபவம்வராக்குழாங்கள்பத்தரொன்றுகூறிடினு
மையமின்மையாக்கைசேர்ந்தடித்தொழும்பதேசெய்பவர்
வல்லியன்னபாழ்த்ததீங்கனைத்தும்விண்டுபோகநினை
குதலாமோ

மல்லைதன்னிலேற்றவூண்புசித்துவந்துதாரகம
துள்ளிமுன்னைநாட்கொடாண்டுவிட்டவங்கமானதுநு
வல்கைமன்னுமூர்த்தராஞ்சிலர்க்குளென்றுநாடகமி
டுவதா

மல்லன்மண்முணுச்சொல்பாஞ்சவித்துறழ்ந்தபூதவகை
செய்துநன்மைநாட்டியாண்டசித்தனென்றுநாடியருள்
வல்லபம்விள்வார்க்குவேண்டுபெற்பல்பண்டமீயுமெணில்
கரணோ

வைரமன்னனுட்டின்மான்களொத்தியங்குபாவையர்கள்
குய்யமுன்னியாட்டைவேம்புலைத்தனங்களோடிசைவின்
மைதுனம்விராய்க்கொடுங்குவக்கும்வம்பர்நூலும்விழை
குநணோ

வைகன்முன்னர்தூக்கநீங்கியச்சமின்றிநீர்முழுகி
வெய்யவன்முனீர்க்கையேந்துபெற்றிவிண்டவேதமுடன்
மல்லர்தன்மைதீர்ப்பதாம்பல்பற்பல்விஞ்சைநூலுநவின்
முதலாரோ

வள்ளுரம்வெஃகேக்கமார்ந்ததுட்டர்தங்களாள்கையிடை
யையர்முன்னலோர்க்கெலாந்திடுக்கமிஞ்சுபாவமெனு
மைமையுன்னல்காட்டிநாண்கொள்பெட்புமின்றியேநிறையு
மிறையாரோ, (வ)

கல்லைமண்ணைநோக்கியான்றபத்திகொண்டுபேணுநரு
முய்யும்வண்ணமாட்கொடாங்கவிர்ச்சிதந்துளேபருகு
கள்ளமின்மெய்மோட்சவேந்துனைத்தவிர்ந்துவேறொருவ
னுளனேயோ

கல்விபொன்னிலூக்கமோங்கிமுத்தியின்பமானதனை
யெள்ளுபுன்மையோர்க்கடாங்கவிழ்த்ததந்திமீதுபொரு
கர்வமன்னுமாக்குலாங்தரத்தில்வென்றபேறுதவ
விசையாயோ

கைதைமன்னுபூக்கொடேண்பொரத்திரண்டதோண்மதன
னெய்யமம்மர்கோத்துளேங்கிமுத்தணிந்தமாதர்முலை
கள்ளகண்ணுதீக்குணந்தகர்த்தொடர்ந்துவாழுமகிழ்
வருளாயோ

கைகைசொன்னவார்த்தைதீங்கெனத்தெரிந்துமாசுதவிர்
வில்கொண்மன்னர்போற்றுதோன்றலைச்செறிந்தகானில்விடு
கைமைதுன்னினூற்குநேர்ந்திறக்கவுஞ்செய்பாசவிருள்
களையாயோ

கல்லல்வெம்மைமூர்க்கர்கூண்டெதிர்த்துவந்துபேசொலியு
மையலென்னுநீத்தமாழ்ந்தவற்பர்வம்புநான்முனைகொள்
கள்ளியன்னமாக்கள்பாஙகிரக்கவுஞ்செய்பாழ்மிடியு
மொருவாயோ

கையவெண்மைமாக்கொள்வான்றலத்தைநம்பிவேள்விபல
செய்துதின்னெணுப்பலூன்றினத்துணிந்தபேருமது
கர்மமென்னலூற்சொலோர்ந்துயிர்க்கிரங்குமாறுசெய
லுதவாயோ

கள்ளையுண்ணலாற்படாந்தவிர்த்துருண்டநீசர்பொரு
ணல்கினும்வெறுப்பொய்வாஞ்சையிற்புணர்ந்துபோகவிடு
கல்வியின்னனூர்க்குமேங்குமற்பருஞ்சதாவிகழல்
கழியாதோ

கௌவையெண்ணிலாற்றினேர்ந்திடத்தயங்குமானிடர்க
ணல்லவிண்ணின்வாழ்க்கையாஞ்சுரக்கணங்களோடுமகிழ்
கைசெய்மின்னல்போற்குலாம்படைத்திறங்கொள்வீரர்புகழ்
கிலவாதோ,(வஹு)

கைரவம்விள்சீர்க்கைகாண்டகச்சிறந்தபாரியொடு
வெள்ளைவன்னமாட்டிலூர்ந்தெனக்குள்வந்துபேசியது
கைலைமன்னலாற்பிறுங்கொருத்தருங்குலாவும்வலி
யுடையாரோ

கைதவன்முறுற்றலாங்கிழிப்பணங்கொய்தோர்பனவன்
மெய்மைகண்ணிகாட்டுமாந்தர்முற்றறிந்துபேசவருள்
கள்வனென்னுமாற்கைதாங்கெழுத்தமைந்தவோலைமுறி
பெறல்வீணே

கௌவியம்விடார்க்கொராம்பலொத்துமுன்செய்பூசைகொடு
வௌவுகன்மமேற்றமாஞ்செயற்செயுங்கணேசனொரு
கல்லெனுண்மைவார்த்தையாங்குரைத்துமஞ்சியேமுறுதன்
முறைதானே

கையர்துன்னுபாக்கியாந்தகக்குணங்கொள்வார்களது
செய்யவண்ணம்வேட்டசேந்தன்வெற்பினங்கடோறுளகு
கைகடம்பிலேத்துஞான்றுரைத்திடுமெபல்வாறுமவ
மெனலாமோ

கர்கரொன்னராத்தினேய்ந்தசெப்பிரும்பைமூலிகையில்
வெள்ளிபொன்னதாக்கவேன்றெருப்புடங்குவாலுலைகள்
கல்வமம்மிநீர்ச்சுணும்புமுற்சொல்பண்டநேடுநரு
மிகழாதே

கள்ளியுண்ணவூட்டுபொழ்ந்தனத்தமைந்தவாலநுகர்
மையயன்னமூர்த்திபோன்றெதிர்த்தவண்டர்வேர்கடிது
கல்லுதன்மைவாய்க்கவேண்டிநித்தமுஞ்செய்மாதவம
துலையாதே

கௌரிகிண்ணமூற்றுமீர்ங்கடத்தனஞ்செய்பால்கொடுபல்
சைநர்தம்மைமாய்த்தவேந்தனுக்குமண்டர்தாமும்வெருள்
கௌசிகன்னனார்க்குமாம்புகழ்ச்சிகொண்டுவீடுமரு
விடுமாறே

கைதவம்வழார்க்குமீண்டெறித்துவந்துபோமிரவி
மையமெண்ணுநாட்டமோர்ந்தெனக்குமுன்குலாவியிருள்
கௌவுபுன்மைமாற்றியாண்டுசுத்தவிஞ்சைமூலமதை
மொழிவாயே, (௭)

அல்லைமுன்னென்மாற்றமார்ந்திருக்குமந்தநூல்களுணர்
பொய்யுமவண்ணமார்த்தநீஞ்சொலுறநிலங்குபாடலெதி
ரஃகுகிண்ணவார்த்தைவேமபெனச்சொல்வண்டர்தாமுமறி
வரியானே

யையமின்மகோத்தியாஞ்சமுத்திரங்கள்கோடியொடு
மைனமன்னநாற்றமாய்ந்துமிக்ககந்தமேயகொடி
யவ்வண்விண்ணுளார்க்குமேமபடத்தருங்குமாரனுரை
புனைதேவே

யல்குகன்மநூற்குமாண்புரைத்திருந்ததோர்பனவ
னெய்துதிண்ணமாற்றியாண்டவற்புணர்ந்தமாதையும்வெ
லையனன்னபேர்க்கெலாஞ்சடக்குறும்புமாறுநிலை
தருகோவே

யௌவைபின்வலார்க்கெலாங்கடைப்பிறந்தநாவலவன்
வெள்ளமன்ன நூற்குழாந்தலைக்கணிந்தபூணெனமு
னவ்வின்வண்மைகாட்டிமாண்குறட்பகர்ந்தநாளொரொலி
யிடுவானே

யையமென்னவோட்டையேந்துமுத்தர்தங்கள்வேடமொடு
கையினன்னநீட்டுமோன்கள்சித்தமுங்கொளாமகிழு
மைமுகன்விராட்டுவேங்தெனத்துணிந்துநாடுமடி
யவர்பாகா

வல்லமண்ணின்மேற்செய்வேந்தருக்குமம்புமாரிபெய்மு
றைமைபன்னுமாட்சிதோய்ந்துவப்புறுந்துரோணன்மனை
யல்குல்கண்ணுறீசசிராங்ககற்கியென்றோர்சேயுதவ
முனியானு

யௌவியம்விராய்ப்பொயாந்தவத்தினின்றதானவரு
முள்ளமன்னுமூக்கமார்ந்திடச்செயுஞ்சதாசிவந
மைதிகம்விழாக்கொள்சாமபசித்தர்தம்பிரானெனினுண்
மகிழ்வோனே

யள்ளன்மும்மைநீர்க்குண்மாய்ந்தவற்றடிந்தமாயனொரு
கிள்ளையன்னளாய்க்கையேந்துசட்டுவங்கொணூளிலட
லையனென்னுமூாத்திதோன்றிடப்புணர்ந்ததோள்வரிசை
யுடையானே, (௭௫)

ஐமையும்வில்வாய்ப்புமார்ந்தசக்கரங்கொடோர்பகலி
லெல்லவன்மைபோத்தியாஙகிருட்டவுஞ்செய்தேயமர
ைமகன்மெய்நீக்கண்வீழ்நதிறக்கையின்றிவாழல்செயு
நெடுமாலே

யல்கொளெண்ணிலூர்க்கணுன்றொடுத்தணிந்தபாடல்கொடு
வில்லியொன்னலார்க்கொல்வான்களத்திவர்ந்ததேர்கடவி
யல்புதுன்னுசாட்டை தாங்கிநிற்குமங்கொராசைமொழி
பகர்வோனே

யையர்விண்ணின்மெற்செல்பூம்புளிக்கணென்றும்வாழுமொரு
மெய்யனென்னைவேட்டொர்ஞான்றெனக்குள்வந்துநீறதனை
யள்ளிநன்மைசாற்றியீந்ததற்கியைந்தவாறுசெய
லறிவோனே

யல்லிமன்னுபூக்கண்வாழ்ந்தபுத்திரன்றனுன்மறைகள்
சொல்லுமுண்மைமார்க்கமாஞ்சடத்துமொன்றுமேலவனா
யையையென்னுமேச்சின்மூண்டதுட்டர்தங்குரூரமற
முனிவோனே

யள்ளூவெண்மைபூத்துநீண்டறுத்ததிங்கள்போலுமெழின்
மல்குதன்னகோட்டையாங்கொடித்தெறிந்துதானவா
யர்தன்மன்னமூப்பனுங்கயற்றடிந்தவானைமுக
முதல்வோனே

யல்லமென்னல்சாப்பிடேம்புளிக்குமென்றெனுவலிது
விள்ளலன்னவார்த்தைதாங்தொடுத்தியம்புவாருமெழி
லல்லியம்மைகேற்றமார்ந்தசித்தனும்பராவவருள்
கணநாதா

வள்ளைதன்னுமாட்டிலேலென்றபித்தன்மண்செய்தேர்முறிய
மெல்லவுன்னுகீர்த்திபூண்டதைத்தெரிந்துகூறிமிக
வவ்வியுண்ணவேற்றதீஞ்சுவைப்பல்பண்டமீருநனை
விழைவோனே

யள்ளூமுன்னர்காற்றையீன்றிடச்சகங்களானவித
நள்ளூதன்மையோர்க்குளூன்றிடத்தருந்தபாதயுக
வைவணம்வெள்கேற்றமாஞ்சிவப்பசந்திதோறுமினி
தமர்வானே, (௩)

எல்லையின்மைகாட்டியான்சிறப்பனென்றமூடமதி
கெல்லியொண்மையாக்கியாண்டலேப்புளொன்றுகேதனமு
மெஃகமும்விண்வாய்ச்செல்வேண்டணிப்புளூம்பராவவிடு
குருநாதா

வில்லையென்னுமாற்றமீண்டுரைக்கவொஞ்சுசீர்கொண்முதல்
வள்ளலன்னமாட்சிதோய்ந்திடப்பெறுங்கௌமாரர்களை
யெள்ளல்சொன்னவாய்க்குழாம்புழுச்சொரிந்துநாறல்செயு
முருகோனே

யில்லின்மன்னினூர்க்கும்வான்பதத்தையும்பெருமலிகழ்
தூய்யதன்மையோர்க்கும்வேண்டன்முற்றிடுநகுகாவமா
ரெய்துமின்னன்மாற்றியாண்டவெற்பினங்கணேர்பணிரு
புயவேளே

யெய்யையன்னதூர்த்தர்தாங்தொடுத்திடுஞ்சில்பாடலையும்
வையநண்ணியேத்தவேய்ந்திடத்துணிந்தவாபறவை
யெய்யும்வின்மகார்க்குமான்கொடுத்தபெண்பொனூர்மகளோ
டணைமார்பா

வெவ்வமன்னுமேக்கமார்ந்திறைச்சியென்புதோலுதிர
வெள்ளமுண்ணுநாக்கொள்வான்றுதித்திரந்ததாலொர்குரு
வெல்லிவன்மைதீர்த்துவான்சசிக்கிணங்கவோர்குழையை
யெறிவாளே

யிய்யையன்னகாட்சிதோன்றிடக்குனிந்துதானைபொதி
செவ்விமின்னனார்க்குமென்றவர்ப்புணர்ந்துபோகமத
யில்லைகொண்மினார்க்குமாம்பொதுக்குணங்கொளாடல்பயில்
பெரியாளே

யில்லிகண்முனாய்த்தன்வாஞ்சைசற்றுமின்றியேகிடனு
மையலெண்ணமேற்கொள்பாங்கினிற்படும்பொலாவினையை
யில்லும்வண்மைகாட்டுகூர்ங்கடைக்கணொன்றுமூவகைய
வடிவானு

யிவ்விவென்னநோக்குமியாண்டுடைப்பல் பண்டமாயும்வள
ளையைகன்னிமூர்த்திவான்கறுப்பிவெண்பொன்மேனியின
னில்லனண்ணுமியாக்கைபோன்றுருக்கொளுஞ்சுபாவியெனில்
வெகுளாளே, ௯௰

எல்லைநண்ணுசீர்க்குழாங்களிப்படைந்துலாவவெதி
ரல்லைநண்ணுதீக்குழாந்தவிப்படைந்துபோய்மறைய
வெவ்வெவன்னமாச்சொல்பூந்துணர்க்குலம்பல்கோடிநக
வருசோதீ

யெஃகமின்னுசீர்க்கைநீண்டவச்சுதன்றனாதுகலை
வைகுகண்ணன்வேட்டஞான்றிரக்கமின்றியாடரவ
மெஃகிமன்னுதேர்க்கொள்வான்குறிப்புமங்குமாறுசிறி
திருள்வோனே

யெல்லோர்நென்னுண்மூக்கைநேர்ந்துமற்றபுங்கவாபெரிது
தெய்வமெண்ணுநாட்டமார்ந்திடச்செயுங்குணாலமக
வெள்ளின்வண்ணமாச்செய்தீந்துவக்குமங்கர்கோனையுநல்
கிசையோனே

யெல்வைதன்னையாக்கிவான்றனக்கியைந்ததீபமென
வொள்விடும்வியாத்தியாண்டகைத்திறங்கொள்வாய்வெளிறு
மெல்லவன்மெய்தேய்த்துமாந்திவிட்டிடுஞ்செயோயெனது
ளுறவோனே

யெவ்வனம்வராப்பெண்மாந்தளிர்ச்சுகந்தமேனியிள
முல்லையன்னதூப்பல்சார்ந்தெறித்ததொண்டையாசைகொடு
மெவ்வரும் விள்கீர்த்திசாய்ந்திடத்தயங்குவேனும்விழை
தருபேறே

யில்லிதுன்னினீர்க்கொள்பாண்டமொத்தநெஞ்சர்தேறரிய
தொல்லைவண்மைவாய்த்தவோங்கலிற்சிறந்தவேகபர
வில்லமண்ணொல்கோத்தெள்கார்ந்திடச்செய்கின்றவாறருள்செய்
தகையோனே

யெவ்வவெண்ணுவார்க்குமாங்கிசைக்குமந்தராதிபமெய்
பொய்சொன்முன்னை நூற்கெலாந்துணைச்செயும்பாரபரவெ
யில்செய்தண்ணிலாக்கண்வார்ந்திறப்பில்வென்றியீயுமமு
தூருவானு

யெஃகொடண்ணும்வாட்கொடூர்ந்திடற்கிசைந்திடாவடிவ
வல்லமன்முனைக்குலாங்குருத்துவங்கொள்வோர்களறி
வில்லைகண்ணலாய்ச்சுகாந்தரத்தமைந்துமியாவுமவல
கிழவோனே,(உக)

தனனதனதானதந்ததந்த தனனதனதானதந்ததந்த
தனனதனதானதந்ததந்த—தனனதனதானனு.

கிழவர்பொருளீயினுங்கனிந்த
மனமுடைமைபோலவஞ்சகஞ்செய்
கிளிமொழிமினையும்புணர்ந்து பிணிகள்பலதேடுவோர்

கிரிசைமணவாளனன்றொர்தொண்டன்
மகவரியவாடும்வம்பிகழ்ந்து
கிளர்கருணைமேயசிந்தைவிஞ்சை முனிவரையுமேசுவோர்

கிடுபிடிமலாரிபம்பைகொம்பு
முரசுதவில்பேரியுங்கறங்கு
கெருவமுறுசேனைவென்றிநம்பு மரசரையவாவுவோர்

கெருடன்வரைகேதனங்கொள்கொண்ட
லெனவுமதுமாமிசங்களுண்டு
கெடுமதிகபாதகம்பொருந்து நரையுநுவல்பாவலோர்

கெதியடையுமாறுகண்டுகொண்டு
மூயனுமுனிவோரினுஞ்சினஞ்செய்
கெசதுரகவாகனங்கொண்மொய்ம்ப ருயர்வெனவுணுவோர்

கெலிதருபல்பாடல்கொண்டெழுந்து
சரபமெனவேமுழங்குதெம்பர்
கிளவிநயமாதினன்குணர்ந்து மவருரிமைமேவிடார்

கிறிபடுபல்வாசகம்பகர்ந்து
முறைதவறிமானிடம்புகுந்த
கிளையினைலாம்வருந்திவெம்பி யழுதல்புரிபான்மையோர்

கிடைகொள்சிறுபாயணிந்தியங்கு
மயிலிற்கின்மேன்மைகுன்றவுஞ்செய்
கிறசமணர்நூல்வியந்துகும்பன் முதலினர்தொனூல்கொளார்,

கிருதகுளபாயசங்களுண்டு
முதிரணமுனெனும்பருந்து
கிலமதிகெடாதுறுங்குணுங்க ரொடுபழகுதாழ்மையோர்

கிருபுணர்சகாயமொன்றுநம்பி
யுடனுடன்விடாதலைந்தலைந்து
கிசுகிசெனராசியங்கள்விண்டு மிகமறுகுநீர்மையோர்

கிருமையமாவிளங்குமுன்றன்
மகிமையறியாதுளந்தளர்ந்து
கிரகபலமேசிறந்ததென்று துணியுநிலைமாறிடார்

கிறுகிறெனவேசிரஞ்சுழன்ற
லகிரிதருதீயபண்டமுண்டு
கிடுகிடெனவூரின்மைந்தரஞ்ச வுலவமனநாணுறார்

கிருடியொடுவாணிபந்தொடர்ந்து
பொருள்பெரிதுதேடியொண்சதங்கை
கிலுகிலெனநேருமைந்தர்பெண்டு முதலினர்கள்சீர்செய்வோர்

கெழுவுகுடைநீழலொன்றுகொண்ட
வரசர்பலர்மாய்தல்கண்டுமெங்கள்
கிரையமிதெனுவிளம்பிமிண்டு மடமைசெறிவாகினோர்

கிணுகிணெனவேமுனங்கலன்றி
யுருவுணர்தியானமின்றிநின்று
கிசிலுறுபுளாவருந்துபண்பர் முதலியபொலார்பலோர்

கிளைவைசெறிகானிடந்திரிந்த
மிருகமனையார்களென்றறிந்து
கிரணமலிபானுதிங்கண்முன்பு தொழுதெழுதலீனமோ,வ

பழமறைபலாயிரம்பகர்ந்த
பெருமைபெறுநாடகம்புரிந்த
பரமசிவமேயெனுஞ்சொல்விண்டு கருதுவதுமூடமோ

பவளநிகர்வாய்திறந்தடர்ந்த
வுலகினமெலாமயின்றுமிழ்ந்த
பசியமுகில்பாதபங்கயங்க ணினைவதுபொயாகுமோ

படர்சடைநிலாவுகுன்றமென்றொ
ரரிமிசையுலாவுதுங்கநங்கை
பகர்மொழிபொயாகுமென்றுளஞ்சு மயர்வும்வரலாகுமோ

பலபயறுதோசைசெங்கரும்பு
வடைசுகியன்மோதகங்களுண்ட
பகடொருகனுவில்வந்துதந்த வரமுமழிவாகுமோ
பரணிலுறுகோகிலஞ்சினந்த
பொழுதடிபராவியும்புணர்ந்த
பரிசுறுவிசாகனன்றுசொந்த வடிமையெனன்மோசமோ
பசுவிணமொநாளுமுண்டகுண்டர்
குடிகெடுதலேவிழைந்துதொண்டர்
பதமலரிலேயணைந்துதிர்ந்த பொடியணிதலோர்கியோ
பனிமலர்களாயவம்பொரைந்து
கொளுமதனனுன்முகன்சமன்செய்
பகையொழியநாடுகின்றநெஞ்சுமெளிதெனவிள்வாய்கொலோ
படிககனபாதலங்கள்கொண்ட
நரரமரர்நாகர்கண்டியம்பு
பவிசுதவினுலுன்வென்றிகுன்றி யறமுநிலைபெருமோ, ()

பறிதலையுளார்கணஞ்செறிந்த
கழுநிரையிலேறவென்றுநின்ற
பதிகநெடுமாரிமுன்சொரிந்து சிவிகையிவர்பாலனே
பகவசநிதானமுஞ்சிறந்த
வடியவர்மடாலயங்களுஞ்சு
பலமுறவனேகர்பொன்கவர்ந்து கொலைசெய்பரகாலனே
பரவையினதாழமும்பொலிந்த
ககனமதனீளமுந்தெரிந்து
பழுதறுவிநாயகன்பதங்க ளணியுமொருபூதமோ
பளபளபளீரென்மின்புரைந்த
கதிரயில்விடாதசெங்கரன்சொல்
பதியுமிதயாரவிந்தகும்ப னனையகவுமாரனே
பரமதமெலாமுனிந்துவென்று
தமதுமதமாறுமுன்புரந்து
பரைபதசரோருகம்புகுந்த சமரசகுணாலனே
பவனனதுமாதவந்திரண்டு
ரகுபதிசகாயனென்றவிர்ந்து
பரிதிபகர்நூனலந்தெரிந்த பெருமைகொளும்வீரனே

பயிலுமிவரியாவரும்புகுந்த
வொருவடிவனேவெனுஞ்சொல்கொண்டு
பவவுததியேழையுங்கடந்து னிடைவதியுமாதினே
பதுமன்முதலோருநன்கிறைஞ்சு
பிரணவசொரூபமொன்றிவந்து
பகலனையஞானவிஞ்சைதந்தெ னினைவில்விளையாடுவாய்,

தழலவனுநாணவெம்பிடும்பல்
கிரணமுடனூழியொன்றிசைந்த
சகடமிசையேறிவிண்பிறங்க நிதமும்வருசோதியே
தமநியமின்வேதமங்கையெண்கண்
விதிமுதலினோரிருநதலர்ந்த
சலசமுதலாநெருஞ்சியென்ற புதல்வனைகொள்பீடுளாய்
சமுசயமும்வீரமுங்கெடுமபு
மிகழ்தருபொருமையுஞ்சுமந்து
தழைமதசமூகமுந்துணிந்து பரவநிகழ்பானுவே
தமியனெடுநாள்வணங்கிநின்றென்
மனவிழைவெலாமொழிந்துநொந்து
தளர்வதறியாரில்வநதுசென்று வருபொருவில்சூரியா
சடைமுடியின்மீதிருந்ததிங்கள்
வழிதலெனநீறணிநதிசைநத
தவளவிடையேறிவநதுதொண்டர் கருதும்வரமீகுவாய்
தரணிமதிதீயெனுங்கணொன்றும்
வதனமலராறுடனகிருந்து
தனையனையரூபமொன்றுகந்தன் வரவருண்மயேசுரா
சகளசிவயோகமுஞ்சிறந்த
வகளபரஞானமுமபுனைந்த
சரணமலரோரிரண்டுகொண்டு வெளிவளர்சதாசிவா
சடபரதனேயெனுந்திறங்கொள்
கருணையுடையானைவம்பரொன்ற
தடிமுரடர்வேர்களைநதவிர்நத மழுவணிபுயாசலா ,(௯௰)

தமிழ்கொடுபராவுமந்தணன்றன்
மொழிதவறிடாமலன்றுவந்து
தகதகதகாயமென்றிலங்கொா குழையெறியுமாயியே

தடவரையெலாம்வணங்கநின்ற
விமயமலைமாதவம்பொலிந்து
தனையளொருவாயும்வந்துயர்ந்த பசியகவுமாரியே
சரதமொருகாணியுந்தவிர்ந்து
புவிமுழுதும்வாடும்வம்புகொண்டு
தருவர்நிகர்வார்நிணம்பொதிந்து மொழுகுதிரிசூலியே
சகலருணராநலந்தெரிந்த
பெரியவர்கள்சீரிகழ்ந்தெரிந்த
தமருணர்செநீர்நிறைநதலம்பு கரதலகபாலியே
தளவநகைமாதர்கொங்கையின்ப
முடனுறிகடோறுறுஞ்செறிநத
தயிர்கவர்தல்கூறிஞுங்குளிர்ந்து கருணைசெயுமாதவா
தடநடுவிலேகிடந்திரைந்த
பணிமுதுகிலேறியன்றுநின்று
தமரவொலாமறிந்திறைஞ்ச வொருநடனமாடினாய்
தசவடிவுளாளெனுஞ்சொல்விண்டு
பலர்பரவஞாயநன்குணர்ந்த
தவரறிபலாயிரஞ்சடங்கொள் பெருமையுறுகேசவா
தரையிடுவானளந்தவென்றி
நனிகருதுவாருடன்கலநது
தருமமுயல்வாரினம்புகுந்த பரமபதநாயகா, (௬)

அழகியமதாணிமுன்சொலும்பல்
பணிகளுமராவினங்களுங்கொ
டணிதருவிணைதமொன்றநின்ற பவளமலைபோலுளா
யகிலமடமாதரும்பணிந்து
பரவுமவையாளாயன்றுவெண்பொ
னசலமிசையேறவுஞ்செயுங்கை யுடையகணநாதனே
யலகறும்விகாதமுங்களைந்து
நலமுழுதுமீதியென்றிறைஞ்சி
யறுகுசொரிவாருடன்கலந்து நிகழுறுசொரூபனே
யரியகலியாணமொன்றுபந்த
ரினுமகளிர்நாவிழந்துவெம்பு
மவணிலுமுருவிளங்குதந்தி வதனமுறுமாதியே

யசுரர்குலவேர்களைந்துசெம்பொ
னகரிலுறுவார்விலங்கும்விண்ட
வயிலணிகுகாசிகண்டியொன்றி உலகைவலமாகினு
யபரிதநூல்களுந்தெரிந்த
புலவனெனநாமமொன்றுகொண்டெ
னளவினுமகாதவஞ்சகஞ்செய் குமரகுருதேசிகா
வடிமைகொளேனுமொழிந்துநொந்த
வெனதுகனவூடுவந்துபண்டை
யருணகிரிநாதனென்றியமப வொருசிறிதுநாணிலா
யறல்கருதியோரபெருங்கருங்க
லிடைகிணறிநாள்செய்கின்றபண்பி
னதிசயமவிஞுவியுநதயங்க விடுகபடவேடுவா,(௯௯)

அருமறையொடாகமங்களுஞ்சொ
லிடவுலகமியாவையுமபொதிந்த
வறுசமயபேதமுஙகடநத பொதுநிலையின்மேவினு
யமணாமுதலோாகளுநதுணிந்து
தமதுபொருளாகுமென்பதன்றி
யழிதசையெலாமருநதுகின்ற பிடகருமவாவுவா
யவிர்சமயகோடியன்றியிநத
வுலகிலினிமேலொர்வஞ்சநெஞ்ச
னறையுமதசாரமுமபொருநதி யதினுமுறுமேகனே
யருவிபலவோலிடுஙகுறிஞ்சி
முதலியனவாநிலஙகளோநதி
னதிவிதவிழாவினுஙகலநது மகிழ்வுறுகுணலயா
யவனவளதாகியன்றிநின்ற
நிலையுணருமோனவிஞ்சைமைநத
ரறிவினறிவாகியங்குமின்றி யகலுறுமதீதமே
யசரசரகோடிகொண்டிருண்ட
பிரகிருதிமூலமொன்றையன்றி
யணுவுமசையாதெனுநதொழுமபர் தமையகலுமாறிலா
யதனெதிரதாய்விளங்குகின்ற
பெருமையுமுளாய்சுகந்தகந்த
மனேயபரமேயகண்டகண்ட மௌனிகழ்சுபாவமே
யபிநயமிலூமைகண்டுவந்த
கனவினிணையேபிறந்திறந்த
வவதிமுடிவேதொடர்ந்தருந்து திருவருள்விலாசமே.௱

ஒலியலந்தாதிமுற்றிற்று.

